உ
சிவமயம்

# ஸ்ரீ கற்பக விநாயகர் வேதாகம வித்யாலயம் வெள்ளி விழா மலர்

## 1980-2005





## பிள்ளையார்பட்டி

சிவகெங்கை மாவட்டம், தமிழ்நாடு.

உ
சிவமயம்

# ஸ்ரீ கற்பக விநாயகர் வேதாகம வித்யாலயம்
# பிள்ளையார்பட்டி

# வெள்ளி விழா மலர்

1980–2005 ஜனவரி



**ஸ்ரீ கற்பக விநாயகர் வேதாகம வித்யாலயம்**
**பிள்ளையார்பட்டி**
சிவகெங்கை மாவட்டம், தமிழ்நாடு

உ



# மலர்க்குழு

சி. மெ. பழ. மெ. சொ. மெய்யப்ப செட்டியார், காரைக்குடி
மு. நா. ந. நா. நா. நல்லப்ப செட்டியார், வலையபட்டி
நா. ரா. சித. நா. நா. நாச்சியப்ப செட்டியார், ஆ. முத்துபட்டணம்
ப. சு. ராம. அண. இராமசாமி, காரைக்குடி
தெ. சொக்கலிங்கம், பி. அழகாபுரி
செல்லகணபதி, கண்டனூர்



திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும், பீடும் பெருக்கும்–உருவாக்கும்
ஆதலில் வானோரும் ஆனை முகத்தானைக்
காதலால் கூப்புவார்தம் கை.

30-1



# பொருளடக்கம்

30-1

உ

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# முன்னுரை

"எங்கெங்கு காணினும் கற்பக மூர்த்தியடா!
ஏழ்கடல் வைப்பினும் கற்பக மூர்த்தியடா!

- என்று போற்றுமாறு கற்பக மூர்த்தி எல்லா இடங்களிலும் எழுந்தருளி அருள் பொழிகிறார். யாண்டும் வேண்டி யார்க்கு வேண்டியாங்குக் காட்சி தந்து கணேசப் பெருமான் திகழ்வது மகிழ்ச்சி தருவதாகும். பிள்ளையார் பட்டி கற்பக விநாயகர் நகரத்தார்கள் நினைப்பனவற்றை அள்ளிக் கொடுப்பதில் அவருக்கு நிகர் அவரே! அவரின் கருணையைக் கவியரசர் கண்ணதாசன்,

"அற்புதக் கீர்த்தி வேண்டின்
ஆனந்த வாழ்க்கை வேண்டின்
நற்பொருள் குவிதல் வேண்டின்
நலமெலாம் பெருக வேண்டின்
கற்பக மூர்த்தி தெய்வக்
களஞ்சியத் திருக்கை சென்று
பொற்பதம் பணிந்து பாரீர்;
பொய்யில்லை கண்ட உண்மை!"

- என்று பாடியபாடல் கற்பகத் தெய்வத்தின் பெருமையை உணர்த்தும். அத்தகைய கற்பகமூர்த்தி பெயரால் அமைந்த வேதாகமக் கல்லூரியின் வெள்ளி விழா 07.01.2005 அன்று முதல் 09.01.2005 வரை சிறப்புற நிகழ்கிறது. இந்த நன்னாளை அறிவுலகம் என்றும் போற்றும் வகையில் அறிவார்ந்த கட்டுரையைத் தொகுத்துக் கவினுறு நூலாக - வெள்ளி விழா - மலராக ஓரிய நூல் வெளிவருகிறது. இந்நூலில் வேதம், ஆகமம், திருமுறை, சாத்திரம், தோத்திரம், சிற்பம், பரதம், மருத்துவம், இசை போன்ற பல்துறைக் கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன.

இந்நூலிலுள்ள கட்டுரைகளை எழுதி வழங்கிய அறிஞர்கள் அனைவரும் ஆன்றவிந்தடங்கிய சான்றோர் கள்: அவர்கள் விவரம்

அறிஞர் தத்புருஷ தேசிகர்
பேராசிரியர் முனைவர் கு. சுந்தரமூர்த்தி
டாக்டர் இரா. கலைக்கோவன்
முனைவர் இரா. நளினி
கலைமாமணி முனைவர் மா. சு. சரளா
திரு. பாலாம்பிகைதாசன்
அறிஞர் முனைவர் ஆ. ஆனந்தராசன்
செல்வி தி. ரமா
சிவஸ்ரீ பி. ஸ்ரீதர்சிவாசாரியார்
டாக்டர் தே. சொக்கலிங்கம்
திரு. ப. கோலப்பன்

- ஆகிய அனைவர்க்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம். நல்லூர்க் கந்தசுவாமி திருக்கோயில் மகாகும்பாபிஷேக விழாமலர், கணபதி களஞ்சியம், இதோ இந்து சமயம் என்ற மூன்று நூல்களிலிருந்து மூன்று கட்டுரைகள் எடுக்கப்பெற்றுள்ளன; அன்புடன் உதவிய அப்பெரு மக்களுக்கும் நன்றி உரித்தாகும். 12.12.2004 அன்று தினமணி ஞாயிறு வாரமலரில் வெளிவந்தது 'தவில் எஞ்சினியர்' என்ற கட்டுரை. அதனைத் 'தவில் புதுமை' என்று தலைப்பிட்டு இத்தொகுப்பில் இணைத் துள்ளோம். இக்கட்டுரையை வெளியிட்டமைக்கும் வெளியிட உதவிய மைக்கும் தினமணிக்கு நன்றி தெரிவித்துக் கொள்ளுகி றோம். இவ்வேதாகம வித்யாலயம் சிறப்புற நடைபெறத் துணைநின்ற அனைவர்க்கும் நன்றி.

ஒரு நூல் சிறப்புற வெளிவர அந்நூலினை அச்சிடு வோரும் கட்டமைப்போரும் (பைண்டிங்) செய்வோருமே பொறுப்பாளர்; நூலின் உள்ளடக்கம் மிகச் சிறந்ததாக இருந்தாலும் அச்சிடும் முறையில் அவற்றின் பெருமை குலைந்து போக முடியும்; நூலைப் படிக்கவும், பார்க்கவும், வாங்கவும் தூண்டுவது நூலாக்கப்பணியே! இவ்வெள்ளி விழா மலரினை நேர்த்தியாகவும் அழகாகவும் எழுத்துக் கோத்து கவர்ச்சியாக வடிவமைத்து உதவியவர்கள் பூச்சரம் நிறுவனத்தார் 'பூச்சரம் சகோதரர்கள்' அனைவரும் மிகக் குறைந்த சில நாள்களில் இப்பணியை வடிவமைத் துச் செய்து தந்த திறமைக்கு ஈடு இணையில்லை. அந்நிறுவனத்தாரையும் அச்சகத்தாரை யும் நன்றிகூறிப் பாராட்டுகிறோம்.

**04.01.2005**

சிவஸ்ரீ பிச்சை சிவாசாரியார்
பிள்ளையார்பட்டி

உ
திருச்சிற்றம்பலம்


'ஸ்ரீ மாணிக்கவாசகர் மடாலய 56ஆவது குருமகா சன்னிதானம்'
'இறையருட் செம்மல்' 'ஆதிசைவ அருட் தோன்றல்' 'அருள்ஞானச் சுடர்'
'அருள்வாய் மொழி அண்ணல்' 'சிவதீட்சா வித்தகர்' 'பூலோக சிவநாயகர்'
'அருட்பணிச் சக்ரவர்த்தி' 'சைவ சித்தாந்தசாகரம்'

**ஸ்ரீலஸ்ரீ ச. இராஜலிங்க மாணிக்கவாசக சுவாமிகள்**

**கூனம்பட்டி கல்யாணபுரி ஆதீனம்**

பல்லக்கவுண்டம்பாளையம் (அஞ்சல்) 638 056
ஈரோடு மாவட்டம்


# ஆசியும் வாழ்த்தும்

**உ**லகில் தோன்றிய உயிர்கள் குறிப்பாக மனிதப் பிறவி எடுத்தவர்கள் பிறவி நீக்கம் பெற்று தம்மை வந்து அடையும் பொருட்டு சிவபரம் பொருள் பல்வேறு வடிவங்களில் எழுந்தருளி அருள் பாலிக்கின்றார். அவ்வகையில் ஓம்காரப் பொருளாகவும் முழுமுதலாக வும் விநாயகப் பெருமானாக எழுந்தருளி இறைவன் பிள்ளையார்பட்டியில் கற்பகவிநாயகர் எனும் திருநாமத்தோடு எழுந்தருளி அருள்பாலித்து வருவது நாம் பெற்ற பெரும் பேறாகும். நகரத்தார்கள் சிவப்பணி ஆற்றிவரும் மேற்படி தலத்தில் வேதாகமங்களை பயிற்றுவித்து பல மாணவர்களை உருவாக்கியவராகிய சிவாகம திலகம், விகாஸ்ரத்தினா டாக்டர் சிவஸ்ரீ பிச்சை சிவாசாரியார் அவர்களும் நகரத்து மக்களும் பெரும் முயற்சியால் சிவநெறிக்கழகம் எனும் உயரிய

நிறுவனத்தைத் தொடங்கி ஆண்டு தோறும் பல ஆதீன கர்த்தர்களையும் பல அறிஞர் பெருமக்களையும் அழைத்து விழாவினைச் சிறப்போடு நிகழ்த்தி வருவது பெருமைக்கு உரியதாகும்.

சிவநெறிக் கழகம் தொடங்கி 25 ஆண்டுகள் நிறைவுறும் வண்ணமாக வருகிற தாரண ஆண்டு மார்கழி திங்கள் 24ஆம் நாள் (09.01.05) ஞாயிற்றுக்கிழமை வெள்ளிவிழாவாகச் செய்வதறிந்து பெரிதும் மகிழ்கிறோம். எண்ணியதும் ஈடேற்றும் கற்பக விநாயகப் பெருமானின் கருணா கடாக்ஷத்தால் விழா இனிதே நிகழவும் விழாச் செய்யும் கழகத் தலைவர், செயலர், பொருளர், மற்றுமுள்ள உறுப்பினர்கள் மேலும் அரும்பணிகள் செய்து சிறந்திடவும் விழா பொலிவுகாண வருவோர் எல்லா நலங்களும் பெற்றுத் திகழவும் குருவருளும், திருவருளும் துணை செய்ய வாழ்த்தி ஆசீர்வதிக்கிறோம்.

நிறைவுடன்
ச. இராஜலிங்க மாணிக்கவாசகன்

# அற்புதம் செய்யும் ஆகமப் பள்ளி

குழந்தைக் கவிஞர்
செல்லகணபதி

பிள்ளையார் பட்டி நகரத்தார்
பெருமை மிளிரும் பள்ளியிது
பிள்ளையார் அருளால் ஆகமத்தை
பிள்ளைகள் பயிலும் பள்ளியிது
பிள்ளையார் பட்டி மண்வாகு
பெருகும் செல்வம் என்பார்கள்
பிள்ளையார் பட்டிப் பள்ளியிதால்
பெருகும் நற்செயல் நல்ஒழுக்கம்

கற்பக விநாயகர் திருவருளால்
கற்பிக் கின்றார் ஆகமத்தை
பொற்பதம் போற்றிப் பயில்வதற்கு
புண்ணியம் செய்தவர் வருகின்றார்
நற்செயல் விளைய படும்பாட்டின்
நமைச்சலை இறைவன் கேட்டருளும்
அற்புதம் செய்ய ஆகமத்தை
அணுகிப் பயிலும் பள்ளியிது

பிச்சைக் குருக்கள் தலைமையிலே
பிள்ளைகள் ஊன்றிப் பயில்கின்றார்
அச்சு வெல்லமாய் மாணவர்கள்
அப்படி ஒன்றுபோல் ஆகமத்தை

மெச்சப் பயின்று ஒழுக்கமுடன்
விளையும் பயிராய்த் திகழ்கின்றார்
மிச்ச மில்லாமல் யார்துயரும்
விலகிட இறைவனை வேண்டுகிறார்.

வேதா கமத்தின் வித்துகளை
விளைந்திடச் செய்யும் பள்ளியிது
வேதம் பயில்வது மக்களிடம்
விளையும் துயரைப் போக்கவென்று
சாதகம் செய்யும் மாணவரால்
சரித்திரம் படைக்கிறார் பிச்சையண்ணா
மோதகப் பிரியனின் திருவருளால்
மூள்க பிச்சைக் குருக்கள்புகழ்

பிள்ளையார் பட்டித் தலப்பெருமை
பேசப் பேச வான்வெளிதான்
பிள்ளையார் பட்டி மண்மிதித்தால்
பெறுகிற செல்வமும் வான்வெளிதான்
பிள்ளையார் பட்டிக் குருக்களிடம்
பெறுகிற ஞானமும் வான்வெளிதான்
பிள்ளையார் பட்டிப் பாடசாலை
பெருக்கும் கல்வியும் வான்வெளிதான்

உலகம் யாவையும் தாமுளவாய்
ஒன்றெனப் போற்றும் பாங்கினிலே
நிலவுக அன்பும் ஒற்றுமையும்
நினைப்பே இதுவாய் பிச்சையண்ணா
பலப்பல நாட்டிலும் சீடர்களை
பாங்குடன் ஆகமப் பணிக்கமர்த்த
மலிந்தது பத்திப் பரவசம்தான்
வாழிய ஆகமப் பள்ளிபுகழ் !

# இன்னுமொரு பிறவி வேண்டும்

புலவர்
**அரங்க நெடுமாறன்,**
புதுகை

நற்பதம் பெறுதல் வேண்டின்
நலமெலாம் அடைதல் வேண்டின்
கற்பன அனைத்தும் நெஞ்சில்
கனிவுடன் நிறைதல் வேண்டின்
இற்பர சுகங்கள் வேண்டின்
இனிமையே தொடர்தல் வேண்டின்
கற்பக விநாயகர் பாதம்
கணந்தொறும் நினைத்தல் வேண்டும்

உள்ளது சிலநாள் என்றும்
உணர்வது வாழ்வு என்றும்
இல்லது பெறுவது எல்லாம்
இறையருள் தந்தது என்றும்
நல்லருள் பெற்ற மக்கள்
நாடொறும் நினைக்க வேண்டின்
பிள்ளையார் பட்டி வாழும்
பெருமானை நினைக்க வேண்டும்

தொல்லையார் நமக்குத் தந்தார்
துன்பங்கள் தொடர்வ தேனோ
இல்லற வாழ்வில் என்றும்
இனிமையை இழப்ப தேனோ
நல்லருள் வடிவாய் நாளும்
நலமெலாம் தந்தருள் நல்ல
பிள்ளையார் பட்டி யானை
மனத்திலே மறந்த தாலே.

தேடுவது சுகமா மனத்தில்
　　தீமைதனை ஒதுக்கி விட்டு
ஓடுவது சுகமா விருந்து
　　உண்ணுவது சுகமா இன்பம்
நாடுவது சுகமா இல்லைஇல்லை
　　நலந்தரு பிள்ளை யாரைப்
பாடுவதே சுகம் அவன் முகத்தைப்
　　பார்ப்பதும் சுகம் சுகமே.

சித்திதனைத் தருபவனும் அவனே
　　செம்மாந்த மனங்களிலும் அவனே
வெற்றிபல அருள்பவனும் அவனே
　　விக்கணங்கள் தீர்ப்பவனும் அவனே
பெற்றதும் பெறுவதுவும் அவனே
　　பெருமைக்கும் சிறுமைக்கும் அவனே
முத்தியினைத் தருபவனும் அவனே
　　பிள்ளையார் பட்டிவாழ் தவமே.

ஆசைகள் குறைதல் வேண்டும்
　　அவனருள் நிறைதல் வேண்டும்
ஓசையே இல்லாமல் நான்
　　உனைநினைத்து அமர்தல் வேண்டும்
பாசங்கள் நேசங்கள் எல்லாம்
　　உனைமட்டும் தொடர்தல் வேண்டும்
காசுதான் வாழ்வு என்ற
　　எண்ணத்தைக் களைதல் வேண்டும்.

எண்ணிய பெறுதல் வேண்டும்
　　பெறுவதை எண்ண வேண்டும்
என்னருள் என்னும் உன்றன்
　　கன்னிமூலை தருதல் வேண்டும்
எண்ணவும் வணங்கவும் உனது
　　சன்னிதி அடைதல் வேண்டும்
உன்முகம் பார்த் திருக்க
　　இன்னுமொரு பிறவி வேண்டும்.

# ஸ்ரீ கற்பக விநாயகர் வேதாகம வித்யாலயத் தோற்றமும் வளர்ச்சியும்

## சிவ வழிபாட்டின் சிறப்பு

தமிழ்மக்கள் தெய்வ வழிபாட்டில் தனி ஈடுபாடு காட்டும் தகைமையுடையோா்; திருக்கோயில் பூசையையும் நடைமுறையையும் வழிபாட்டையும் செவ்வனே செய்ய வேண்டும் என்ற கருத்துடையோர். சிவபெருமான் வழிபாட்டில் ஏற்படும் குற்றம் கொடியது என்று அஞ்சினர். இதனால் சிவனை வணங்கவும் வழிபடவும் முப்போதும் திருமேனி தீண்டுவார் என்னும் சிவாசாரியர்கள் சிவத்தொண்டு செய்வதை விரும்பினர். இவர்கள் சிவனைப் பூஜிக்க அடியார்கள் தரிசிப்பது சிறப்பாகும். சிவாசாரியார்கள் குறைந்த வருவாயில் ஒழுக்கமும் நேர்மையும் சத்தியமுடையவர்களாகத் திருக்கோயில் பூசகர்களாகத் திகழ்கின்றனர். செட்டிநாட்டில் செல்வம் குவிந்த போது, வேதாகம பாட சாலைகளும், வேதபாட சாலைகளும், தேவார பாடசாலைகளும் பெருகின. உலகப் போர்களால் செட்டிநாட்டின் அயல்நாட்டு வணிகம் குன்றிய போது திருக்கோயில் வளர்ச்சியும் பிற அறப்பணிகளும் ஸ்தம்பித்தன.

## வேதாகம பாடசாலை

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் திருக்கோயில்களில் வேதங்கள் முழங்கவும் ஆகம நெறி வளரவும் திருக்கோயிலில் பூசை ஒழுங்காக நடைபெறவும் வேதபாடசாலைகளும் ஆகமபாட சாலைகளும் நிறுவினர். உலகில் உணவுக் கவலையே இருந்த அந்நாளில் பிராமணப் பிள்ளைகளும் சிவாசாரியார் பிள்ளைகளும் பாடசாலைகளில் படிக்க நிறைய வந்தனர். வளமான உணவு; சிறந்த தங்குமிடம்; ஒழுங்கான கல்வி இது தான் வேதாகம பாடசாலைகளின் குறிக்கோள்.

## நலிதல்

தமிழகத்தில் ஏற்பட்ட புறக்கவர்ச்சியால் சிவாசாரியார்கள் சிகை வைத்துக் கொள்ளுவது இகழ்ச்சிக்குரியதாயிற்று. பூணூல் அணிவதும் தடுக்கப்பட்டது. திருக்கோயில் பணிபுரிவதும் குறைத்துப் பேசப்பட்டது. இதனால் பார்ப்பனச் சிறாரிடையேயும் சிவாசாரியார் சிறுவரிடையேயும்

புரட்சி எண்ணம் அரும்பியது. பழைய மரபுகளை விடுத்துப் புதுப்பழக்க வழக்கங்களைப் பின்பற்றலாயினர். லார்டு மெக்காலே வகுத்த கல்விமுறையைப் படிக்கவும் கிளர்க்குகளாக அரசாங்கத்தில் வேலைபார்க்கவும் பார்ப்பன இளைஞர்கள் தலைப்பட்டனர். இதனால் வேதாகமக் கல்வியில் ஈடுபாடு குறைந்தது. வேதாகம பாடசாலை களுக்குத் தக்க வாத்தியார்கள் கிடைக்கவில்லை. படிக்கும் மாணாக்கர் களுக்கு உணவு வழங்குவதற்கும் அவர்களே பொறுப்பாக்கப்பட்டனர். அறப்பணிக்கு ஒதுக்கிய சொத்துக்களும் செல்வமும் தனிக் குடும்பங்களுக்குரியவாயின. ஆசிரியரின்மையில் மாணாக்கர் வருகை குறைந்தது. இதனால் வேதாகம பாடசாலைகள் நலிவுற்றன.

## கம்பனடிப்பொடி விதைத்த வித்து

திருக்கோயில்களில் பரம்பரையாகத் தந்தை மகனுக்குச் சொல்லிக் கொடுத்த குருகுல முறைக் கல்வி பயின்றவர்களே திருக்கோயில் பணியில் ஈடுபடலாயினர். நன்கு படித்தறிந்த சிவாசாரியார்கள் அருகிய நிலையில் வேதாகமம் படிக்கும் மாணாக்கர்களின் எண்ணிக்கையும் குறைந்தது. இச்சூழலில் ஒருநாள், கம்பனடிப்பொடி பிள்ளையார்பட்டிக் கோயிலுக்கு வந்தார்கள்; சா. கணேசன் நகரத்தார்களில் மிகச் சிறந்த அறிவாளி. சிற்பக்கலை, கட்டக்கலை வல்லுநர்; கோயில் வழிபாட்டு முறையையும் ஆகம மரபையும் அறிந்தவர். பல திருக்கோயில் குடமுழுக்குகளில் கலந்து கொண்டு சிறப்புற நடத்திவைத்தவர். இந்திய விடுதலைப் போராட்ட வீரர். அத்தகைய ஞானியை மாலை நேரத்தில் திருக்கோயில் ஸ்தானிகம் பிச்சை சிவாசாரியார், கணேச கனபாடிகள், சுந்தரமய்யர் மூவரும் கண்டு பேசினர். அப்போது அவர் வேதாகமக்கல்வி நலிந்து வருகிறது. திருக்கோயில் பூசை முறைகள் அழிந்து விடலாகாது; ஆண்டுக்கு நூறு மாணாக்கர்களுக்காவது கல்விபுகட்டுங்கள் என்று வலியுறுத்தினார்கள். இம்மாணாக்கர்களுக்குக் கும்பாபிஷேகம், சாந்தி, திருக்கோயில் நித்திய பூசை, விசேடபூசைகளுக்குப் பயிற்சி கொடுக்க வேண்டும் என்றும் குறிப்பிட்டார்கள்.

## சத்திய வாக்கு

கம்பனடிப்பொடி கருத்தைக் கேட்ட பிச்சை சிவாசாரியார், கணேச கனபாடிகள், சுந்தரம்மய்யர் ஆகிய மூவரும் ஒரு மனமாய் 'நாங்கள் எந்தவித மான பிரதி பிரயோசனமும் எதிர்பாராமல் வேதாகமக் கல்வி வளர்ச்சிக்குப் பாடுபடுகிறோம்' என்று வாக்களித்தார்கள். இம்மூவரின் உறுதி மொழி உறுதியான மொழியாயிற்று. இதனைத் தொடர்ந்து தேவகோட்டை சைவசித்தாந்த சரபம், வயிநாகரம் - பாலகவி சிவஸ்ரீ தத்புருஷ தேசிகரவர்கள், அமராவதி கருப்பஞ் செட்டியார், கண்டனூர்

மு. நா. அ. நா. காசிச் செட்டியார், காரைக்குடி ப. சு. ராம. அண்ணா மலைச் செட்டியார், காரைக்குடி நா. மெ. மெ. மெய்யப்ப செட்டியார், குருவிக்கொண்டான்பட்டி அ. சொ. சித. அழகுச் செட்டியார், சொ. அழகப்பச் செட்டியார் உள்ளிட்ட நகரத்தார் பெருமக்களும், மற்றும் டாக்டர் மேஜர் சி. என். ஜெயராமன், எல். ஆர்எம். லெட்சுமணன் செட்டியார், தொண்டர் நா. அருணாசலம் செட்டியார், தேவகோட்டை முத்து வீரப்ப செட்டியார், கண்டனூர் செல்லகணபதி செட்டியார், பிள்ளையார்பட்டி பிச்சைக் குருக்கள், கணேச கனபாடிகள், மானேஜர் சுந்தரமய்யர் அனைவரும் கலந்து வேதாகம பாடசாலை தொடங்குவது என முடிவெடுத்தனர்.

## புதிய தோற்றம்

உள்ளம் ஒன்றி நல்லோர் அனைவரும் ஒருமனமாய் எடுத்த முடிவு செயலாகப் பரிணமித்தது. 20.1.1980 இந்நாள் பிள்ளையார்பட்டிக்கு நன்னாள். அன்றுதான் ஸ்ரீ கற்பகவிநாயகர் வேதாகம வித்யாலயம் தோன்றியது. பிள்ளையார்பட்டி மண்ணும் மரமும் மலையும் வேதம் கேட்கும் பாக்கியம் பெற்றது. கோயிலுக்குள் ஒலித்த வேத கோஷம் ஊரெல்லாம் ஒலிக்கலாயிற்று. பிள்ளையார்பட்டி புண்ணிய பூமியாயிற்று. ஐந்து மாணாக்கருடன் தொடங்கிய பள்ளி காரைக்குடி சார்பதிவாளர் அலுவலகத்தில் உரிய முறையில் பதிவு செய்யப்பட்டது.

## பிள்ளையார்பட்டி நகரத்தார் கொடை

பிள்ளையார்பட்டியில், பிள்ளையார்பட்டி தேவஸ்தான சார்பில் இக் கல்வி நிலையம் தொடங்கியமையால், பிள்ளையார்பட்டிக் கோயில் நகரத்தார் ரூபாய் இருபத்தையாயிரம் மூலதனமாக வழங்கினார்கள். பிள்ளையார்பட்டிக் கோயிலைச் சார்ந்த வளாகத்தில் வேதாகமப் பள்ளிக்கு அறுபது சென்ட் இடமும் நன்கொடையாக வழங்கப்பெற்றது. ஆலம்வித்துப்போல் அவர்கள் வழங்கிய கொடை இன்று மாபெரும் கற்பக விருட்சமாகக் காட்சி தருகிறது.

## கல்விமுறை

இங்குத் திருக்கோயில் வழிபாட்டுக்கு வேண்டிய வேதாகமக் கருத்துகள் அனைத்தும் சிவாசாரியார்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்ற நோக்கத்தில் முழுப் பயிற்சி கொடுக்கப்பெறுகிறது. கிரந்த எழுத்தில் படிக்கவும் எழுதவும் இங்குப்பயிலும் மாணாக்கர் களால் இயலும். உலகியலுக்குப் பயன்படும் வண்ணமும் சில பகுதிகள் சொல்லிக் கொடுக்கப்பெறுகின்றன. இவ்வாறு மாணாக்கர்கள் நான்காண்டு பயிற்சி பெறுகின்றனர். ஒழுக்கமும் நேர்மையும் இம்மண்ணிற்கு வந்ததும் தானே வந்து விடுகிறது. இடையிடையே மாணாக்கர்கள் நேர்முகப் பயிற்சிக்கும் வாய்ப்பளிக்கப்பெறுகிறது.

இதனால் திருக்கோயில் திருத்தொண்டில் இச்சிவாகம பாடசாலை மாணாக்கர்கள் சிறந்து நிற்கின்றனர். இன்று வேதாகமபாட சாலையில் மாணக்கர் எண்ணிக்கை கூடுதலானமையால் பட்டமங்கலத்திலும் கோவிலூரிலும் நாற்பது மாணவர்களைப் பராமரித்துப் பயிற்சி கொடுக்கப்பெறுகிறது.

## தேர்வுமுறை

தனிப்பட்ட வேதாகமக் கல்விக் கூடம் என்றாலும் ஒருபல்கலைக் கழகத்தைப் போல வகுப்புகள் நடைபெறுவதும், கருத்தரங்குகள் நடைபெறுவதும் காண்போரை வியப்படையச் செய்கிறது. வித்தியாலய அறங்காவலர்கள் கல்வித்தகுதியும் நேர்மையும் மிக்கவர்களைத் தேர்வாளராக நிமித்து மாணாக்கர்களைப் பரிசோதிக்கின்றனர். நன்கு சோதிக்கப்பெற்றபின் சான்றிதழ் வழங்கப்பெறுகிறது.

## பிறதுறை அறிவு

'வேதாகம பாடசாலை' என்று பெயரிருந்தாலும் அவற்றுடன் உறவுடைய பிறவும் இங்குப் பயிற்றுவிக்கப்படுகின்றன. வேதம், ஆகமம், திருமுறை, சைவசித்தாந்தம், என்பனவும் பாடத்திட்டத்தி லுள்ளன. திருமுறையையும் சைவ சமயத்தையும் அறிவதால் மாணக்கர் சமய அறிவு நன்கு பெறுகின்றனர். கோயில் நிகழ்ச்சிகளுக்கு வேண்டிய சோதிடக் கருத்துகளைக் காணவும் சோதிடம் சொல்லிக் கொடுக்கப்பெறுகிறது. யோகாப் பயிற்சியும் தரப்படுகிறது. கணினியில் கிரந்த லிபி சொல்லிக் கொடுக்கப்பெறுகிறது.

## பொதுமை நோக்கம்

நான்காமாண்டு மாணாக்கர்களுக்கு இசுலாம், கிறித்தவம், பௌத்தம், சமணம் போன்ற சமயப் போதனைகளும் சொல்லிக் கொடுக்கப்பெறுகிறது. இதன் மூலம் சமய ஒருமைப்பாட்டையும் வீண்வம்புகளை வளர்க்காமையும் வளர்க்க முடிகின்றது. பிள்ளையார்பட்டி மாணாக்கர்கள் சிறந்தவர்கள் என்ற எண்ணம் இதன் மூலம் நிறுவப்பட்டுள்ளது. உடற்பயிற்சி, கைப்பந்து, கிரிக்கெட் போன்ற விளையாட்டுகளிலும் மாணவர்களுக்கு ஊக்கம் தரப்பெறுகிறது.

இங்குப் பயின்ற மாணாக்கர்கள் தமிழகத்து அனைத்துக் கோயில் களிலும் பணியாற்றுகின்றனர். வெளிமாநிலங்களிலும் அயல்நாடு களிலும் இவர்களைக் காணமுடிகின்றது. திக்கெலாம் இவர்களின் நல்லொழுக்கத்தாலும் திடமான நடைமுறையாலும் பிள்ளையார்பட்டி ஸ்ரீ கற்பக விநாயகர் வேதாகம பாடசாலையின் புகழ் பரவிக்கிடக்கிறது.

*வாழ்க, வளர்க, வேதாகம பாடசாலை*

# வேதமும் வேதாங்கமும்

வேதத்தை விட்ட அறம்இல்லை, வேதத்தில்
ஓதத்தகும் அறம் எல்லாம் உள, தர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே. – திருமந்திரம்

(வேதத்திற்கு மேற்பட்ட சிறந்த நீதிநூல் வேறு ஏதும் இல்லை; நாம் ஓதத்தக்க நீதிகள் யாவும் வேதத்தில் உள்ளன. அதனால் அனுபூதிமான்கள் தர்க்கவாதத்தை விடுத்து ஞானவளம் நிறைந்த வேதத்தை ஓதியே முத்திப்பேறு பெற்றனர்.)

## தர்மப் பிரமாணங்கள்

பிரமாணம் என்றால் இதுதான் சத்தியமானது. சரியானது, என்று நிலைநாட்டிச் சொல்வது. இப்படி, இந்து மதம் என்று தற்போது வழங்குகிறதும், வேத காலத்திலிருந்து வந்திருப்பதுமான தர்மம் என்ன என்பதை எடுத்துச் சொல்லும் ஆதார நூல்கள் - சாஸ்திர நூல்கள் பதினான்கு இருக்கின்றன.

தர்மம் அல்லது மதம் என்பதன் கொள்கை என்ன, அநுஷ்டானம் (வழக்கம், ஒழுக்கம்) என்ன என்று சத்தியமாகத் தெரிவிப்பவையே தர்மப் பிரமாணங்கள். 'வித்' என்றால் அறிவது என்று பொருள். இதிலிருந்தே 'வேதம்' என்பதும் வந்திருக்கிறது. வேதம் என்பதன் நேர் பொருள் அறிவு நூல் (Book of Knowledge). அறிவைத் தருவதால் இந்தப் பதினான்குக்கும் வித்தியா ஸ்தானங்கள் (அறிவிற்கு இருப்பிடம்) என்று பெயரும் உண்டு.

அந்தப் பதினான்காவன: நான்கு வேதங்களின் ஆறு அங்கங்கள்: உபாங்கம் நான்கு (இவற்றைச் சதுர்தச (14) வித்தை என்று சொல்வர்.) இவற்றோடு உப வேதங்கள் என்று சொல்லப்பெறும் நான்கையும் சேர்த்து, வித்தியா ஸ்தானம் பதினெட்டு என்று கூறுவதும் உண்டு.

## நான்மறை ஆறங்கம்

வேதத்தை வேத புருஷன் (வேதமாகிய தெய்வம்) என்றும் கூறுவர். இந்த வேதங்கள் ரிக், யஸுஸ், சாமம், அதர்வ(ண)ம் என நான்கு. இந்த

வேதத்தின் அங்கங்கள் ஆறு (ஷட்- ஆறு; ஷடங்கம்) உள்ளன. இவற்றையே ஆறங்கம் நால்வேதம் (ஆறு வேதாங்கங்களும் நான்கு வேதங்களும்) என்று நம் அருளாளர்கள் பாடியுள்ளனர்.

'பலவேதம் அங்கம்ஆறும் மறைநான் சுவையும்' ஆனார் (1 : 66 : 1) (பலவாய் விரிந்த நான்கு வேதங்களாகவும், அவற்றின் ஆறு அங்கங்களாகவும் ஆனவர்) என்று ஞானசம்பந்தர் திருச்சண்பைநகர்ப் பதிகத்தில் பாடுகிறார். 'நான்மறையோடு ஆறங்கம் சொன்னார் தாமே' (6 : 78 : 4) (நான்கு வேதங்களோடு வேதாங்கம் ஆறும் சொன்னவர்) என்று திருவாலங்காட்டுப் பதிகத்தில் அப்பர் சுவாமிகள் சிவபெருமானைக் குறிப்பிடுகிறார். 'ஞாலம் தான்பர வப்படுகின்ற நான் மறைஅங்கம் ஓதிய நாவன்' (7 : 51 : 10) (உலகத்தாரால் போற்றப்பெறுகின்ற நான்கு வேதங்கள். வேதத்தின் ஆறு அங்கங்கள் ஆகியவற்றை ஓதிய நாவினை உடையவன்) என்று, சுந்தரர் தம்மைக் குறிப்பிட்டுக் கொள்கிறார்.

சங்க காலத்தில் புறநானூற்றுப் பாடல் ஒன்றில் இதை 'ஒன்றுபுரிந்த ஈரிரண்டின் ஆறுஉணர்ந்த ஒருமுதுநூல்' (புறம் 166 : 3-4) (அறம் ஒன்றையே மேவிய நான்கு கூறுகளை உடைய ஆறு அங்கத்தால் உணரப்பெற்ற ஒரு பழைய நூலான வேதம்) என்று ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் பாடுகிறார்.

## துணை அங்கங்கள்

இந்த வேதத்துக்கு நேரடியாக அங்கமாக இல்லாமல், துணை அங்கமாக இருப்பவை நான்கு. அவற்றை உபாங்கம் என்று கூறுவர். வேதத்தை அங்கம், உபாங்கம் ஆகியவற்றோடு கற்க வேண்டும் என்பதைக் கூறுவதை சாங்கோபாங்கம் (ஸ+அங்கம்+உபாங்கம்) என்னும் சொல் 'சாங்கோபாங்கமாக (முழுமையாக)ப் பேசினார்' என்றெல்லாம் இப்போது வழங்குவது இதிலிருந்து வந்ததே. இவற்றோடு நேரடியாகத் தர்மத்தைச் சொல்லாவிட்டாலும், அறிவை ஊட்டுகின்ற உப வேதங்கள் நான்கையும் சேர்த்து வித்தியா ஸ்தானம் (Source of knowledge) பதினெட்டு என்றும் கூறுவர். வித்தியா ஸ்தானத்திற்கு வித்தியானு போகமாய் (கல்வி மேம்பாட்டுக்காக விடப்பெறும் மானியம்) என்று பெருங்கதை (உதயணன் வரலாற்றைக் கொங்குவேளிர் பாடிய 7ஆம் நூற்றாண்டு நூல்) இதனைக் குறிப்பிடுகிறது. இவற்றில் முதலில் கூறிய பதினான்கும் தர்ம ஸ்தானங்கள், வித்தியா ஸ்தானங்கள் ஆகிய இரண்டாகவும் விளங்குகின்றன.

## வேதம்

இந்து மதத்தைப் பற்றித் தெளிவாக எடுத்துக்கூறும் நூல்கள் வடமொழியில் அமைந்த வேதங்கள். அவை இந்து மதத்தின் பிரமாண நூல்கள் ஆகும். வடமொழியில் அமைந்துள்ள இந்து மத நூல்களுள் காலத்தால் மிகப் பழைமை வாய்ந்தவை என அவை போற்றப் பெறுகின்றன.

(ரிக் வேதம் கி.மு.2500ல் எழுந்ததாகக் கூறுப்பெறுகிறது. இருப்பினும், சுவாமி விவேகாநந்தர், 'உலகிலேயே மிகப் பழைய நூல் இந்த சிந்தனைக் கருவூலம் தான்... இது எண்ணாயிரம் அல்லது ஒன்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தோன்றியதாக இருக்கலாம்' என்கிறார் (ஞானதீபம், 3:219).

'வேதகாலம் கி.மு. 1500க்கும், கி.மு. 1000க்கும் இடைப்பட்டது என்பர் வரலாற்றாசிரியர். பழைய கணித நூலாரும், புராணிகரும் (புராணப் பிரசங்கம் செய்வோர்) கூறுகிறபடி, அது 3100 ஆண்டுகளுக்குச் சரியாதல் வேண்டும்' என்கிறார் தமிழறிஞர் கா.அப்பாத்துரையார் (கழகத்தின் 1008ஆவது வெளியீட்டு விழா மலர், பக். 153).

'இவ்வேதங்கள் இறைவனால், அனுபூதிமான்களாகிய முனிவர்களுக்கு அருளப்பெற்றவை என்பது இந்துக்களின் நம்பிக்கை. சைவர், சாக்தர், வைணவர் ஆகிய இந்து மதத்தின் மூன்று பிரிவினருக்கும் வேதங்கள் பொதுவான மூல நூல்கள் ஆகும்' (ஈழ நாட்டுச் சமயக் கல்விப் பாடத் திட்டத்தால் தயாரிக்கப் பெற்ற 'சைவ நெறி' 8ஆம் தரம், பக்: 7, 8)

வித் (அறிதல்) என்ற வடமொழி வேர்ச்சொல்லிருந்து உருவானதே வேதம் என்ற சொல் என்று முதலில் கண்டோம். இங்கு, அறிவைப் பெறுவதற்குக் கருவியாக அது அமைகிறது. வேதத்தால் பெறப்படுவது அபர ஞானம் (சாத்திர அறிவு); அதுவே பரம்பொருளை அறிவதாகிய பரஞானத்துக்கும் கருவியாக அமைகிறது.

## உபசார வழக்கு

நான்முகனாகிய பிரமாதான் வேதங்களைச் செய்தார் என்று ஒரு சாரார் கூறுவர். அக்கினியிலிருந்து ரிக் வேதத்தையும் வாயுவிலிருந்து யஜுர் வேதத்தையும், சூரியனிலிருந்து சாம வேதத்தையும் அவர் உண்டு பண்ணினார் என்பது அவர்கள் கூற்று. சுயம்பு (பிறரால் தோற்றுவிக்கப் பெறாதது) வான சிவபெருமானே வேதத்தை அருளினார் என்று கூறி, அதன் காரணமாக வேதமும் நித்தியம் (அழிவற்றது) என்றும் சிலர் கூறுவது எல்லாம் உபசார வழக்குதான் (ஒன்றின் தன்மையை

மற்றொன்றின் மேல் ஏற்றிக் கூறுவது). அது சுத்தமாயை (சுத்தப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமான மாயை)யில் தோன்றி, முடிவில் சிவத்தில் ஒடுங்குவதால் அவ்வாறு சொல்லப்பெறும்.

வேத மந்திரங்கள் பண்டைக் காலத்திலிருந்தே இருக்கின்றன என்கின்றனர். வேதம் இறைவனின் மூச்சுக் காற்றாகும் என்று பிருஹதாரண்யக உபநிஷத்தில் கூறுப்பெறுகிறது (அத்தியாயம் 2;4:10).

வேதம் என்பது பல சூக்தங்களைக் கொண்டது (சூத்தம் - வேதத்தின் பல இருக்குகளைக் கொண்ட பகுதி; தேவாரப் பதிகங்கள் போன்றவை என்கிறார் காஞ்சிப் பெரியவர்; சூக்தம் என்றால் 'நல்வாக்கு' என்று பொருள் கொள்ளலாம் என்றும் அவர் கூறுகிறார்); ஒவ்வொரு சூக்தத்திலும் பல மந்திரங்கள் இருக்கும்.

## விபரீத பலன்

வேதத்திற்குச் சுருதி என்ற பெயரும் உண்டு. கேட்கப்பெறுவது எதுவோ அதுவே சுருதி. புத்தகத்தில் எழுதிப் படிக்காமல், குரு-சிஷ்ய பரம்பரையாக, வாயால் சொல்லிக் காதால் கேட்டே, வேதம் தலைமுறை தலைமுறையாக வந்திருப்பதால் அதற்குச் சுருதி என்ற பெயர் ஏற்பட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். (எழுதிப் படிக்கக் கூடாது என்று ஏன் வைத்தார்கள் என்றால், வேத ஒலிகளை இப்படி எழுத முடியாது என்பதால்தான். 'ழ'வுக்கும், 'ள'வுக்கும் இடையில் உள்ள ஒலி மாதிரி, எழுத்து வடிவில் கொண்டு வர முடியாத பல ஒலிகள் வேதத்தில் உண்டு. அதோடு உதாத்தம் (எடுத்தல் ஓசை), அநுதாத்தம் (படுத்தல் ஓசை), ஸ்வரிதம் (உதாத்தம் அநுதாத்தம் இரண்டும் கலந்து வேதத்தில் பயிலும் ஒரு ஸ்வரம்) என்றெல்லாம், வேத மந்திரங்களுக்கு ஸ்வரமும் உண்டு. உச்சரிப்புத் தவறினால் பலனே போய்விடும்; மாறாக விபரீதப் பலனும் ஏற்பட்டுவிடும். (இதன் தொடர்பாகக் காஞ்சிப் பெரியவர் கூறிய ஒரு கதை இணைப்பு 1 ஆக அமைந்துள்ளது). இதனையே தமிழில் எழுதாக் கிளவி (Unwritten and handed down orally) என்கின்றோம்.

வேதத்தைத் தமிழில் மறை என்றும் சொல்கிறோம். மறை என்றால் மறைத்து இரகசியமாகக் காப்பாற்றப் பெற வேண்டியது என்று பொருள். மறைவான பொருளைக் கொண்டது என்றும் பொருள் கொள்ளலாம். மேலும், வேதத்தினால் ஏற்படும் பயன் முழுவதும் உடனே தெரிந்து விடாது. இப்போது மறைந்திருந்து பிற்பாடுதான் வெளிப்படும். தெரியாதது என்றால் மறைந்திருக்கிறது என்றுதானே பொருள்?

ஒத்து என்றும் வேதத்தைத் தமிழில் சொல்வது உண்டு. எது எழுதப்பெறாமல் ஓதப்பெற்றே வருகிறதோ, அது ஒத்து ஆகிறது. மறப்பினும் ஒத்துக் கொளஎல் ஆகும். (வேதியன், கற்ற வேதத்தினை மறந்தானாயினும், பின்னர் அதை ஓதிக்கொள்ளலாம்) என்பது குறள் (134). ஞானசம்பந்தர் ஆண்பனையைப் பெண்பனையாக்கிய தலம் திருவோத்தூர் (திரு+ஒத்து+ஊர்).

## சாகை ஆயிரம் உடையார்

வேதங்களில் பாடங்கள், பாடபேதங்கள் உண்டு. அவற்றைப் பாடாந்தரம் என்று சொல்வார்கள். இந்தப் பாடாந்தரம் ஒவ்வொன்றை யும் ஒரு சாகை என்று கூறுவர். 'சாகை ஆயிரம் உடையார்.' (2:94:1) (வேதப் பிரிவுகளான சாகைகள் பலவற்றை அருளியவர் இறைவன்) என்பது ஞானசம்பந்தர் வாக்கு. சாகை என்றால் கிளை. ஒவ்வொரு சாகையிலும் ஸம்ஹிதை, பிராம்மணம், ஆரண்யகம் என்ற மூன்று பிரிவுகள் உண்டு.

ஸம்ஹிதை என்றால் ஒழுங்குபடுத்திச் சேர்த்து வைத்தது என்று பொருள்; பல்வேறு தேவர்களுக்கான பிரார்த்தனைகள் இதில் அடங்குகின்றன. பிராம்மணம் என்பது மந்திரமல்லாத பகுதி; யாக விவரங்கள் அடங்கியது; ஆரண்யகம் என்பது, காடுகளில் செய்யப் பெற்ற வேதப் பகுதி என்று பொருள்படும்; அறுதி உண்மை பற்றிய ஆராய்ச்சி அடங்கிய பகுதி இது. இத்தகைய சாகையின் முடிவாகவே - அந்தமாகவே உபநிஷத் அமைந்திருக்கிறது; எனவே அது வேதாந்தம் ஆகிறது.

வேதத்தை நான்காகவும், அவற்றை 1180 சாகைகளாகவும் பிரித்து - வகுத்துக் கொடுத்தவர், கிருஷ்ண த்வைபாயணர் (த்வீபம்-தீவு; தீவில் பிறந்த 'கிருஷ்ணர்' என்னும் இயற்பெயரை உடையவர்). இவருக்குப் பாதாரயணர் என்ற பெயரும் உண்டு. வேதங்களைப் பிரித்து ஒழுங்குபடுத்திக் கொடுத்தால், இவரை வேத வியாசர் என்றும் குறிப்பிடுவர். (பராசர முனிவருக்கும், சத்தியவதி என்னும் செம்படவப் பெண்ணுக்கும் பிறந்தவர் வியாசர். வியசம் என்றால் வகுத்தல், பகுத்தல் என்று பொருள். வேதத்தை நான்காக வகுத்தனால் 'வேத வியாசர்' எனப் பெயர் பெற்றார். பதினெண் புராணங்களை அருளிச் செய்தவரும் இவரே.)

## தலையாய நோக்கம்

யக்ஞங்களைச் (யாகம், வேள்வி) செய்வதே வேதத்தின் தலையாய நோக்கம். பரஞானம் பெறுவது வேதத்தின் மற்றொரு நோக்கம் என்றும் கூறுவர். வேதம் செய்யப்பெற்ற காலத்தில் முதல் நோக்கமே மேலோங்கி இருந்தது. பிறகு வேதக்காரர்கள் தமிழ் மக்களோடு தொடர்பு கொண்ட காலத்தில், ஞானம் என்ற பொருள் அவர்களுக்குத் தெரியவந்தது. அதன் விளைவே பின்னர் எழுந்த உபநிடதங்கள்.

வேதம் கர்ம காண்டம், உபாசனா காண்டம், ஞான காண்டம் என மூன்று பிரிவுகளாக உள்ளது.

கர்ம காண்டம் என்பது, இக-பர சுகத்துக்கு உரியகர்மங்கள், யாகங்கள் முதலியவற்றைச் செய்யும் முறை. அவற்றுக்கான தேவர்கள், அவர்களைத் திருப்தி செய்யும் மந்திரங்கள் ஆகியவற்றைக் கூறும்.

உபாசனா காண்டம் என்பது அக்கினி, இந்திரன், வாயு, சூரியன் முதலான தேவர்களிடத்துப் பக்தி செய்து அதனால் பெறும் பலனைக் கூறுவது.

ஞான காண்டம் என்பது தத்துவஞானம் பெறுவதற்கான வழிமுறைகளைச் சொல்லுவது.

## நால்வேதம்

ரிக், யஜுஸ், சாமம், அதர்வ(ண)ம் என வேதம் நான்காகும் என்று முன்னர் கண்டோம். அவற்றைப் பற்றிய சில குறிப்புகளை இங்கு காண்போம்.

### 1. ரி(ரு)க் வேதம்

ரிக் என்ற சொல்லுக்குப் பரம்பொருளைத் துதிக்கும் மந்திரம் என்று பொருள் சொல்வர். ருக் என்பது சந்தத்துடன் கூடிய செய்யுளைக் குறிக்கும். இந்த வேதம் செய்யுள் வடிவிலேயே இருப்பதால் இவ்வாறு அழைக்கப் பெறுகிறது. வேள்விகளில் தேவதைகளை அழைப்பதற்கு இந்த வேதம் பயன்படுகிறது.

அத்தனை தேவதைகளுக்குமான தோத்திர மயமாக இருப்பது ரிக் வேதத்தின் பெருமை. (சூரியனுடைய மகளின் திருமணத்தைப் பற்றி அது சொல்லியிருப்பதன் அடிப்படையில்தான், திருமணச் சடங்குகளே உருவாகி இருக்கின்றன.)

ரிக் வேதத்தின் இறுதியில் அமைந்துள்ள எல்லா மக்களும் ஒன்று சேர்ந்து ஒரே மனதாக இணைந்து ஆலோசனை செய்யட்டும்; எல்லோருக்கும் ஒரே இலட்சியம் இருக்கட்டும்; எல்லா இருதயங்களும் அன்போடு ஒன்று சேரட்டும்; இவ்வாறு ஒரே எண்ணத்தோடு எல்லா மக்களும் மகிழ்ச்சியாக வாழட்டும் என்ற பிரார்த்தனை, அனைத்துலக ஒற்றுமைக்கான பிரார்த்தனை போன்று அமைந்திருக்கிறது. (நாடெலாம் வாழ வேண்டும் என்ற இத்தகைய பிரார்த்தனை நிறைவேறுமானால், உலகத்தில் மகிழ்ச்சியைத் தவிர வேறு எதுவுமே இராது. ஆனால் அது நிறைவேறுமா?)

## 2. யஜுர்(ஸ்) வேதம்

யாஜுஸ் என்றால் உரைநடை என்று பொருள். உரைநடையாகவே அமைந்த இந்த வேதத்தில் செய்யுள்களும் இருக்கவே செய்கின்றன. இந்த வேதம் பயின்றவர், வேள்விகளில் தேவதைகளுக்கு அவியை (வேள்வித் தீயில் தேவர்க்குக் கொடுக்கும் உணவினை) அளிக்கும் அத்வர்யு (Chief yajur-vedic priest at a sacrifice) வாக இருக்கிறார். இதில் ஜபம், ஹோமம் முதலியன விரிவாகச் சொல்லப் பெறுகின்றன. காமிய (பயனை விரும்பிச் செய்யும்) ஹோமங்கள் பலவும் இதில் உள்ளன.

யாகங்களினால் ஏற்படும் மூன்று பலன்களைக் காஞ்சி முனிவர் பட்டியலிடுகிறார்; முதலாவது, இவ்வுலகில் வாழும்போதே நமக்கும், எல்லா உயிரினங்களுக்கும், தேவர்களின் அருளினால் நன்மைகளைப் பெறுவது; இரண்டாவது, இறந்த பிறகு தேவலோகத்தில் இன்பமாக இருப்பது; மூன்றாவது, எந்தப் பலனையும் எதிர்பாராமல், இது நம் கடமை என்று எண்ணிச் செய்யும்போது, அது ஞானத்தைக் கொடுத்து உறுதியில் அழியாத பேரின்பத்தை நல்கிவிடுகிறது.

ரிக் வேதத்தில் கூட இல்லாத சில உயர்ந்த தோத்திர வடிவிலான மந்திரங்களும் இதில்தான் வருகின்றன. கோயில் வழிபாடுகளில் தலையாய இடத்தை வகிக்கின்ற ருத்தரம், யஜுர் வேதத்திலிருந்து எடுத்துத்தான். (ருத்ரம் பற்றிய தனிக் கட்டுரை இணைப்பு இரண்டாக இடம் பெறுகிறது.)

## 3. சாம வேதம்

ஸாம என்றால் இசை. இசை மயமாக உள்ளது இந்த வேதம். அதாவது, மந்திர ரூபமாக உள்ள ரிக் வேதம், யஜூர் வேதத்தின் வழி கிரியா ரூபம் பெற்று, இப்போது கானமாக இசைக்கப் பெறுகிறது என்பது பொருள். சாம வேதம் ஏழு ஸ்வரங்களுடன் இசைக்கப் பெறுகிறது. பாவ நிவாரணம் தருவது என்பது இதன் நோக்கமாகும்.

கயிலை மலையின் கீழ் நசுக்குண்ட இராவணன் சாமகானம் இசைத்தே இறையருள் பெற்றான் என்பது புராணம். இத்தகைய புராண வரலாறுகளை ஒட்டிச், சாமகானம் சிவனுக்கு உரியது என்ற வழக்கைத் தோற்றுவித்துள்ளனர்.

'சாமவேதம் கந்தருவம்(இசை) விரும்புமே' (6:4:1) என்று அப்பர் சுவாமிகளாலும், வேதங்களுள் சாமவேதமாக இருக்கிறேன் என்று கீதையில் (அத். 10:22) கண்ணனாலும் இவ்வேதம் சிறப்பிக்கப் பெறுகிறது.

## 4. அதர்வ(ண) வேதம்

வசிட்ட முனிவரின் புதல்வரான அதர்வணர் என்பவரால் கண்டறியப் பெற்ற மந்திரங்கள் பலவற்றைக் கொண்டது இந்த வேதம். ரிக் வேதத்தில் உள்ள பலபல மந்திரங்கள் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. இந்த வேதம் நோய் நீக்கம், மனத்தை வசப்படுத்துதல், தீய கிரகங்களின் வேதனையைத் தவிர்த்தல் போன்ற அவரவர் விரும்புகின்ற உலக போகம் பலவற்றைக் கூறுகிறது. மேலும், சத்ரு (பகைவர்) நாசம் போன்ற கொடிய காமியப் பொருள்களையும் இது கூறுவதல், இதை விட்டு ஏனைய வேதங்கள் மூன்றையுமே த்ரயீ என்ற பெயரில் சொல்லும் ஒரு வழக்கும் உண்டு. ஏனைய வேதங்கள் மூன்றையுமே த்ரயீ என்ற பெயரில் சொல்லும் ஒரு வழக்கும் உண்டு. (வேதம் குறித்துக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. கூறும் சில தகவல்களை இணைப்பு மூன்றில் காண்போம்.)

## தனித்துவம் வாய்ந்த வேதம்

வேதங்களின் பொதுவான இன்னொரு பெருமை, 'இது ஒன்றுதான் வழி; இது ஒன்றுதான் தெய்வம்' என்று சொல்லாமல் நம்பிக்கையோடு எந்த வழியை - நெறியைப் பின்பற்றினாலும், எந்த தெய்வத்தை வழிபட்டாலும், அதுவே சத்தியமான ஒரு வழியில் கொண்டு விட்டுவிடும் என்று கூறுவதுதான். வேதத்தைத் தவிர, இந்த மாதிரிப் பல வழிகளை ஆதரித்துப் பேசுகிற ஒரு சமய ஆதார நூல் எதுவுமே உலகத்தில் காணப்பெறவில்லை. தன் வழி ஒன்றே மோட்சத்திற்கு இட்டுச் செல்லும் என்றுதான் எல்லா மதங்களின் மூலநூல்களும் கூறிக் கொள்கின்றன என்கிறார் காஞ்சிப் பெரியவர் (தெ. குரல் 2.பக் 305, 306).

## வே(விவா)தம்

வேதம் இத்துணைச் சிறப்புடையதாக இருந்தாலும், விவாதத்துக்குரிய பல கருத்துகளும் அதில் இருப்பதை நாம் சுட்டிக் காட்டவே வேண்டும்.

இந்து சமயத்தினர், குறிப்பாகச் சைவ-வைணவர்களில், மிக அதிகமானோர் இல்லாவிட்டாலும், பாதிக்கு மேற்பட்டோராவது சைவ உணவு உண்போராகவே இருக்கின்றனர்; கொல்லாமையைக் கடைப்பிடிக்கின்றனர்.

புலால் அற்ற உணவைக் கூடச் சைவச் சாப்பாடு என்கிறோம். சமயத்தின் பெயரால் சாப்பாட்டைக் குறிப்பது உலகிலேயே சைவச் சாப்பாடு ஒன்றாகத்தான் இருக்க முடியும். புலால் உண்பது சைவத்துக்கு விரோதம் (நஜன், நமச்சிவாய வாழ்க).

**கானுறு கோடி கடிகமழ் சந்தனம்,**
**வானுறு மாமலர் இட்டு வணங்கினும்,**
**ஊனினை நீக்கி உண்பவர்க்கு அல்லது**
**தேனமர் பூங்கழல் சேரஒண் ணாதே.** (திருமந்திரம், 5:6:2)

(காட்டில் எங்கும் நிறைந்து மணம் கமழும் சந்தனமும், வானளாவ நிறையும் வகையில் சிறந்த மலர்களும் சாத்தி வழிபட்டாலும், புலால் உணவை உண்ணாது தவிர்த்து, உள்ளத்தில் இறைவனைத் தியானிப்பவர்க்கு அல்லது, ஏனையோரால், தேன் போன்று இன்பத்தைத் தரும் இறைவனின் திருவடிகளை அடைய இயலாது.) (ஊனினை என்பதற்கு 'உடல் பற்றை' என்று பொருள் காண்கிறார். உரையாசிரியர் ஜி. வரதராஜன். அது என்னவோ வலிந்து பொருள் காண்பதாகவே தோன்றுகிறது. இங்கும் புலால் மறுத்தலையே திருமூலர் வலியுறுத்துகிறார் என்பது தொகுப்பாளன் கருத்து).

இப்பாடல் 'கிரியை' பற்றிய அதிகாரத்தில் இடம்பெறுகிறது. கொல்லாமை, புலால் மறுத்தல் அதிகாரங்களில் மாமிச உணவைக் கண்டிப்பாக மறுத்துள்ள திருமூலர், இங்கும் அதையே கூற வேண்டியதில்லை என்று மேலே காணும் அடியேனின் கருத்துக்கு மறுப்புத் தெரிவிக்கிறார் தான்ஸ்ரீ சோமசுந்தரம்.

மேலும், தென் இந்திய சைவ சித்தாந்தக் கழகப் பதிப்பில் இப்பாடலில், உண்பவர்க்கு எனப் பாடபேதம் காட்டப்பெற்றுள்ளது. அதற்குப் பொருள் காணும் உரையாசிரியர், 'சரீர அபிமானத்தை விட்டு அல்லது மாமிச உணவை விட்டு' என உரை கண்டிருப்பதால், இருவரும் ஒரு கருத்தில் உடன்பட்டிருக்கின்றனர் என்பது தெளிவு எனவும் அவர் கூறுகிறார்.

(கழகப் பதிப்பு உரையாசிரியர் மாமிச உணவை விட்டு என்பதைச் சேர்த்துக் கொண்டிருப்பதே அடியேனுடைய வாதத்துக்கு ஆதரவாக அமைகிறது என்பதைச் சுட்டிக் காட்ட விழைகிறேன்.)





மேலும், யஜுர் வேதத்தில் யக்ஞங்களில் உயிர்ப்பலிக்கு இடமிருக்கிறது என்று சொல்லப் பெற்றிருப்பதைக் காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகளின் கூற்றின்வழி அறிகிறோம்.

## நேர்த்திக்கடன்

பண்டைத் தமிழரிடையே, கடவுளருக்கு நேர்த்திக்கடனாக உயிர்களைப் பலியிடும் வழக்கம் நிலவி வந்திருக்கிறது என்பதைச் சங்க நூல்கள் தெளிவாகவே குறிப்பிடுகின்றன. வேதங்களிலும் உயிர்ப்பலி ஏற்றுக் கொள்ளப் பெற்றுப் பல உயிர்கள் கொல்லப்பெற்றன; ரிஷிகளின் தொன்மை (பழைமை)யான வேள்விகளில் உண்ணத்தக்க பறவை, விலங்குகள் அவிசாகவே (தேவருணவாகவே) இருந்தனவாதலால், வேள்விகளில் உயிர்வதை செய்யலாம், என்கிறது மனுஸ்மிருதி. (அத். 5;23) அந்த அடிப்படையில் தான், ஜீவகாருண்யத்தை, கொல்லாமையை அடிப்படையாகக் கொண்ட பௌத்தம், சமணம் போன்ற சமயங்கள் இந்து மதத்திலிருந்து கிளைந்தன.

## சைவநெறி மரபு

கி.மு. முதலாம் நூற்றாண்டில் எழுந்த திருக்குறள் கொல்லாமையையும், புலால் மறுத்தலையும் அதிகமாகவே வலியுறுத்துகிறது திருவள்ளுவரும், கி.பி. 5ஆம் நூற்றாண்டினரான திருமூலரும், புலால் உண்போர் நரகத்தில் அனுபவிக்கவிருக்கும் துன்பங்களைக் கூறி மக்களை அச்சுறுத்தவும் தவறவில்லை அவர்கள் காலத்தில் வேத வேள்விகளில் உயிர்கள் பலி கொடுக்கப் பெற்றன என்பதை,

**அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின், ஒன்றன்**
**உயிர்செகுத்து உண்ணாமை நன்று** (யாகப் பொருள்களைத் தீயில் சொரிந்து ஆயிரம் வேள்விகள் செய்வதை விட, ஒன்றன் உயிரைக் கொன்று அதன் மாமிசத்தை உண்ணாதிருத்தல் நல்லது) என்னும் குறள் (259) வழி திருவள்ளுவர் குறிப்பிடுகிறார். வழக்கமாக 'அவி' (தேவர் உணவு) என்பதற்கு நெய் முதலியவை என்றுதான் பிற்கால உரையாசிரியர்கள் பொருள் காண்கின்றனரே தவிர, விலங்குகள் என்பதை ஒப்புக் கொள்ள மறுக்கின்றனர்.

## சமத்கார உரை

வேதியர் குலத்தில் தோன்றியவரான - வேதத்தை நன்கு அறிந்தவரான - வேத வேள்விகளை ஆதரித்தவரான ஞானசம்பந்தப் பிள்ளையார், தம்முடைய தில்லைத் (கோயில்) திருப்பதிகத்தில்

‘பசுவேட்டு எரிஓம்பும்’ (1:80:2) (பசுவைக் கொன்று யாகத்தைச் செய்கின்ற) என்று ஒளிவுமறைவு இன்றிக் குறிப்பிடுகிறார். ஆனால் பிற்கால உரையாசிரியர்கள் ‘பசு’ என்பதை ‘ஆன்மபோதம்’ (ஆன்மாவைப் பற்றிய அறிவு) என்று கூறி நழுவ முயல்கின்றனர். (அந்த உரையாசிரியர்கள் வேதநெறியினும் பார்க்கச் சைவநெறியையே வலியுறுத்துகின்றனர் என்று இதற்கு ஒரு பெரியவர் சமாதானம் கூற முயல்கிறார்.) இருந்தாலும் வேதவேள்விகளில் உயிர்ப்பலி – குறிப்பாகப் பசுக்கள் பலியிடப் பெற்றதைக் காஞ்சி சங்கராச்சாரிய சுவாமிகளே கூறியும், அதற்கு ஆதரவு தெரிவித்தும் இருக்கிறார்.

## சாத்விகத்தில் உயிர்வதையா?

சாத்விகமான வாழ்க்கை முறைக்கென்று ஏற்பட்ட பிரிவினரிடமே உயிர்களை வதை செய்யும் அம்சம் இருப்பதாகத் தோன்றும் யாகங்களை வேதங்கள் விதித்திருக்கின்றன என்றால், அதில் நியாயம் இல்லாமல் இருக்குமா? என்று கூறி, யாகங்களில் உயிர்கள் பலியிடப் பெறுவதற்கு நியாயம் கற்பிக்க முயல்கிறார் சங்கராச்சாரிய சுவாமிகள்.

யக்ஞப் பலியால் (யாகத்திற்காக மேற்கொள்ளப் பெறும் உயிர்ப்பலியால்) சிவ தேவ சக்திகள் திருப்தி அடைந்து, உலகத்துக்கு நல்லது செய்கின்றன; பலியாகும் பிராணியும் நல்ல கதியை அடைகிறது - இது அவர் கற்பிக்கும் நியாயம். (தெய்வத்தின் குரல் 5, பக். 335) (வேள்விக்குப் பயன்படுத்துகின்ற கொடி, மரம், பசு, விலங்கு, பட்சி (பறவை)கள் போன்றவை பின்னர் மேலோன கதி(நிலை)யை அடைகின்றன என்கிறது மனுதர்ம சாஸ்திரம் (அத். 5;40)

யாகத்தைக் கொண்டு நீங்கள் தேவர்களைத் திருப்தி செய்யுங்கள். அந்தத் தேவர்கள் மழை முதலியவற்றால் உங்களுக்கு நலத்தைச் செய்வார்கள். இப்படியே நீங்கள் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொண்டு மேலான நன்மை பல அடையுங்கள். இவ்வாறு அவர்களால் (தேவர்களால்) கொடுக்கபெற்று, (அதற்காக) அவர்களுக்குக் கைம்மாறு செய்யாது நுகர்பவன் (அனுபவிப்பவன்) திருடன் என்று கீதை (அத். 3, சுலோ. 11, 12) கூறுகிறது.

இவ்வாறு நாம் அடைந்த நன்மைகளுக்குக் கைம்மாறாகச் செய்யும் யாகங்களில் ஆகுதியாக (தேவ உணவாக)ப் பிராணிகளின் வபையைக் கொடுக்கச் சொல்லியிருக்கிறது. (வபை - வயிற்று நாபிக்குள் வெண் துகில் போன்ற புரையாகிய நிணம்), இவ்வாறு பசுவின் வபையை அந்தணர் ஓமத்தீயில் இட்டனர் என்பதைத் திருவிளையாடற் புராணம் தெளிவாகக் கூறுகிறது.

'உயிர்செகுத்த. . . . . . ஆவாய், வேதம் பணித்திடும் வபையை வாங்கிப் படர்எரி சுவைமுன் பார்க்கக், குணித்த வானாடர்க்கு ஊட்டிக் கோதிலா வேள்வி செய்தான்' (மாணிக்கம் விற்ற படலம் 34) (உயிர் போக்கப் பெற்ற பசுவிடமிருந்து, வேதம் விதித்த வபையை எடுத்துப் படர்ந்த வேள்வித் தீயானது முன்னே சுவை பார்க்கும் பொருட்டு இட்டு, அதன் வழி தேவர்களை உண்பித்துக் குற்றமில்லாத வேள்வியைச் செய்து முடித்தான்) என்று பரஞ்சோதி முனிவர் பாடுகிறார்.

எப்படி அந்தப் பசு கொல்லப்படுகிறது? வாயைப் புதைத்து உயிர்ப் படங்க வீட்டி மாய்த்தனர் (வாயைப் பொத்தி மூச்சு அடங்கக் கொன்றனர்). அண்மையில் கன்று ஈன்ற பசு ஒன்று தன்னை முட்ட வந்தது என்பதற்காக அதனைக் கோலினால் இடைச்சிறுவன் அடித்தபோது, அவன்மீது கோபமுற்று, அவனை விலக்கிப் பசு மேய்க்கும் தொழிலை, விசாரசருமானார் (பின்னர் சண்டேசுர நாயனார்) தாமே மேற்கொண்டார் என்று சேக்கிழார் பாடுகிறார். (பெ.புரா.சண்டேசுர நாயனார் புரா. 17-24) அத்தனை புனிதம் வாய்ந்தவர்களான மறையோர், பசுவை எவ்வளவு சித்திரவதை செய்து கொன்றிருக்கின்றனர் என்பது சிந்திக்கத்தக்கது. இத்தகைய கொடுமையானதொரு யாகம் தேவைதானா?

## நரமேதி யாகம்

(நரமேதி - நரபலி இட்டுச் செய்வது) திரிசங்குவின் புத்திரன் அரிச்சந்திரன். புத்திரப் பேறு இல்லாதிருந்த அவன் வருணனிடம், எனக்குப் பிள்ளைப்பேறு கிடைத்தால் அவனையே புருஷப்பசுவாகக் கொண்டு உன்னைத் திருப்தி செய்கிறேன் என்று வாக்குக் கொடுத்தவன், மகன் பிறந்ததும் அதை நிறைவேற்றாது இருந்தான். அதை அறிந்த மகனும் அச்சமுற்றுக், காட்டிற்குச் சென்று மறைந்து வாழ்ந்தான். இதனால் சினமுற்ற வருணன் அரசனுக்கு மகோதர (பெருவயிற்று) நோயை உண்டாக்க, அதை அறிந்த மகன் நாட்டுக்கு விரைகிறான். அசிகிரதன் என்னும் அந்தணனின் மகனான சுநச்சேபனை விலை கொடுத்து வாங்கி, அவனை யாகப்பசுவாக்கி வருணனைத் திருப்தி செய்கிறான் மகன்; அரசனும் மகோதர நோயிலிருந்து விடுபடுகிறான்; இருப்பினும், விசுவாமித்திரரால் சுநச்சேபன் காப்பாற்றப் பெறுகிறான். (அரிச்சந்திர புராணத்திலிருந்து இதை எடுத்துக் காட்டுகிறது அபிதான சிந்தாமணி, பக். 86)

## தர்மத்தைக் காக்க ஹிம்ஸை

தர்மத்துக்காகச் செய்ய வேண்டியது எப்படி இருந்தாலும் பண்ண வேண்டும். ஹிம்ஸை என்று பார்க்கக் கூடாது - காஞ்சிப் பெரியவர் கற்பிக்கும் நியாயம் இது. (தெ. குரல் 2, பக். 283) (வேள்விக்கென்றே பசுக்கள் பிரமனால் படைக்கப்பெற்றன. உலக நன்மையை முன்னிட்டே நடைபெறுவனவாகிய வேள்விகள் செய்யப்படும் போது அது பசுவதை ஆகாது. (மனுதர்மம், அத். 5; 39)

பிராமணர்கள் செய்வதில் மிக உயர்ந்த யாகமாகக் கூறுப்பெறுவது வாஜபேயம் (யாகம் 21ல் அந்தணர், மற்றும் அரசர்களால் செய்யப்பெறும் யாகவகை). அந்த யாகத்தில் 23 பசுக்களைப் பலி கொடுக்கச் சொல்லியிருக்கிறது. மேலும், ஹோமம் செய்யும் பிராமணர் (ரித்விக்குகள்) இடாவதாரணம் என்பதாகப் பசுவின் இன்னஇன்ன அங்கங்களிலிருந்து இந்த அளவு மாமிசம் சாப்பிட வேண்டும் என்றும் சொல்லப் பெற்றிருக்கிறது. (யாகத்தில் மிஞ்சியதை உண்ணும் நல்லோர், எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர் - கீதை அத். 3 சுலோ. 13)

## உண்ண மறுப்பது பாவம்!

அது துவரம்பருப்பு அளவுக்குச் சற்று பெரிதாகத்தான் இருக்கும். அதிலும் புளிப்போ, காரமோ தித்திப்போ சேர்க்காமல், ருசி பார்க்காமல் அப்படியே முழுங்கத்தான் வேண்டும் என்று பெரியவர் கூறுகிறார். (தெ.கு. 2, பக். 285, 286) பிராமணர்கள் சாப்பிடுவது என்பது, யக்ஞப் பிரசாதம் (ஹோமப் பிரசாதம் என்ற மரியாதைக்காக ஒரு குன்றுமணி அளவுதான்; வயிறு புடைக்க அல்ல என்று மேலும் அவர் சொல்கிறார். (சிரார்த்தத்தில் வரிக்க (நியமிக்க)ப் பெற்ற அந்தணன், புலால் உண்ணலாகாது என்று எண்ணி உண்ண மறுத்தால், அவன் 21 பிறவிகள் பசுவாய்ப் பிறப்பான் - மனுதர்ம சாஸ்திரம், அத் 5; 35).

இவ்வளவுக்குப் பின்னரும், 'பசுவேட்டு எரிஓம்பும்' என்பதற்கு 'ஆன்மபோதத்தைப் பலியிட்டு' என்று பொருள் கூறிச் சமாளிப்பவர்களை என்னவென்று சொல்வது?

திருவள்ளுவர் போன்ற அறநெறியாளர்களும், பௌத்தம், சமணம் போன்ற கொல்லாமையைக் குறிக்கோளாகக் கொண்ட சமயங்களும், மத்வாச்சாரியார் (துவைத மதத்தை நிறுவியவர்; 13ஆம் நூற்றாண்டினர்.) போன்ற மகான்களும் கொதித்து எழுந்த பின்னர்தான், வேத வேள்களில் உயிர்ப்பலி நிறுத்தப் பெற்றிருக்கிறது என்று கருத

முடிகிறது. வேதம், உயிர்ப்பலிக்கு இடம் கொடுத்தாலும், தற்காலத்தில் இத்தகைய யாகங்கள் எதனையும் மறையவர் செய்யவில்லை என்பது மகிழ்ச்சிக்கு உரியது.

## வேறு கோணத்தில் வேள்வி

வேள்விகளை மனித வாழ்க்கையுடன் இணைத்துப் புதிய கோணத்தில் அவற்றைக் காணுகிறார் சுவாமி சித்பவானந்தா. மனிதனது உடல் வாழ்க்கையை உறுதிப்படுத்துவதற்கான வழிமுறையை நல்கினால் அது வேள்கி ஆகிறது; நேர்மையான வழியில் மனிதனை நல்ல உழைப்பாளி ஆக்கினால் அது வேள்வி ஆகிறது; ஈட்டிய செல்வத்தை எல்லார்க்கும் பயன்படும்படி செய்தால் அது வேள்வி ஆகிறது; உணவைப் பக்குவப்படுத்தித் தெய்வத்தின் பெயரால் அதைப் பலரோடு பங்கிட்டுக் கொண்டால், அது வேள்வி ஆகிறது; கல்வியையும், நல்லறிவையும் போதிக்கும் போது அது ஞானவேள்வி ஆகிறது; தெய்வ வழிபாட்டில் மக்களை ஈடுபடுத்துவதும் வேள்வியே; ஹோமாக்கினி அல்லது வேள்வித்தீ என்பது ஒரு சின்னம் மட்டும்தான்; வாழ்வாங்கு வாழ்ந்து மனிதன் தன்னை இறைவனிடம் ஒப்படைப் பானாகில் அதுவே உண்மையான வேள்வியாகும். (திருவாசகம், விளக்கவுரை, பக். 51)

## மாறுபட்ட மறுபிறப்பு

வேதங்களில் மறுபிறப்புப் பற்றிச் சொல்லப்பெறவில்லை. மரணத்துக்குப் பிறகு நல்ல உயிர்கள் இன்பத்தை அனுபவிக்கின்றன என்றும், தீய உயிர்கள் அழிந்து போகின்றன என்றும் மட்டுமே வேதங்கள் கூறுகின்றன. எனவே மறுபிறப்பை இந்துக்கள் நம்பத் தொடங்கியபோது அது வேதங்களுக்கு முரண்பட்ட கருத்தாக இருந்தது. இந்த இக்கட்டைப் போக்கப் பண்டிதர்கள் ஒரு சமரசத் தீர்வைக் கண்டனர். மரணத்துக்குப் பிறகு உயிர்கள் யமதர்மராஜன் முன் நிறுத்தப்பெறுகின்றன என்றும், ஓர் உயிர் செய்த செயல்களை வைத்து யமதர்மன் தீர்ப்புச் சொல்ல, அந்த உயிர் மோட்சத்திலோ, நரகத்திலோ சிறிது காலம் இருந்துவிட்டு, மறுபிறப்பு எடுகிறது என்றும் ஒரு தத்துவம் உருவாக்கப்பெற்றது. (பி.சி.கணேசன், இந்துமதப் பழக்க வழக்கங்கள், பக். 78, 79)

இவ்வாறு மறுபிறப்பில் உறுதியான நம்பிக்கை ஏற்பட்டதால் தாங்கள் செய்யும் பாவ - புண்ணியங்களுக்கு ஏற்பவே மறுபிறப்பு அமைகிறது என்னும் எண்ணம் வலுப்பெற்றதால், இந்துக்கள் தங்கள் துன்பங்கள் - துயரங்களை விதியே என்று ஏற்றுச் சகித்துக் கொள்ளு

கின்றனர். இதனால் சமூக நியாயங்களுக்காகப் போராடும் மனப்பான்மை அவர்களுக்கு இல்லாமல் போய்விடுகிறது. தாங்கள் முற்பிறப்பில் செய்த பாவங்களுக்கு, இப்பிறப்பில் (தல யாத்திரைகள் போன்றவற்றின் வழி) கழுவாய் தேடுவதும், அதன்வழி அடுத்துவரும் பிறப்பிலாவது இன்பம் கிட்டாதா என்று ஏங்குவதும் அவர்களுக்குப் பழகிப் போய்விட்டது.

விபசாரத்தில் ஈடுபடுகிற பெண் அடுத்த பிறப்பில் குள்ளநரியாகப் பிறப்பாள் என்றும், முறை தவறிப் பெண் உறவு கொள்ளுகிறவன் மறுபிறப்பில் கழுதையாகப் பிறப்பான் என்றும் சொல்லப்பெற்றிருக்கிறது. இவ்வாறெல்லாம் இல்லாமல், பிறப்பைத் தவிர்ப்பதே (வீடுபேறு பெறுவதே) மனிதர்களின் குறிக்கோளாக இருக்க வேண்டும் என இந்து தர்மம் கூறுகிறது. (மேற்படி நூல், மேற்படிப் பக்கங்கள்.)

## வேதக் கோயில்

திருமுறைகளின் சிறப்பினைச் சைவ சமயத்தினர் உணரத் தொடங்கிய பின்னர், அவற்றைக் கோயில்களில் ஓதுவது, பாராயணம் செய்வது என்பதோடு, திருக்கோயில்களிலும், அவற்றுக்குத் திருமுறைக் கோயில்கள் அமைக்கப்பெறலாயின. தமிழகத்தின் பெரியகோயில்கள் பலவற்றில் இத்தகைய கோயில்கள் அமைந்துள்ளன. (மலேசியாவில் தான் அத்தகைய கோயில்கள் அதிக அளவில் இன்னமும் அமையவில்லை!)

திருமுறைக் கோயில் போன்று, வேதங்களுக்குக் கோயில் அமைக்கும் முயற்சியிலும் ஒருவர் ஈடுபட்டார். அதற்காக அவர் மேற்கொண்ட நடவடிக்கைகள் வியக்கத்தக்கவை.

பஞ்சாபைச் சேர்ந்த சந்திரேசுவரர், இளமையிலேயே பார்வை இழந்தவர். குருவின் ஆணைப்படி சமய நூல்கள் பலவற்றை மனப்பாடம் செய்து, அதன் விளைவாக அபரிமிதமான நினைவாற்றலைப் பெற்றார். கேள்வி வாயிலாகவே, நான்கு வேதங்களையும் கற்று, அவற்றில் அபாரப் புலமையும் பெற்றார். பின்னர் துறவறம் பூண்டு, சுவாமி கங்கேசுவரானந்தர் என்னும் தீட்சாநாமத்தோடு, வடநாட்டில் சநாதன தர்மத்தைப் பரப்பப் பல கல்வி நிலையங்களைத் தொடங்கினார்.

வேதங்களில் பாண்டித்தியம் பெற்றுத் திகழ்ந்த அவர், நான்கு வேதங்களையும் நல்லதொரு புத்தக வடிவில் வெளியிட வேண்டும்; சீக்கிய மத்ததினர் குரு கிரந்த சாஹிபை வழிபடுவது போன்று,

இந்துக்கள் வேதங்களை வழிபட வகை செய்யவேண்டும் என விழைந்தார்.

நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் சென்று ஓலைச்சுவடிகளைத் திரட்டி, வேதவிற்பன்னர்களைக் கொண்டு அவற்றைச் சோதித்து, அவற்றோடு வேதப்பகுதிகளின் சம்ஹிதை, மகாவாக்கியம், உபநிஷதம் ஆகியவற்றையும் இணைத்து, அதற்கெனத் தயாரிக்கப்பெற்ற தனிப்பட்ட காகிதம், புதிதாதக வார்க்கப்பெற்ற எழுத்துக்கள் ஆகியவற்றில், 20 அங்குல நீளம், பதினைந்து அங்குல அகலமும் உள்ள ஏறத்தாழ ஆயிரம் பக்கங்களைக் கொண்ட 20 கிலோ எடையுள்ள வேதப்புத்தகத்தை அச்சிட்டார்.

அப்புத்தகங்கள் விற்கப்பெறவில்லை; மாறாக அவரே மடங்கள், கல்வி நிலையங்கள், அறச்சாலைகள் முதலியவற்றுக்கு எடுத்துச் சென்று, முறைப்படி அவற்றை வழிபடு கோயிலாக ஆக்கினார். தென்னாட்டிலும் காஞ்சி, மதுரை, சென்னை, கோவை, திருப்பதி, ஹைதராபாத், பெங்களூர் ஆகிய நகரங்களில் இத்தகைய வேதக் கோயில்கள் நிறுவப்பெற்றுள்ளன. (ரா.வீழிநாதன், காசியாத்திரை, பக். 115, 116)

## வேதாங்கம்

முன்பு நாம் கண்ட வேதபுருஷனுக்கு மூக்கு, வாய், கை, காது, பாதம், கண் என ஆறு அங்கங்கள் உள்ளன. அவையே வேதாங்கங்கள் எனப்பெறுகின்றன. அவையாவன; சிக்ஷை (எழுத்திலக்கணம்) -மூக்கு; வியாகரணம் (சொல்லிக்கணணம்) - வாய்; கல்பம் (கர்மங்களைச் செய்யும் முறை) கை; நிருத்தம் (நிகண்டு) - காது; சந்தஸ் (பாவிலக்கணம்) - பாதம்; ஜோதிடம் -கண்.

## மணிமேகலையில் வேதாங்கம்

வேதாங்கங்களின் இந்த அங்க அமைப்பினை மணிமேகலைக் காப்பியமும் (கி.பி. 140) குறிப்பிடுகிறது.

கற்பம் கை,சந் தம்கால், எண்கண்,
தெற்றென் நிருத்தம் செரி,சிக் கைமூக்கு,
உற்ற வியாகர ணம்முகம் பெற்றுச்
சார்பில் தோன்றா ஆரண வேதம் (27ஆம் காதை, 100–104)

(கற்பம் என்னும் அங்கம் கையாகவும், சந்தம் என்பது காலாகவும், கணிதம் (ஜோதிடம்) என்பது கண்ணாகவும், தெற்றென விளக்கம் செய்யும் நிருத்தம் என்னும் அங்கம் காதாகவும், சிக்ஷை மூக்காகவும்,

இவற்றோடு பொருத்தும் சொல் இலக்கணம் (வியாகரணம்) என்னும் அங்கம் முகமாகவும் கொண்டு, யாதொன்றையும் சார்ந்து தோன்றுதல் இல்லாது, தான்தோன்றியாகிய ஆரணமாகிய வேதம்.)

அவற்றை இனி ஒவ்வொன்றாகக் காண்போம்.

## 1. சிக்ஷை

வேதங்களை எடுத்தல், படுத்தல் முதலிய இசை வேறுபாடுகளால் உச்சரிக்குமாறு உணர்த்துவது சிக்ஷை (எழுத்து இலக்கணம்).

மந்திரங்களில் ஒவ்வொரு எழுத்தும் இப்படி உண்டாக வேண்டும்; அதன் ஒலி இப்படி இருக்க வேண்டும் என்றெல்லாம் சிக்ஷா சாத்திரம் விளக்குகிறது. வேத அட்சரங்களை எவ்வளவு கவனமாகச் சொல்ல வேண்டும் என்பதற்குப் பாணினி மஹரிஷி, தாம் செய்துள்ள இலக்கண நூலில் (பாணினீயம்) பின்வருமாறு கூறுகிறார்: "வேத அட்சரங்களைத் தெளிவாகச் சொல்ல வேண்டும்; ஒலி சிறிது கூடக் குழறுபடி ஆகக்கூடாது; ஒலி நழுவி விடவே கூடாது; அதற்காக நறுக்கு நறுக்கு என்று சொல்லவும் கூடாது. வேத எழுத்துக்களைக் கீழே நழுவாதபடியும், மிக அழுத்தி வதைக்காமலும் உச்சரிக்க வேண்டும். எப்படி என்றால், ஒரு பெண் புலி தன் குட்டிகளைக் கவ்விக் கொண்டு போவது போல" என்று மிக அழகாக அவர் தெளிவு படுத்தி இருக்கிறார். (புலியோ, பூனையோ தன் குட்டியைப் பல்லால் கவ்வித்தான் தூக்கிச் செல்லும்; அதே நேரத்தில் குட்டிக்குச் சிறிதுகூட வலிக்காமலும் தூக்கிச் செல்லும். அது போன்று எழுத்துக்களைச் சிதைக்காமலும், குலைக்காமலும் உச்சரிப்பதுதான் மொழிக்கு அழகூட்டும். இது தமிழுக்கும் பொருத்தும்!)

## 2. வியாகரணம்

வேதங்களின் எழுத்து - சொல் - பொருள் இயல்புகளை உணர்த்துவது வியாகரணம் (வடமொழி இலக்கணம்). இது வேதத்தின் வாயாகக் கருதப் பெறுகிறது.

வியாகரணங்கள் பல உள்ளன என்றும், அவற்றில் மூன்று வியாகரண சாஸ்திரங்கள் முக்கியமாகக் கருதப் பெறுகின்றன என்றும் காஞ்சிப் பெரியவர் கூறுகிறார். பாணினி மஹரிஷி செய்த வியாகரணம் தலையாயது; அந்த வியாகரண சூத்திரங்களுக்கு வரருசி என்பவர் செய்த விரிவுரை; பதஞ்சலி செய்த பாஷ்யம். இவை மூன்றும் முக்கியமானவையாக உள்ளன என்று அவர் கூறுகிறார்.

நவ வியாகரணம் என்று வடமொழியில் ஒன்பது இலக்கண நூல்கள் குறிப்பிடப் பெறுகின்றன. ராம பக்த ஹனுமானும், சூரியனிடமிருந்து அவற்றைக் கற்றுச் சிறந்த பண்டிதராக விளங்கினாராம். அவரை வியாகரண பண்டிதர் என்று குறிப்பிடுவதுண்டு.

### சக்கரா – கரணம்

முற்காலத்தில் போஜராஜனின் (வடமொழிக் கவிஞர்களைப் போற்றி ஆதரித்த ஓர் அரசன்; சாகுந்தலம் போன்ற சாகா வரம்பெற்ற வடமொழி இலக்கியங்களைப் படைத்த காளிதாசனை உயிர் நண்பராகக் கொண்டவன்) தலைநகராக விளங்கிய 'தாரா' என்னும் (இப்போது 'தார்') பட்டணத்தில் ஒரு பள்ளிவாசல் உள்ளது. அங்கு வியாகரணம் எவ்வளவு உண்டோ அவ்வளவையும் சக்கராகாரமாக (வட்ட வடிவமாக)ப் பாடல்களாக அமைத்து, Chart (விளக்க வரைப் படம்) வடிவத்தில் எழுதி வைத்திருக்கிறது என்னும் அரிய தகவலையும் காஞ்சிப் பெரியவர் கூறுகிறார்.

### 3. சந்தஸ்

செய்யுள் அடிகள், அவற்றில் உள்ள எழுத்துகளின் எண்ணிக்கை ஆகியவை காரணமாகப் பலவகைப்படும் வேத சந்தங்களை விளக்குவது சந்தஸ் (செய்யுள் இலக்கணம், பாவிலக்கணம், யாப்பிலக்கணம்). இது வேதத்தின் பாதமாக வருணிக்கப் பெறுகிறது.

செய்யுளின் நீளம், அதன் எழுத்துகள் அமைய வேண்டிய முறை ஆகியவற்றை நிர்ணயம் செய்வது இந்த சந்தஸ், பிங்களர் என்பவர் எழுதிய சந்தஸ் ஸூத்திரம்தான் இப்போது முக்கியமான நூலாகத் திகழ்கிறது.

செய்யுள் உருவில் உள்ள வேத மந்திரங்கள் யாவும் சந்தஸ் எனப்பெறும்; வேதத்தில் வராத செய்யுள்களைச் சுலோகம் என்று சொல்வர்.

ஒரு வேத மந்திரம் அல்லது சுலோகம், பெரும்பாலும் சமமான எழுத்துகள் அல்லது சமமான மாத்திரைகள் கொண்ட நான்கு பாதங்களாகப் பிரிந்திருக்கும் விநாயகருக்குரிய- எல்லோருக்கும் தெரிந்ததான ஒரு சுலோகத்தை இதற்கு எடுத்துக் காட்டாகக் காஞ்சிப் பெரியவர் கூறுகிறார்.

**சுக்லாம்பரதரம் விஷ்ணும்! சசிவர்ணம் சதுர்புஜம்!**
**ப்ரஸன்னவதனம் த்யோயேத்! ஸர்வவிக்நோப சாந்தயே!***

இதில் முதல் வரியில் இரு பாதங்கள், அடுத்த வரியில் இரு பாதங்கள் உள்ளன; ஒவ்வொரு பாதத்திலும் (மெய் எழுத்துகளை நீக்கி) எட்டு எழுத்துகள் அமைந்துள்ளன. (*இந்த சுலோகம் பற்றிய சில குறிப்புகள் இணைப்பு நான்கில் காணப்பெறுகின்றன.)

வேதத்தில் ஓர் எழுத்தைக்கூடக் கூட்டவோ, குறைக்கவோ முடியாதபடி மூலபாடத்தை அப்படியே காப்பாற்றித் தருவது சந்தஸ் சாத்திரந்தான். இது மந்திரங்களுக்கு ஆதாரம். கால் என்று ஆதாரத்தின் மேல் நாம் நிற்பது போன்று, வேதபுருஷன் சந்தஸ் என்று ஆதாரத்தின் மீது நிற்கிறார்.

## 4. நிருக்தம்

வேதங்களின் சொற்பொருள்களை உணர்த்துவது நிருக்தம் (அரும்பதவுரை) தமிழில் 'நிகண்டு' என்று சொல்லப் பெறுவது. ஒவ்வொரு வார்த்தையும் இந்தத் தாதுவி (வினைப் பகுதியி)லிருந்து வந்தது என்று எழுத்து எழுத்தாகப் பிரித்து ஒவ்வொரு எழுத்துக்கும் பொருள் சொல்வது நிருக்த சாஸ்திரம். அதனால் இது வேதத்தின் காது எனப்பெறுகிறது.

உதாரணத்திற்கு ஹ்ருதயம் என்ற சொல்லை எடுத்துக்கொண்டு, அதற்குப் எப்படிப் பொருள் சொல்லப் பெறுகிறது என்று விளக்குகிறார் காஞ்சி முனிவர். (குறிப்பாகச் சைவர்கள் தெரிந்து கொள்ள வேண்டியது.)

ஹ்ருத்+அயம் - 'ஹி(இ)ருதயத்தில் அவன் இருக்கிறான்' என்பது இதன் பொருள். 'ஹ்ருத்' என்பது பௌதிகமான (பூத சம்பந்தமான) இருதயத்தின் பெயர்: அதில், 'அயம்' என்று, அதிலுள்ள ஈஸ்வரனையும் சேர்த்துச் சொல்வதால், அதன் ஆன்மிகமான முக்கியத்துவம் குறிப்பிடப்பெற்றுவிடுகிறது. ஹ்ருத்தில் பரமேசுவரன் இருப்பதால், அதற்கு ஹ்ருதயம் என்று பெயர் வந்தது என்று தெரிகிறது. இப்படி ஒவ்வொரு பதத்திற்கும் காரணம் உண்டு; அதை ஆராய்வது தான் நிருக்தம்.

## 5. ஜ்யோதிஷம்

ஜ்யோதிஷம் (சோதிடம்) என்பது நட்சத்திர- கிரகங்களைப் பற்றிய நூல். வேதத்தில் சொல்லப் பெறுகிற கருமங்கள், செய்தற்குரிய கால விசேடங்கள் ஆகியவற்றை இது உணர்த்துகிறது. இது வேதத்தின் கண்ணாகக் கருதப் பெறுகிறது. காரணம், தொலைவிலுள்ள பொருள் களைக் கண்ணால் பார்த்தே தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது.

அது போன்று, காலத்தால் தொலைவில் உள்ள அதாவது- பல ஆண்டுகளுக்கு முன்னால், அல்லது பல ஆண்டுகளுக்குப் பின்னால் உள்ள கிரக நிலைகளைத் தெரிந்து கொள்ள ஜோதிட சாஸ்திரம்தான் உதவுகிறது; அதனால்தான் இந்த சாஸ்திரம் வேதபுருஷனின் கண் என்று சொல்லப் பெறுகிறது.

ஜோதிடத்துக்கு நயனம் என்ற பெயரும் உண்டு 'நய' என்றால் அழைத்துக் கொண்டு போவது; பார்வை இல்லாதவரை மற்றொருவர் அழைத்துப் போவது போன்று, வேதங்களில் சொல்லப் பெறுகிற கர்மாக்களைச் செய்வதற்கான காலத்தை நிர்ணயம் செய்து, அந்தச் செயலுக்கு நம்மை இட்டுச் செல்கிற கண்ணாக இருப்பது ஜோதிடமே.

ஜோதிட சாஸ்திரத்தில் சித்தாந்த ஸ்கந்தம், ஹோரா ஸ்கந்தம், சம்ஹிதா ஸ்கந்தம் என மூன்று ஸ்கந்தங்கள் இருப்பதால், இதை ஸ்கந்த த்ரயாத்மகம் என்று சொல்வதும் உண்டு. (ஸ்கந்தம்- பிரிவு.)

Arithmetic,Trigonometry, Geometry, Algebra என்ற பலவிதமாக உள்ள கணிதங்கள் எல்லாம் சித்தாந்த ஸ்கந்தத்தில் அடங்கி இருக்கின்றன. ஒரு செயலைத் தொடங்கினால், அதன் தொடக்க கால கிரக நிலைகளைக் கொண்டு, மேலே நடக்கும் சுக-துக்கப் பலன்களைக் கூறும் பாகத்திற்கு ஹோரா ஸ்கந்தம் என்று பெயர். நிலத்தின் அடியில் உள்ள நீரோட்டம் போன்ற கண்ணுக்குத் தெரியாதவற்றுக்கான அடையாளங்கள், மற்றும் நறுமணப் பொருள்கள் செய்யும் விதம், வீடுகட்டும் அளவு, சகுன சாத்திரம், நிமித்த சாத்திரம் போன்ற வற்றையும் உள்ளடக்கியது சம்ஹிதா ஸ்கந்தம்.

ஒரு கொட்டகையின் மேற்கூரையில் காணப்பெறும் துவாரத்தின் வழியாகச் சூரிய ஒளி ஓர் இடத்தில் படுகிறது. அதே கிரணம் அடுத்த ஆண்டு எங்கே விழும் என்றால், நம்மால் சொல்லத் தெரியாது; ஆனால் ஜ்யோதிஷ சாஸ்திரத்தில் சொல்லியுள்ள கணனங்களைச் செய்தால் தெரியும் என்று காஞ்சிப் பெரியவர்கள் கூறுவதோடு இப்பகுதியை நிறைவு செய்வோம். (கணனம்- கிரக நடை முதலியவற்றைக் கவனித்தல்.)

## 6. கல்பம்

வேத புருஷனுக்குக், கல்பம் என்ற ஆறாவது அங்கம், 'கரம்' என்பார்கள். காரியங்களைச் செய்வதால் கைக்குக் கரம் என்று பெயர் ஏற்பட்டது. காரியங்களுக்கு நம்மை ஏவும் சாஸ்திரமே கல்பம்.

வேதத்தையும் சிக்ஷை, வியாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜோதிடம் ஆகியவற்றையும் தெரிந்து கொண்ட பிறகு என்ன செய்வது? இவற்றின் உதவியால் ஏதாவது நல்ல செயல்களைச் செய்ய வேண்டும். அவற்றைச் சொல்வதே கல்பம்.

கல்பத்தில் ஒவ்வொரு சாகைக்கும் கிருக சூத்திரம் (வீட்டில் செய்யப்பெறும் சிறிய கர்மங்கள்) என்றும், சிரௌத சூத்திரம் (சுருதி எனப்பெறும் வேதத்திலேயே பூரணமாக வருகிற யக்ஞம் முதலானவையே சிரௌதம் என்பவை; இவை விரிவாகச் செய்ய வேண்டிய பெரிய காரியங்களாகும்; இவற்றை வீட்டில் செய்ய முடியாது) என்றும் இரண்டு வகை உண்டு. கருத்தரிப்பது முதல் உடல் அக்னியில் எரிக்கப்பெறுவது வரை செய்யப் பெறுகின்ற 40 கிரியை வகைகளை இவ்விரு சூத்திரங்களும் சொல்கின்றன. (உயிரற்ற உடலை நெருப்பில் எரிப்பதும் ஒரு வகை ஹோமம்தான்: அந்த வேள்வியில் உடலே திரவியமாக நெருப்பில் ஹோமம் செய்யப் பெறுகிறது. எப்படி வேள்வியில் ஆகுதி செய்யும் பொருள்களை முதலில் நெய்யினால் தூய்மை செய்கிறோமோ, அது போன்றுதான் இறந்தவரின் உடலை வேள்வித் தீயில் ஆகுதி செய்யுமுன்னர், அதைத் தூய்மை செய்வதற்காகவே சில சடங்குகளைச் செய்கிறோம். உயிரற்ற உடலுக்கு ஏன் இத்தனை வகையான சடங்குகள் என்று கேட்போருக்கு இது பதிலாக அமைகிறது.)

(குறிப்பு: அக்கினி காரியம் செய்யாத துறவியரின் உடல்கள் மட்டும் அடக்கம் செய்யப்பெற வேண்டும்; ஏனையோரின் உடல்கள் தகனம்தான் செய்யப்பெற வேண்டும் என்பது ஐதிகம்.)

இதன் தொடர்பாக ஆன்மாவைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும் வகையில் அமைந்த எட்டு ஆன்ம குணங்களைக் கடைப்பிடித்து ஆன்மாவை உயர்த்திக் கொள்ள வேண்டும் என்று காஞ்சிப் பெரியவர்கள் கூறுகிறார். அவை யாவை என்று தெரிந்து கொள்வதோடு, வேதாங்கம் ஆறினையும் நிறைவு செய்வோம்.

## அஷ்ட குணங்கள்

எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்று இல்லாமல், இப்படித்தான் வாழ வேண்டும் என்று ஒரு வரையறை இருந்தால்தான் ஆணவம் அகலும்; ஆசை, வெறுப்பு, பயம், துக்கம் போன்றவை மறையும்; அப்போதுதான் உத்தமமான மனிதனாக வாழ முடியும். அதற்கு நம்மை இட்டுச் செல்லும் எட்டுக் குணங்களாவன:

தைய (அன்பு, அருள்); க்ஷாந்தி (பொறுமை); அநஸூயை (பொறாமை இன்மை); சௌசம் (சுத்தம்); அநாயாசம் (அலட்டிக் கொல்ளாதிருப்பது); மங்களம் (சுபம், ஆனந்தம்); அகார்ப்பண்யம் (லோபமின்மை, வள்ளல்தன்மை) அஸ்ப்ருஹா (பற்றின்மை, ஆசையின்மை).

தயை என்பது எல்லா உயிர்களிடமும் அன்பு காட்டுதல்; அருளுடமை; அன்பே எல்லாவற்றுக்கும் அடித்தளமாக- அடிநாதமாக அமைகிறது. க்ஷாந்தி என்றால் பொறுமையைக் கடைபிடிப்பது. நோயைப் பொறுத்துக் கொள்வது (தாங்க முடியாத நோயோ, துன்பமோ ஏற்படும்போது அதைத் தாங்கும் சக்தியை இப்பிறவிலேயே கொடுக்குமாறு இறைவனை வேண்டிக் கொள்ள வேண்டும் என்று பிருஹதாரண்யக உபநிஷத் கூறுகிறது); துன்பம் இழைப்போரையும் மன்னித்து அன்பு காட்டுவது.

அநஸூயை என்பது, அசூயை (பொறாமை) இல்லாதிருப்பது. நம்மைவிட மற்றொருவர் நல்ல நிலையில் இருந்தால் அது கண்டு பொறாமைப்படலாகாது; இறையருளை எண்ணிப் பெருமைப்பட வேண்டும்.

சௌசம் என்பது சுத்தம், தூய்மை; ஆசாரத்தோடு இருப்பது.

அநாயாசம் என்பது எதையும் ஒரு சுமையாகக் கருதாமல், எளிமையாக எடுத்துக் கொண்டு, பதற்றம் இல்லாமல் ஒரு செயலைச் செய்தல்.

மங்களம் என்பது ஆனந்தமாக, ஒரு கம்பீரத்தோடு இருப்பது. எதிலும், எப்போதும் மகிழ்ச்சியாக இருப்பது. நாமும் மகிழ்ச்சியாக வாழ்ந்து, பொங்கும் மங்களம் எங்கும் தங்குமாறு செய்ய வேண்டும்.

அகார்ப்பண்யம் என்றால் கருமித்தனம் இல்லாமல், இல்லை என்னாது கொடுக்கும் இயல்பு உடைமை. தன்னயே தாழ்த்திக் கொண்டு மனம் தளர்ந்து போகாதிருப்பதும் இந்த ரகத்தைச் சேர்ந்ததே. போர்க்களத்தில் மனம் தளர்ந்து போய்த் தேரில் அமர்ந்திருந்த அர்ஜுனன், தான் 'கார்ப்பண்ய தோஷ'த்தினால் பாதிக்கப் பெற்றிருப்ப தாகக் கண்ணனிடம் கூறுகிறான். (பகவத் கீதை, அத்.2, சுலோகம் 7)

அஸ்ப்ருஹா என்றால் பற்றின்மை, ஆசையின்மை. எல்லா இழிசெயல்களுக்கும் அடிப்படையாக இருப்பது ஆசைதான். இதை அகற்றுவது என்பது மிகக் கடினமானது. தர்ம சாஸ்திரங்களில் சொல்லப் பெற்ற கடமைகளைச் செய்து, மேற்கூறப்பெற்ற ஏழு குணங்களையும் கடைபிடித்துத்தான் இந்த ஆசையை- பற்றினை அகற்ற முடியும். (அற்றது

பற்று எனில் உற்றது வீடு (திருவாய்மொழி, 1:2:5). (உலகியல் மீதுள்ள பற்றுகளை அறவே நீக்கினால், ஆன்மா வீடுபேற்றினைப் பெறும் என்கிறார் நம்மாழ்வார்.)

## இணைப்பு

1. ஒன்றுக்கொன்று உச்சரிப்பு மாறுபட்டால் எத்தனை விபரீதம் உண்டாகிவிடும் என்பதற்கு, வேதத்திலேயே ( தைத்ரீய ஸம்ஹிதை (2:4:12யில்) ஒரு கதை இருக்கிறது.

துவஷ்டா என்பவன், இந்திரன் மீது பழி தீர்த்துக் கொள்ள விரும்பினான். அதற்காக இந்திரனைக் கொல்லத்தக்க ஆற்றல் படைத்த ஒரு பிள்ளை வேண்டும் ஒரு மந்திரம் சொல்லி யாகம் பண்ணினான். முறைப்படி மந்திரத்தின் கடைசி அடியில் 'சமமாகவும், இறக்கியும்' சொல்லியிருந்தால், துவஷ்டாவின் பிள்ளை 'இந்திரனைக் கொல்பவனாக வளரட்டும்' என்று பொருள் கொடுக்கும். அந்த ஒலியின் ஆற்றலே அந்தப் பிள்ளையை அப்படி வளர்த்திருக்கும். மாறாக அந்த அடியைத் தவறாக 'ஏற்றி இறக்கி' உச்சரித்து விட்டான்; அதனால் இந்திரனை இவன் கொல்பவனாக வளரட்டும் என்பதற்குப் பதிலாக, இந்திரன் இவனைக் கொல்பவனாக வளரட்டும் என்று, பொருள் தலைகீழாக மாறிவிட்டது. வார்த்தைகளும், எழுத்துகளும் மாறாவிட்டாலும் கூட, ஸ்வரங்களில் ஏற்பட்ட பிழையால், அவனுடைய பிள்ளையை இந்திரன் அழித்து விட்டான். துவஷ்டா, தன் பிள்ளையின் உயிருக்குத் தானே எமனாகி விட்டான்! (தெய்வத்தின் குரல் 2, பக். 231, 493, 494)

2. ஸ்ரீருத்ரம்: வேதம் நான்கினும் மெய்ப்பொருள் ஆவது நாதன் நமச்சி வாயவே (3:49:1) (நான்கு வேதங்களின் உண்மைப் பொருளாக விளங்குவது, அனைவர்க்கும் தலைவனாக விளங்கும் சிவபெருமானின் திருநாமமான நமச்சிவாய என்ற திருவைந்தெழுத்தாகும்) என்பது ஞானசம்பந்தர் வாக்கு. நான்கு வேதங்களில் அதர்வ வேதத்தை நீக்கி வேதம் மூன்று எனக் கொள்வதும் உண்டு. அதுபற்றியே வேதத்திரயீ என்று கூறும் வழக்கம் நிலவுகிறது. ரிக், யஜுர், சாமம் என்ற எஞ்சிய மூன்று வேதங்களில் நடுவணாக இருப்பது யஜுர் வேதம். அதன் தலைசிறந்த பகுதியாகக் கருதப்பெறுவது ஸ்ரீருத்ரம்.

யஜுர் வேத தைத்ரீய சம்ஹிதையின் ஏழு காண்டங்களுள் நாலாவது காண்டத்தின் நடுநாயகமாக நம: சிவாய ச சிவதராய ச (மங்கள வடிவினரும், தன்னை அடைந்தவரையும் சிவ மயமாக்கும்

அதிமங்கள வடிவினரும் ஆகிய உமக்கு நமஸ்காரம்) என்னும் அதிசூக்கும பஞ்சாட்சரம் பொதிந்திருக்கிறது. இதன் மத்தியில் சிவ என்ற இரண்டெழுத்து அடங்கியிருக்கிறது. இதை ஜீவரத்தினம் என்பர்.

ஸ்ரீருத்ரத்தை ருத்ரோபநிஷத் என்றும் சதருத்ரீயம் என்றும் கூறுவதும் உண்டு. சம்சாரத் தளைகளை நீக்கி முத்திக்குச் சாதனமாக அமைவதால் இது '(ருத்ர) உபநிஷத்' எனப் பெறுகிறது. நூற்றுக் கணக்கான வடிவங்களில் ஸ்ரீருத்ரன் இங்குப் போற்றப் பெறுவதால் 'சத(100) ருத்ரீயம்' என்று பெயர் பெறுகிறது.

ஒரு மரத்தின் வேரில் நீர் ஊற்றினால் கிளைகள் செழிப்படைவது போன்று ஸ்ரீருத்ர ஜபத்தால் எல்லாத் தேவதைகளும் மகிழ்ச்சி அடைகின்றனர். எனவே யார் யார் எந்தப் பயனை விரும்பினாலும், இதை ஜபித்துக் காரியசித்தி பெறலாம். பிரமாண்டம் (the universe) முழுவதும் பரவிய உடல், திருநீற்றுப் பூச்சால் பனியை ஒத்த ஒளி, பாம்பு ஆபரணங்கள், நீலகண்டம், பிறைச்சந்திரனைத் தரித்த சடாமுடி, வில் ஏந்திய கைகள், முக்கண், ருத்ராட்ச மாலை ஆகியவற்றுடன் கூடிய வடிவில் ஈசுவரனைத் தியானித்து ஸ்ரீருத்ரத்தால் போற்றினால், எல்லா நன்மைகளும் கைகூடும்.

## தமிழில் ருத்ரம்

வடமொழி வேதத்தைப் போலவே தமிழ் வேதமாகிய மூவர் தேவாரத்திலும், நடுவணதாகிய அப்பர் தேவாரத்தில் நடுநிற்கும் ஐந்தாம் திருமுறையில் 100 திருப்பதிகங்கள் உள்ளன. அவற்றில் நடுவணதாகிய 51வது திருப்பதிகத்தில் 11 பாடல்கள் இருக்கின்றன. அதன் நடுப்பாடலாகிய 6ஆவது பாடலில் சிவாய என்னும் அதிசூக்கும பஞ்சாட்சரம் பொதிந்திருக்கிறது.

'வானிடத்தவரும் மணம் வந்து அரன்தனை அருச்சிப்பர்' (தேவர்களும் மண்ணுலகத்திற்கு வந்து சிவபெருமானை வழிபடுவர்) என்னும் அருணந்தி சிவத்தின் வாக்குப்படி, தேவர்கள் வந்து வழிபடுவதைக் கண்ட மண்ணுலக மக்கள் வியப்படைகின்றனர். அவர்களைப் பின்பற்றிச் சிவாய என்னும் அதிசூக்கும் பஞ்சாட்சரத்தை ஓதி வழிபடுகின்றனர். அவ்வண்ணம் ஓதுவோருக்கு, எழில் மிக்க வானகத்தை உறைவிடமாகச் செய்து கொடுத்தார் பாலைத்துறைப் பரமன் என்று அந்தப் பாடலில் அப்பர் சுவாமிகள் கூறுகிறார்.

விண்ணி னார்பணிந்து ஏத்த, வியப்புறும்
மண்ணி னார்,மற வாது,சி வாயஎன்று

எண்ணி னார்க்குஇட மா,எழில் வானகம்
பண்ணி னார்,அவர் பாலைத் துறையரே. (5:51:6)

(திருக்கோயில்களில் - குறிப்பாகச் சிவாலயங்கலில் சிவனுக்கு அபிஷேகம் செய்யும் போது, கட்டாயம் ஸ்ரீருத்ர பாராயணம் செய்ய வேண்டும்; வடமொழி அறியாத (அல்லது தவறாக மந்திரங்களை உச்சரிக்கின்ற) அருச்சகர்களாக இருந்தால் ஸ்ரீருத்ரத்திற்குப் பதிலாக, அப்பர் சுவாமிகளின் இந்த முழுப் பதிகத்தையும் பாராயணம் செய்தவண்ணம் இறைவனுக்கு அபிஷேகம் செய்வது சிறப்பானது.)

## 3. வேதங்களைப் பற்றிக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. கூறும் சில தகவல்கள்

வாக்கு வன்மை உள்ளவன் காவியம் இயற்றுகிறான். ரிக் என்பது இறைவனின் எழில் மிகுந்த காவியம். ரிக் வேதம் ஞானநூல்; உலகில் உள்ள பொருள் அனைத்தையும் விளக்க வல்லது. வாக்கில் ஒளி வாய்ந்தவன் இனிமையாக அன்புடன் - பண்புடன் பிறருக்கு நலம் விளைவிக்கும் உண்மைகளையே பேசுவான். வாக்குச் சாதனை பெற்றவன் தான் ரிக் வேதம் பயின்ற பயனைப் பெறுவான்; வெறும் வேதம் ஓதியவன் அல்லன். ரிக் என்பது வாக்கு.

தூய திடமான மனம் உள்ளவனே சிறந்த செயல் ஆற்ற வல்லவன் ஆவான். சிறந்த செயல் வேள்வியே ஆகும்; மனத்தில் நல்ல எண்ணங்கள் நிரம்பினால் புலன்கள் நற்செயல் புரியும். யஜுர் வேதம் வேள்வி நூல்; மனச்சாதனை எய்தியவன்தான் யஜுர் வேதம் பயின்ற பயனைப் பெறுவான். யஜுர் என்பது மனம்.

உயிரோட்டத்தை உள்ளும் புறமும் அடக்கிச் சமமாக வைத்துக் கொண்டு, உயிரைப் போல எதிலும் ஒட்டாமல், நடுநிலையில் இருந்து உள்ளத்தைக் காப்பவனே இன்னிசை வல்லவன் ஆவான். சாம வேதம் இசை வேதம். சமநிலையில் வாழ்ந்து, உயிர் சாதிப்பவன் தான் சாமவேதம் பயின்ற பயனைப் பெறுவான் சாமம் என்பது பிராணன் (உயிர்).

தர்வம் என்றால் நடுக்கம்; அதர்வம் நடுக்கமின்மை. கண்ணாலும் காதாலும் நல்லவற்றையே கண்டு கேட்டு வாழ்பவனுக்கு எங்கும் எதிலும் நடுக்கம் இராது. இந்த நடுக்கமின்மை என்ற சாதனையை எய்தியவன்தான் அதர்வ வேதம் பயின்ற பயனுடையவன் ஆவான். நல்ல கண்ணும் காதும் அதர்வத்துக்கு இருப்பிடம்.

இப்படி வாக்கு வன்மை, மனத்திட்பம், உயிர்நட்பு, கண் - காதுகளின் தூய்மை ஆகிய நான்கும், நால்வேதம் பயின்றவனுக்கு

வாய்க்கின்றன என்று சுக்ல யஜுர் வேதம் 31-6ஐ மேற்கோள்காட்டிக் கா.ஸ்ரீ.ஸ்ரீ. எழுதியிருக்கிறார். (ஞானசம்பந்தம் 10.03.77, பக். 380)

4. சுக்லாம்பரதரம் என்று தொடங்கும் சுலோகதத்தின் பொருள்; வெண்மையான ஆடை உடுத்தவரும், எங்கும் நிறைந்திருப்பவரும், நிலவு போன்ற ஒளி உள்ளவரும், நான்கு கைகள் உடையவரும், ஆனந்தம் பொங்கும் முக மண்டலத்தை உடையவரும் (ஆகிய கணபதி) எல்லா இடையூறுகளையும் விலக்கிச் சாந்தியை உண்டாக்குவாராக!

இதில் ஒரு புதுமை என்னவென்றால் விநாயகர் பெயர் மருந்துக்குகூட இந்த சுலோகத்தில் குறிப்பிடப் பெறவில்லை சுக்லாம்பரதரம் - விஷ்ணும் - சசிவர்ணம் - சதுர்புஜம் - பிரசன்ன வதனம் என்கின்ற ஐந்து வார்த்தைகளும், விநாயகரை மட்டுமே குறிப்பிடுகின்றன என்றும் சொல்ல முடியாது. இவை மற்ற கடவுளருக்கும் பொருத்தக் கூடியவையே. எல்லா இடையூறுகளும் அடங்கி, விலகிப் போவதற்காக, இங்கு குறிப்பிடும் இறைவனைத் தியானிக்க வேண்டும் என்பது தான் விநாயகரைக் குறிப்பதாக இருக்கிறது; ஏனெனில் அவர்தாமே விக்கினங்களை - இடையூறுகளை அகற்றுபவர்? பெயரைக் குறிப்பிடாமலே விநாயகரைக் குறிக்கும் சுலோகமாக இது அமைகிறது.

இந்த சுலோகத்தைச் சொல்லி, மேலே குறிப்பிட்ட அவருடைய ஐந்து பண்புகளுக்கும் (சுக்லாம்பரதரம் - விஷ்ணும் - சசிவர்ணம் - சதுர்புஜம் - பிரசன்னவதனம்) ஒவ்வொரு முறையாக நெற்றிப் பொட்டில் குட்டிக் கொண்டு விநாயகரை வழிபட வேண்டும் என்கிறார் காஞ்சிப் பெரியவர். - (தெய்வத்தின் குரல் 4, பக். 19, 20)

(இது போன்று 10ஆவது திருமுறையான திருமந்திரத்தில் காணப்பெறும் விநாயகர் காப்புச் செய்யுளையும் கூறி, அதில் வரக்கூடிய ஐந்து கரத்தனை - யானை முகத்தனை - இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை - நந்தி மகன்தனை - ஞானக் கொழுந்தினை என்னும் ஐந்து பெயர்களுக்கும் ஐந்து முறை நெற்றிப் பொட்டில் குட்டிக் கொண்டும் விநாயகரை வழிபடலாம். இது திருமூலர் பாடியதன்று; இடைச்செருகல் என்று ஆய்வாளர்கள் கூறினாலும், வழிபாடு என்று வரும் போது, அதைப் பார்த்துக் கொண்டிருக்க வேண்டாமே!)

*நன்றி : இதோ இந்துசமயம், மலேசிய இந்து சங்க வெளியீடு*

# ஆகமம்

முதன் முதலில் மந்திர கிரியையில் இறைவன் லிங்க வடிவில் இருந்து ஐந்து முகத்தில் இருந்து முனிவர்களுக்கு 28 ஆகமங்களை உபதேசம் செய்தார். திருக்கைலாச மலையில் முனிவர்களுக்கு உபதேசம் செய்தார்.

பிரம்மாவுக்கு கடம்பமராக நின்ற பொழுது உபதேசம் செய்யப் பட்டது. ஒரு முறை உமாதேவிக்கு உபதேசம் செய்த பொழுது அதை கேட்காத படியால் பூலோகத்தில் வந்து பிறந்ததாகவும் உண்டு. அந்தகாசுரன் கடலுக்கடியில் ஆகமங்களை மறைத்து வைத்தான். அதை மகா விஷ்ணு ஸ்வேதவராக வெண்பன்றி அவதாரம் செய்து அதை மீண்டும் பூமிக்கும் கொண்டு வந்தார்.

கயிலாசமலையிலே 1000 பேருக்கு உபதேசம் செய்து கொண்டு இருந்த பொழுது அதை 999 பேரும் கவனிக்காத படியால் ஒருவர் மாத்திரம் கேட்டு அதைப் பாதுகாத்து வந்தார். குறிப்பிட்ட காலம் முடிய அவர் பூலோகத்தில் பிறக்க வேண்டும் என்ற காரணத்திற்காக மாணிக்கவாசகர் என்ற நாமத்துடன் வந்து அவதரித்தார். அவருக்கு இறைவன் குருந்த மரத்தடியில் ஆகமம் என்று சொல்லப்படுகின்றதை சிவஞானத்தை 28யும் உபதேசம் பண்ணினார்.

2ஆம் நூற்றாண்டு காலத்திலே திருமூலர் என்ற நாமத்துடன் அவதாரம் செய்து ஒருவருடம் ஒரு பாட்டு படி 3000 வருஷம் தவம் செய்து 28 ஆகமத்தில் உள்ள கருத்துக்களைத் திருமந்திரம் என்ற பெயரில் திருமூலநாயனார் அருளினார்.

2ஆம் நூற்றாண்டிலிருந்து 11ஆம் நூற்றாண்டு வரைக்கும் சமயத்துக்கும் பேரழிவு உண்டான போது பல அடியார்களும் தோன்றி மடங்கள் ஸ்தாபித்து சமயங்களை மக்களுக்கு பக்தி வரக்கூடிய தேவாரங்களையும் பாக்களையும் பாடி சமயத்தை அழிய விடாமலும் ஆலயங்களை பிற மதத்தவர்கள் அழித்த போது அதையும் பாண்டிய மன்னர்கள் தங்கள் அரண்மனைகள் சிறியதாக இருந்த போதும், ஆலயங்களை பெரும் கோயிலாக இருக்கச் செய்தனர். பல சமயங்கள் இந்திய நாட்டில் இருந்தபோதும், 72 சமயங்கள் தோன்றின. அதை

சங்கராச்சாரி அனல் வாதம் புனல் வாதம் செய்தும் மற்ற சமயங்களுடன் பல அற்புதங்கள் செய்து 72 மதம் இருந்ததை 4 மதமாக செய்து அந்த மதங்களில் சில மாற்றம் இருந்த போதும் ஒற்றுமையாக வழிபட செய்த பெருமை சங்கராச்சாரியாரையே சேரும். நாயன்மார் தோன்றிய போதும் சமயத்துக்கு அழிவு ஏற்பட்டது. அதையும் எதிர்த்து நின்று வாதம் செய்து நிலை நாட்டிய பெருமை நாயன்மாரை சாரும். பிறகும் 7 ஆண் நூற்றாண்டில் நாயன்மார்களால் அருளிய தேவாரங்கள் வேதாரணியத்தில் உள்ள ஆலயத்தில் வைத்து பூட்டப்பட்டு இருந்தது. அதை 11 ஆம் நூற்றாண்டில் இருந்த நம்பியாண்டான் என்னும் மன்னன் ஆலயத்துக்கு சென்று "பண்ணினோர் மொழியால்" என்ற தேவாரம் பாடியவுடன் கதவு திறந்தது. தேவார ஏட்டு பிரதிகளை எடுத்துத் தன் அரண்மனையில் பல புலவரை கொண்டு இயற்றி 12 திருமுறையாக வகுத்தான். அதன் பிறகு 13ஆம் நூற்றாண்டில் ஆண்ட மன்னன் அந்த தேவாரங்களை எடுத்துப் பார்த்து அதை இன்னும் விரிவாக்க வேண்டும் என்று எண்ணம் கொண்டான். அதற்கு தகுதியான சேக்கிழாரை தன் மந்திரியாக்கி அவரை கொண்டு திருத்தொண்டர் புராணம் ஆக்கி ஆலயத்திலே வைத்து அரங்கேற்றினான்.

18ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பல ஆலயங்கள் அழிக்கப் பட்டு சமயத்துக்கு மாற்றம் வந்த பொழுது சமய பெரியோர்கள் தோன்றி புராணங்களை அச்சு போட்டும் ஆலயங்களிலே உபநிடதம் செய்தும், புராணங்களை ஆலயத்தில் படித்து பயன்சொல்லியும் சமயத்துப் புத்துணர்ச்சி உண்டான ஆரம்பத்தில் விவேகானந்தர் அமெரிக்காவிலே சொற்பொழிவு செய்ய 5 நிமிடம் கொடுத்த நேரத்தில் அவர் நான்கு வருடம் வரையும் சொற்பொழிவு செய்து சமயத்தில் பெருமையை ஏற்படுத்தி ஞானச்சுடர் என்ற நூலை பத்துத் தொகுதிகளாக அமைத்து 18 நாள் ஆற்றிய சொற்பொழிவை அறிய முடிந்தது. மற்ற சமயங்களைப் பற்றி ஏதும் நூல் இல்லை.

யாழ்ப்பாணத்திலும் ஆறுமுக நாவலர் சைவப்பணி, சமூகப்பணி, ஆலயபணி என பல நூல்களை இயற்றி அச்சு போட்டு மக்களுக்கு அறிய வைத்தார். அவருடைய காலத்தில் சமயத்துக்கும், ஆலயத் துக்கும், அழிவுண்டான போது அவர் தன்னால் இயன்ற வரையும் பணி செய்து திருக்கேதீஸ்வரம் காடாக இருந்த பொழுது அங்கே போய்ப் பார்த்து அந்த இடத்தில் புதிய ஆலயத்தை கட்டினார். பிறகும் பல பெரியோர்கள் தோன்றி ஆலயங்களையும் சைவசமயத்தையும் அழியவிடாமல் செய்தனர்.

பள்ளிக்கூடம் கட்டி கிறிஸ்து மதம் மாற்றப்பட்ட பொழுது அவர் சைவ பள்ளிக் கூடங்களை கட்டி சைவ சமயத்தையும் தமிழையும் அழிய விடாமல் செய்த பெருமை அவருக்கு உண்டு.

சைவசமயத்துக்கு அழிவுண்டாகும் பொழுது மகாவிஷ்ணு அல்லது வேறு மூர்த்தங்களைக் கொண்டு இறைவன் அவதாரம் செய்ததாக புராணங்கள் கூறுகின்றன. சைவ சமயத்திலும் கூட பெரும் புலவர்கள் இருந்த காலத்திலே 18 புராணங்கள் வரலாற்றில் சொல்லப்பட்டு அதை வியாசர் 28 ஆகமங்கள் என்று பட்டப்பெயர் கொண்டு கலியுகம் முடிய கிரேத யுகம் வரவும் வியாசர் என்ற பெயரில் தோன்றி 28 ஆகமங்களையும் 18 புராணங்களையும் அருளி செய்வார்கள். வேதவராத கல்பத்தில் எத்தனை கோடி வருஷம் சென்று அழிவு இல்லாமல் இருப்பது 28 ஆகமம் 18 புராணம். இதை எப்படியும் இறைவன் காலத்துக்கு ஏற்றாற் போல தீர்க்கதரிசிகளைக் கொண்டு காப்பார். கந்தபுராணம், சிறு தொண்டர்புராணம், பாரதம், இராமாயணம், வள்ளுவர் குறள். திருமந்திரம் இவை கூட பெரும் புலவர்கள் பற்றியும் அற்புதங்கள் செய்த பிறகு தான் அரங்கேற்று வார்கள். அடியவராலும் இறைவனுடைய திருவிளையாடலாலும் ஆலயத்தின் அற்புதங்களைக் கொண்டு சைவசமயத்திற்கு பெருமை உண்டு. புராணங்களைப் படிப்பதாலும், ஆலய வழிப்பாட்டாலும் பக்தியினாலும் சைவசமயத்தை அறிந்து மற்றவர்களும் போதிப்பதனால் பெரும்பயன் அடையலாம்.



# சிவாகமங்களும் அவை கூறும் சிவ வழிபாடும்

தேவாரம், திருவாசகம், திருமந்திரம், திருத்தொண்டர் புராணம் முதலிய திருமுறைகள் யாவும் ஆகமங்களை அருமையாகப் போற்றுகின்றன. திருமுறைகள் சிறப்பித்துப் போற்றும் ஆகமங்கள் சைவசமயத்தவருக்கு இன்றியமையாத அடிப்படை நூல்களாகும். ஆகமம் என்றால் பெரிய விருப்பத்தினைத் தருவதாகும். இறைவன் மகேந்திர மலையில் ஐந்து திருமுகங்களோடு எழுந்தருளியிருந்து ஆகமத்தை ஐந்து முனிவர்களுக்கு ஓதியருளினார்.

ஆகமங்களைச் சிவாகமங்கள் என்று வழங்குவர். அவை சிவவழிபாட்டைக் கூறுவன. வேதம் உலகத்தவர் பொருட்டு அருளிச் செய்யப்பட்டதால் அது பொது நூல் எனப்படும். ஆனால் சிவாகமங்கள் சத்திநிபாதம் அடைந்தவர்களுக்கே உரியதால் அவை சிறப்பு நூல்கள் எனப்படும். சைவாகமங்கள் சிவபெருமானே முழுமுதற்கடவுள் எனக்கூறுவன. ஆதலால் அவை சைவசமயத்தவருக்குரிய சிறப்பு நூல்களாகும். ஆகமங்களைச் சிறப்பாகக் கொள்பவராதலால் சைவசமயிகளை ஆகமாந்திகள் எனவும் வழங்குவர்.

ஆகமம் என்றால் அது சைவசமயத்தவரையே குறிக்கின்றது. எவ்வாறெனில் வைஷ்ணவருக்குரிய ஆகமங்கள் சங்கிதைகள் என்றும், சாக்தருக்குரியவை தந்திரங்கள் எனவும் வழங்குவர். எனவே ஆகமங்கள் என்றால் அவை சைவாகமங்களையே குறிக்கின்றன. பஞ்சாட்ரசத்திற் பார்க்கச் சிறந்த மந்திரம் இல்லையாதல் போல் ஆகமங்களிற் பார்க்கச் சிறந்த சாத்திரங்கள் வேறில்லை. ஆகமம் பரசுருதி எனவும் பெயர் பெறுகின்றது. ஆகமம் இறைவனிடமிருந்து வந்தது. இது உணர்ச்சி பயப்பதாய், பரமார்த்தங்களை உணர்த்துவதாய் உள்ளது. இது பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களையும்

கூறுகின்றது. ஆ என்பது சிவஞானம், க என்பது மோட்சம், ம என்பது மலநாசம்.

ஆகமங்கள் சிவனை முறைப்படி வழிபட்டு அவர் திருவடிகளைச் சேர்வதற்குரிய வழிகளைக் கூறுகின்றன. இவ்வழிகள் நாற்பாதங்கள் எனப்படும். அவை சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பனவாகும்.

சரியாபாதம்: இது சமயாசாரங்கள், பூசைக்கிரமங்கள் முதலியவற்றைக் கூறுவது.

கிரியாபாதம்; இது தீட்சைகள், திருவிழாக்கள், நித்தியபூசை, நைமித்தியபூசை, காமியபூசை முதலியவற்றைக் கூறும். இன்னும் பிரமசரியம், இல்லறம், வானப்பிரஸ்தம், துறவறம் ஆகிய ஆச்சிரம தர்மங்களையும் கூறும்.

யோகாபாதம்: இது பிராணாயாமம், ஆன்மசுத்தி முதலியவற்றைக் கூறும்.

ஞானபாதம்: இது பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களை விளக்கி நம்மை அருள் வழிப்படுத்தும்.

ஆகமங்கள் வேதங்களின் உட்பொருளாய் அமைந்தவை. அவற்றில் சிவனடியார் சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் முதலியபேறுகளைப் பெறவும், அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய புருடார்த்தங்களையடையவும், நயனம், ஸ்பரிசம், வாசகம், பாவனை, சாஸ்திரம், யோகம், ஔத்திரி முதலிய தீட்சைகளைப் பெறவும் விதிகள் உள்ளன.

ஆகமங்கள் மூலாகமம், உபாகமம் என இருவகையாகவுள்ளன. மூலாகமங்கள் காமிகம் முதலாக வாதுளம் ஈறாக இருபத்தெட்டு, இவற்றுள் முதற்பத்து ஆகமங்களும் சிவபேதம் எனப்படும். ஏனைய பதினெட்டும் உருத்திரபேதம் எனப்படும். ஒவ்வோர் ஆகமத்துக்கும் தனித்தனி பல உபாகமங்கள் உள்ளன. அவை எல்லாமாக இருநூற்றெழு என்பர். இவ்வாகமங்களைப் பிரணவர் முதலாக அறுபத்தாறு முனிவர்கள் இறைவனிடம் கேட்டார்கள் என்று சைவசமயநெறி கூறுகின்றது.

சித்தாந்தத்தைப் போதிக்கின்ற காரணத்தாலே தான் ஆகமங்களுக்குச் சித்தாந்தம் என்று பெயர் ஏற்பட்டது. திருக்கயிலாயத்திலே சிவபிரானிடமிருந்து தோன்றிய சைவாகமங்கள் முதலில் அனந்தேவருக்கு உபதேசிக்கப்பட்டுப் பின் அனந்ததேவரால் ஸ்ரீகண்ட ருத்திரருக்கும், அவரால் திருநந்திதேவருக்கும் உபதேசிக்கப்பட்டன வென்று ஆகம வரலாறு கூறுகின்றது. திருநந்திதேவர் சனற்குமார முனிவருக்கும், அவர் பரஞ்சோதி முனிவருக்கும் இச் சிவாகமங்களை உபதேசித்தனர். சிவபெருமானாகிய பரமாசாரியாரால் திருப் பெருந்துறையிலே குருந்தமர நிழலிலே வாதவூரடிகளுக்கு உபதேசிக் கப்பட்டதும் இதுவே. மெய்கண்ட தேவர் அருணந்தி சிவாசாரியாருக்கும், அவர் மறைஞான சம்பந்த சிவாசாரியாருக்கும், அவர் உமாபதி சிவாசாரியாருக்கும் ஆகமமான இச்சைவ சித்தாந்தத்தை உபதேசித்த னர். சைவாகமங்கள் தனித்தனியே சரியாபாதம், கிரியாபாதம், யோக பாதம், ஞானபாதம் என்று நான்கு பிரிவுகளுடையன ஞானபாதமே சைவசித்தாந்தத்தை விளக்குவது.

## புராணங்கள்

### புராணங்கள் பதினெட்டு

| | |
|---|---|
| சைவம் | வாமனம் |
| வைஷ்ணவம் | பவிஷ்யம் |
| மத்சியம் | பாகவதம் |
| மார்க்கண்டேயம் | கூர்மம் |
| பிரமம் | லிங்கம் |
| பிரமாண்டம் | பத்மம் |
| ஸ்காந்தம் | காருடம் |
| ஆக்கினேயம் | வராகம் |
| நாரதீயம் | பிரமவைவர்தம் |

## சைவாகமங்கள் இருபத்தெட்டு

| | |
|---|---|
| காமிகம் | யோகஜம் |
| சிந்தியம் | காரணம் |
| அஜிதம் | தீப்தம் |
| சூக்ஷ்மம் | சகஸ்ரம் |
| அம்சுமான் | சுப்பிரபேதம் |
| விஜயம் | நிச்வாசம் |
| சுவாயம்புவம் | ஆக்நேயம் |
| வீரம் | ரௌரவம் |
| மகுடம் | விமலம் |
| சந்திரஞானம் | முகம்பிம்பம் |
| புரோத்கீதம் | லளிதம் |
| சித்தம் | சந்தானம் |
| சர்வோக்தம் | பாரமேசுரம் |
| கிரணம் | வாதுளம் |

## புராணங்களின் எண்ணிக்கையும், கிரந்த எண்ணிக்கையும்

| | |
|---|---|
| மத்ஸ்யபுராணம் | - பதினாலாயிரம் கிரந்தம் |
| மார்க்கண்டேயம் | - ஒன்பதினாயிரம் |
| பவிஷ்ய புராணம் | - பதினாலாயிரந்து ஐந்நூறு கிரந்தம் |
| பிரம்ம புராணம் | - பதினாயிரம் கிரந்தம் |
| பிரம்மாண்ட புராணம் | - பன்னிரண்டாயிரத்து நூறு கிரந்தம் |
| பிரம்மை கைவர்த்தம் | - பதினெண்ணாயிரம் கிரந்தம் |
| வாமன புராணம் | - பத்தாயிரத்து அறுநூறு கிரந்தம் |
| வாயு புராணம் | - இருபத்து நாலாயிரம் |

| | | |
|---|---|---|
| விஷ்ணு புராணம் | - | இருபத்து மூவாயிரம் கிரந்தம் |
| கூர்ம புராணம் | - | பதினேழாயிரம் கிரந்தம் |
| வராக புராணம் | - | இருபத்து நாலாயிரம் கிரந்தம் |
| அக்னி புராணம் | - | பதினாயிரம் கிரந்தம் |
| பத்ம புராணம் | - | ஐம்பதினாயிரம் கிரகந்தம் |
| லிங்க புராணம் | - | பதினோராயிரம் கிரந்தம் |
| கருட புராணம் | - | பத்தொன்பதாயிரம் கிரந்தம் |
| ஸ்கந்த புராணம் | - | எண்பத்தோராயிரம் |

*நன்றி : நல்லூரர்க் கந்தசுவாமி திருக்கோயில்*
*மகாகும்பாபிஷேக விழா – 1999*



# திருமுறைகளும் சித்தியாரும்

**பேராசிரியர் முனைவர் கு.சுந்தரமூர்த்தி**
*அனைத்துலக சைவசித்தாந்த ஆராய்ச்சி மையம், தருமபுரம்*

திருமுறைகளின் கால எல்லை கி. பி. முதல் கி. பி. 12ஆம் நூற்றாண்டு வரையாகும். இக்காலத்தை அடுத்து எழுந்தனவே ஞானாமிர்தமும் ஏனைய மெய்கண்ட நூல்களும் ஆகும். ஆதலின் திருமுறைக் கருத்துக்களை இந்நூல்கள் நமக்கு மேல் எல்லையாகக் கொண்டு நிற்பதோடு அவற்றின் கருத்துக்களையும் ஆங்காங்கு ஏற்றுள்ளன. மெய்கண்ட நூல்களுள் சிவஞான சித்தியார் ஒன்றாகும். 'பார்விரித்த நூல் எல்லாம் பார்த்தறியின், சித்தியாரிலே ஓர் விருத்தப் பாதி போதும்' எனத் தருமை ஆதீனக் குரு முதல்வர் அருள்மிகு ஞானசம்பந்தப் பெருமானால் போற்றப்பெற்ற பெருமையுடையதாகும். இந்நூல் வழித் திருமுறை போற்றப் பெற்ற இடங்கள் பலவேனும், சில ஈண்டுக் குறிக்கத் தக்கவையாம்.

"அறுவகைச் சமயத் தறுவகை யோர்க்கும்
வீடுபே றாய்நின்ற விண்ணோர் பகுதி."

- என்னும் திருவாசகம்.

"அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய்"

- என்னும் சித்தியார்.

"எடுக்கும் மாக்கதை"

- என்னும் பெரியபுராணம்.

"என்னை இப்பவத்தில் சேரா வகையெடுத்து"

- என அதற்கு விளக்கம் தந்து நிற்கும் சித்தியார்.

"ஏடுடைய மலரால் முனைநாள் பணிந்தேத்த அருள் செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே"

- என்பது ஞானசம்பந்தர் திருவாக்கு.

"பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்தி பண்ணும்
தொண்டரைத் தானே தூய கதியினில் தொகுப்பன்!"

- என்னும் சித்தியார்.

"மாற்றம் மனம்கழிய நின்ற மறையோனே"

"மாலே பிரமனே மற்றொழிந்த தேவர்களே
நூலே நுழைவரியான்"

"அளவறுப்பதற்கு அரியவன்"

- என்பன திருவாசகம்.

"மறையினால் அயனால் மாலால்
மனத்தினால் வாக்கால் மற்றும்
குறைவிலா அளவினாலும் கூறொணாதாகி நின்ற
இறைவனார் கமலபாதம்"

- என்னும் சித்தியார்.

"சோலைப் பசுங்கிளியே தூநீர்ப் பெருந்துறைக் கோன்
கோலம் பொலியும் கொடி கூறாய்—சாலவும்
ஏதிலார் துண்ணென்ன மேல்விளங்கி ஏர்காட்டும்
கோதிலா ஏறாம் கொடி"

- என்னும் திருவாசகம்.

"சேவுயர் கொடியினான் தன் சேவடி சேரலாமே"

- என்னும் சித்தியார்.

"ஐயா நீ ஆட்கொண்டு அருளும் விளையாட்டில்
உய்வார்கள் உய்யும் வகையெல்லாம் உய்ந்தொழிந்தோம்"

"காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி"

- என்னும் திருவாசகம்.

“சொன்னஇத் தொழில்கள் என்ன காரணம் தோற்ற என்னில்
முன்னவன் விளையாட்டு என்று மொழிதலும் ஆகும் உயிர்க்கு
மன்னிய புத்திமுத்தி வழங்கவும் அருளான் முன்னே
துன்னிய மலங்கள் எல்லாம் துடைப்பதும் சொல்லலாமே.”

- என்னும் சித்தியார்.

“உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலை பெறுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகிலா விளையாட்டுடையான்”

- என வரும் கம்பர் வாக்கும் ஈண்டு நினைவு கூரலாம்.

“இப்படியன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று
எழுதிக் காட்டொணாதே”

- என்னும் ஆறாம் திருமுறை.

“எந்தைதா னின்னன் என்றும் இன்னதாம் இன்னதாகி
வந்திடான் என்றும் சொல்ல வழக்கொடு மாற்ற மின்றே”

- என்னும் சித்தியார்.

“பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பால் யோகெய்தி வீடுவர்காண் சாழலோ”

- என்னும் திருவாசகம்.

“போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல் ஓரார்”.

- என்னும் சித்தியார்.

“தேச விளக்கெல்லாம் ஆனாய் நீயே”

- என்னும் ஆறாம் திருமுறை.

“தேயமார் ஒளிகளெல்லாம் சிவனுருத் தேச தென்னார்”

- என்னும் சித்தியார்.

“பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாகத் திறம்பாடி ஆடேலோர் எம்பாவாய்”

- என்னும் திருவாசகம்.

"அவளால் வந்த ஆக்கம் இவ்வாழ்க்கை எல்லாம்"

- என்னும் சித்தியார்.

"அகர முதலானை அணி ஆப்பனூரானை"

- என்னும் திருமுறை.

"அக்கரங்கள் தோறும், சென்றிடும் அகரம் போல
நின்றனன் சிவனும் சேர்ந்தே"

- என்னும் சித்தியார்.

"நினைந்துருகும் அடியாரை நையவைத்தார்
நில்லாமே தீவினைகள் நீங்க வைத்தார்"

- என்னும் ஆறாம் திருமுறை.

"நிக்கிரகங்கள் தானும் நேசத்தால் ஈசன் செய்வது"

- என்னும் சித்தியார்.

"நூறுகோடி பிரமர்கள் நுங்கினார்
ஆறுகோடி நாராயணர் அங்ஙனே
ஏறுகங்கை மணல் என்னில் இந்திரன்
ஈறிலாதவன் ஈசன் ஒருவனே"

- என்னும் திருமுறை.

"மற்று அத்தெய்வங்கள்
வேதனைப்படும் இறக்கும் பிறக்கும் மேல் வினையும் செய்யும்
ஆதலால் இவையிலாதான் அறிந்து அருள்செய்வன் அன்றே"

"மண்தனில் வாழ்வும் வானத்து அரசு அயன் மாலார் வாழ்வும்
எண்தரு பூதபேத யோநிகள் யாவும் எல்லாம்
கண்ட இந்திர மாசாலம்"

- என்பன சித்தியார் திருவாக்குகளாம்.

"பாதகத்துக்குப் பரிசு வைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே"

"பாதகமே சோறு பற்றியவா தோணோக்கம்"

- என்னும் திருமுறை.

"நரரினில் பாலன்செய்த பாதகம் நன்மை ஆய்த்தே"

- என்னும் சித்தியார்.

"மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீரா நோய் தீர்த்தருள வல்லான் தன்னை"

- என்னும் திருமுறை.

"மருளுலாம் மலங்கள் தீர்க்கும் மருந்து இவை
வைத்திய நாதன்"

- என்னும் சித்தியார்.

"நின் பணி பிழைக்கில் புளியம் வளாரினால் ஒறுப்பாய்"

- என்னும் திருமுறை.

"தந்தை தாய் பெற்ற தத்தம் புதல்வர்கள் தஞ்சொ லாற்றின்
வந்திடா விடின் உறுக்கி வளாரினால் அடித்துத் தீய
பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடில் பரிவே யாரும்
இந்தநீர் முறைமை யன்றோ ஈசனார் முனிவும் என்றும்"

- என்னும் சித்தியார்.

"இழியாக் குலத்தில் பிறந்தோம் உம்மை இகழாது ஏத்துவோம்"

- என்னும் திருமுறை.

"தரையினில் கீழை விட்டுத் தவம் செய் சாதியினில் வந்து
பரசமயங்கள் செல்லாப் பாக்கியம் பண்ணொணாதே"

- என்னும் சித்தியார்.

"ஊனெடுத்த உடம்பின் பிறவியே
தானடைந்த உறுதியைச் சாருமால்"

"வாழ்த்த வாயும் நினைக்க மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை"

- என்னும் திருமுறை.

"மானிடப் பிறவிதானும் வகுத்து மனவாக் காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன்பணிக்காக அன்றோ"

- என்னும் சித்தியார்.

"புவனியில் போய்ப் பிறவாமையில் நாள்நாம்
போக்குகின்றோம் அவமே...
திருமாலாம் அவன் விருப்பு எய்தவும்
மலரவன் ஆசைப் படவும்...
ஆட்கொளவல்லாய்"

- என்னும் திருவாசகம்.

"வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்தனை அர்ச்சிப்பர்"

- என்னும் சித்தியார்.

"காலம் உண்டாகவே காதல் செய்து உய்ம்மின்"

"திறம்பி யாது ஏழு நெஞ்சமே சிறுகாலை நாமுறு வாணியம்"

- என்னும் திருமுறை.

"உள்ளே போதே பார்உய்ய"

- என்னும் சித்தியார்.

"சித்தமலம் அறிவித்துச் சிவமாக்கி எனை ஆண்ட
அத்தன் எனக்கு அருளியவாறு ஆர்பெறுவர் அச்சோவே"

- என்னும் திருவாசகம்.

"மலம் அகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன்"

- என்னும் சித்தியார்.

"நண்ணரிய சிவானந்த ஞானவடிவே யாகி
அண்ணலார் சேவடிக்கீழ் ஆண்டஅரசு அணைந்திருந்தார்"

- என்னும் திருமுறை.

"சிவனடியைச் சேரும் முத்தி செப்புவது இங்கு யாமே"

- என்னும் சித்தியார்.

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வ தன்முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்

தலையினாற் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறா நில்லே."

"விரும்பிநல் விளக்குத்தூபம் விதியினால் இடவல்லார்க்குக்
கரும்பினில் கட்டி போல்வார்."

"ஆமாறுன் திருவடிக்கே அகங்குழையேன் அன்புருகேன்
பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர்
கோமான் நின் திருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்
சாமாறே விரைகின்றேன் சதுராலே சார்வானே"

- என்னும் திருமுறைகள்.

"தாதமார்க்கம் சாற்றில் சங்கரன்தன் கோயில்
தலம் அலகிட்டு இலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந்தார் மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதில்திரு விளக்கிட்டு திருநந்த வனமும்
செய்துதிரு வேடங்கண்டால் அடியேன் செய்வது
யாதுபணியீர் என்று பணிந்தவர்தம் பணியும் இயற்றுவது இச்சரியை
செய்வோர் ஈசன் உலகு இருப்பர்"

- என்னும் சித்தியார்.

"கற்றல் கேட்டல் உடையார் பெரியார்"

- என்னும் திருமுறை.

"ஞானநூல்தனை ஓதல் ஓதுவித்தல் நற்பொருளைக்
கேட்பித்தல் தான்கேட்டல் நன்றாம்
ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும்
இறைவன் அடி அடைவிக்கும் எழில்ஞான பூசை"

- என்னும் சித்தியார்.

"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்
ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்"

- என்னும் திருமுறை.

"தக்கபிரியாப் பிரியம் இன்றி ஒட்டில்
தபனியத்தில் சமபுத்தி பண்ணிச் சங்கரனோடு
ஒக்க உறைந்து இவர்அவனை அவன்இவரை விடாதே
உடைந்தையாய்ச் சிவன் தோற்றம் ஒன்றுமேகாண்பார்"

- என்னும் சித்தியார்.

"எங்கு எழில் ஞாயிறு எமக்கே லோர் எம்பாவாய்"

"என்ன குறையும் இலேம் ஏலோர் எம்பாவாய்"

- என்னும் திருவாசகம்.

"எங்கு எழிலென் ஞாயிறு எமக்கென்று குறைவின்றிக்
கண்ணுதல் தன் நிறைவதனில் கலந்து காயம்
கழிந்தக்கால் எங்குமாய்க் கருதரன் போல் நிற்பன்"

- என்னும் சித்தியார்.

இனையபல இடங்கள் பல உள. விரிவஞ்சி அமைவாம்.



# தேவாரமும் திருமஞ்சனமும்

**தி. ரமா** எம்.ஏ., எம்.பில்., டிப். இன் டெம்பிள் ஆர்ட்ஸ்
*தமிழ் விரிவுரையாளர்*
*தனலெட்சுமி சீனிவாசன் மகளிர், கலை அறிவியல்*
*கல்லூரி, பெரம்பலூர்*

**தி**ருக்கோயில் வழிபாட்டில் நாள்தோறும் நடக்கும் பூசையில் திருமுழுக்காட்டுதல் மிக இன்றியமையாதது. சிவன் கோயில்களில் நான்கு காலமோ ஆறு காலமோ திருமஞ்சனம் விரிவாக நடைபெறும். 'அலங்காரப் பிரியன் விஷ்ணு' என்பது போலச் சிவன் அபிஷேகப் பிரிய'னாவான். சிவபெருமான் இடுகாட்டில் இருப்பதால், அவன் வெப்பம் தணிய எக்காலத்தும் நீராடியபடியே இருப்பான். அய்யனார் கோயில்களில் ஒருகால அபிஷேகமே நடைபெறும். சிவன் கோயில்களில் பலமுறை அபிஷேகம் நடப்பதுடன் குளிர்ந்த நீரும் பல குடங்கள் அபிஷேகிக்கப்படும். அபிஷேகம் என்பதைத் திருமஞ்சனம் என்பர். 'திருமஞ்சனமுங் கொணர்ந்து' (திருத்தொண்டர். சேரமா. 9) என்று. திருமஞ்சனம் என்ற சொல் சேக்கிழாரால் கையாளப் பெறுகிறது. திருக்கோயில்களில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுகளில் அபிஷேகம் நடைபெறும் இடம் 'திருமஞ்சன சாலை' என்று சொல்லப்படுகிறது. (எஸ்.ஐ.ஐ. 3:35). கோயிலொழுகு என்னும் வைணவ நூல் கோயில் மூர்த்தங்களின் அபிஷேக காலத்தில் சொல்லும் கவியைத் 'திருமஞ்சனகவி' என்று சுட்டுகிறது. இவற்றால் திருக்கோயில் வழிபாட்டில், திருமஞ்சனத்துக்குரிய தனிச் சிறப்பு வெளிப்படும்.

## அபிஷேகத் தீர்த்தம்

பல்வேறு தீர்த்தங்களால் அபிஷேகம் செய்யப் பெற்றாலும், உள்ளூர்த் தீர்த்தத்திற்கே தனி மதிப்பு. தீர்த்தமின்றித் திருமஞ்சனம் நடைபெறுவதில்லை. திருவாலவாய்த் தேவாரத்தில்,

"நறுமலர் நீருங்கொண்டு நாடொறும் ஏத்தி வாழ்த்திச்
செறிவன சித்தம் வைத்துத் திருவடி சேரும் வண்ணம்
மறிகடல் வண்ணன் பகா...
... அருள் செயாயே" (பா.எண். 8)

என்று நீரும் மலரும் கொண்டு வழிபாடு செய்தல் பேசப்படுகிறது. தீர்த்தத்தால் திருமஞ்சனம் ஆட்டுவதுபோலப் பூவொடு நீரும் கலந்து பூசை செய்தல் பேசப்படுகிறது. திருவையாற்றுப் பதிகத்தில் 'போதொடும் நீர்சுமந்தேத்திப்புகு வார்' (பா. 1) என்று வாகீசர் கூறுவர்.

திருக்கோயில் தீர்த்தக் கிணற்றிலோ ஆற்றிலோ தீர்த்தம் எடுத்து மேளதாளத்துடன் கோயிலை வலம் வந்து தீர்த்தக் கலசம் கோயிலுக்குள் செல்லும். யானை இருக்கும் ஊர்களில் யானை மீது வைத்துத் தீர்த்தக் கலசம் வரும். திருப்பாதிரிப் புலியூர் பாடலேசுவரர் திருக்கோயிலுக்குக் கங்கா தீர்த்தம் வரவழைத்து நாள்தோறும் அபிஷேகம் செய்வதற்குக் கடியாபட்டி தீ. நா. அவர்கள் ஏற்பாடு செய்தார்கள். இதுபோல இராமேசுவரத்திலும் கங்கா தீர்த்தம் அபிஷேகம் செய்வதற்கு வசதிகள் உள்ளன.

திருமஞ்சனம் ஆட்ட திருக்கோயிலைச் சார்ந்த ஆற்றில் தீர்த்தம் எடுப்பது தான் மரபு. திருக்குறுக்கை வீரட்டப் பதிகத்தில் மார்க்கண்டேயர் வரலாற்றைக் கூறும் திருநாவுக்கரசர்,

"நீற்றினை நிறையப் பூசி
நித்தலும் நியமஞ் செய்து
ஆற்றுநீர் பூரித் தாட்டும்
அந்தண னாரைக் கொல்வான்"

என்று பாடுகிறார். இதனால் மார்க்கண்டன் ஆற்று நீரைக் கொண்டு வந்து நீராட்டி வழிபட்டமை தெரிகிறது. திருமஞ்சனத்துக்குத் தீர்த்தம் எடுப்போர் நீராடி நீறுபூசித்துத் தூய்மையாகத் தீர்த்தம் எடுக்க வேண்டும் என்பது புலனாகும். ஆன்மார்த்த பூசையை முடித்த பின்னரே சிவபூசையைத் தொடங்க வேண்டும் என்று தெரிகிறது. திருநாவுக்கரசர் திருநேரிசையில் 'தூயகாவிரியின் நன்னீர் கொண்டிருக் கோதியாட்டிக் குங்குமக் குழம்பு சாத்தி' (பா. 1) என்று திருமஞ்சனம் ஆடும்போது ரிக்வேதம் ஓதல் கூறப்படுகிறது. சிவபெருமானை நீராட்டல் சைவசமயத்தில் அடிப்படையாக விளங்குகிறது.

தமிழர்கள் போற்றிய புனிதமான விலங்கு ஆக்கள்; போரின் தொடக்கத்தில் 'ஆவும் ஆனியற் பார்ப்பன மக்களும்' என்னும் புறநானூற்றுத் தொடர் ஆக்களின் பெருமையையும் புனிதத் தன்மையையும் காட்டுகிறது. இந்த விலங்கில் முப்பத்து முக்கோடி தேவர்களும் மும்மூர்த்திகளும் பிறரும் நித்திய வாசம் செய்வதாக நம்பப்படுகிறது. பசுக்கள் தருகின்ற பால், தயிர், நெய், கோமயம், சாணம் என்ற ஐந்து பொருள்களும் சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்வதற்கு உகந்தவை. இவற்றை ஒன்றாக்கிக் கடைந்து தெய்வப் பிரசாதமாக வழங்குவர். இது புற்றுநோய்க்கு மருந்து என்றும் ஆன்றோர் உரைக்கின்றனர். இவற்றை ஒன்றாக்கிக் கடைந்து சிவபெருமான் ஆடுவது என்று திருநாவுக்கரசர் கூறுவர். (இன்று உழவில் இஃது உரமாகவும் பூச்சிகொல்லி மருந்தாகவும் பயன்படுத்தப்படுகிறது.) ஆனைந்து ஆடுவதில் சிவபெருமானுக்குப் பெரும் விருப்பம்.

"ஆக்களேறுவர் ஆனஞ்சு மாடுவர்"

என்று திருவேட்களத் தேவாரத்தால் அறியப்படுகிறது. தில்லைச் சிதம்பரத்தைப் பாடும் போது, 'சிவன் ஆனஞ்சுகந்து ஆடுவான்' என்று பாடவில்லை. திருவேட்களத்திற்குப் பாடியவர் தில்லைக்குப் பாடாமை நோக்கத்தக்கது.

திருநாவுக்கரசர் திருவாரூர்த் தேவாரத்தில், சிவபெருமான் நீராடும் சாலையை 'ஆட்டகம்' (பண் 282: அடி 4) என்பர். 'ஆட்டகத்தில் ஆனைந்து உகந்தார் போலும்' என்று சிவபெருமான் ஆனைந்து விழைந்ததையே இவர் தெளிவுபடக் கூறுகிறார். திருவையாற்றைப் பாடும் போது 'ஆனுற்ற ஐந்தும் அமர்ந்தாய் நீ' என்றும் 'ஆவினில் ஐந்தும் அமர்ந்தாயே நீயே' என்றும் சிவபெருமானுக்கு ஆனைந்தில் உள்ள விருப்பத்தைத் திருநாவுக்கரசர் காட்டுகிறார்.

அபிஷேகப் பொருள்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பயனுண்டு. பால் ஆயுள் வளர்ச்சியைத் தரும்; நாட்டுச் சர்க்கரை பகையை அழிக்கும்; இளநீர் இராசபதவி தரும். ஆகமங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பலன்கள் கூறுகின்றன; தலபுராணங் களும் இவ்வாறு கூறுகின்றன. இவற்றிடையே ஒருமித்த கருத்து இல்லை. அடியார்கள் சிவனை ஆனைந்து கொண்டு ஆட்டினால், அவர்களுக்குச் சிவன் அருள் செய்வான். இதனை,

"ஆனிடை ஐந்தும் வைத்தார்
ஆட்டுவார்க் கருளும் வைத்தார்"

என்பர். இக்கருத்தை 'ஆனிடை அஞ்சும் கொண்டு அன்பினால் அமர ஆட்டி' என்ற திருவலம்புரம் தேவாரமும் செப்பும்.

ஆனைந்தாடும் சிவனுக்கு அவற்றை வழங்குவது ஆவினத்துக்கே உரிய சிறப்பாகும். நமச்சிவாயத் திருப்பதிகத்தில்,

"பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை
ஆவினுக் கருங்கலம் அரன்அஞ் சாடுதல்"

என்று சிவபெருமானால் ஆவினம் பெருமை பெறுவது தெரிகிறது. சிவபெருமான் திருமஞ்சனத்துக்கு வேண்டியதை எல்லாம் தருகின்ற ஒரே விலங்கு பசுவாகும். இதனால் தான் திருக்கோயிலை ஒட்டிப் பசுமடங்கள் ஏற்படுத்தப்பட்டன.

ஆவினின்று கிடைக்கும் ஐந்து பொருள்களையும் ஒருங்கு சேர்த்துத் திருமஞ்சனமாட்டுவதையே 'ஆனஞ்சு ஆடுதல்' என்று குறித்தனர். ஆனிலிருந்து கிட்டுவனவற்றைத் தனித்தனியே ஆட்டுவதையும் தேவாரம் கூறுகிறது. ஐந்து பொருள்களைச் சொல்லாமல், இரண்டை மட்டும் திருச்சாய்க் காட்டுத் தேவாரத்தில் 'பால், நெய்' என்பர் அப்பர். 'நெய்யதாடிய நீலக்குடியரன்' என்றும் 'நெய்யாறா ஆடிய நீலகண்டர்' என்றும் தேவாரம் சுட்டுகிறது. பாலும் திருமஞ்சனத்திற்குரியது. பாலில் தெய்வத்தை திருமுழுக்காட்டினால், அடியார்க்கு ஆயுள் வளரும் என்பர் சான்றோர். தேவாரம் திருமுழுக்காட்டுவதையே கூறுகிறது; இன்னபயன் என்று சொல்லவில்லை.

"ஆமலி பாலும் நெய்யும்
ஆட்டி அர்ச்சனைகள் செய்து
பூமலி கொன்றை சூட்டப்
பொறாததன் தாதை தாளை"

என்று பாலும் நெய்யும் அபிஷேகிப்பது சொல்லப்படுகிறது. திருநாரையூர்ப் பதிகத்தில் 'பாலும் நெய் தயிராடிய பான்மையும்' என்றும் திருக்கொட்டியூர்த் தேவாரத்தில் 'பாலோடு நெய் தயிர் தேனாடி

கண்டாய்' என்றும் பாடுவர், அப்பர். இவர் பால், நெய் ஆகியவற்றை அபிடேகம் செய்வதைப் பல இடங்களில் மிகுதியாக வலியுறுத்துகிறார். ஆனால் தயிரால் அபிஷேகம் செய்வது பற்றிய குறிப்பு குறைவாகவே காணப்படுகிறது. பாலை உறை குத்தித் தயிரை உண்டாக்க வேண்டும். தயிரால் அபிஷேகம் செய்வதைப் பிறபொருள்களுடன் சேர்த்தே இவர் இயம்புகிறார். 'செய்ய மேனியன் தேனொடு பால் தயிர் நெய்யதாடிய நீலக்குடி அரன்' என்றும் 'தயிர் தேனாடி கண்டாய்' என்றும் தேவாரத்தில் தயிர் பிறவற்றுடன் சேர்த்தே சொல்லப் பெறுகிறது.

திருக்குறுக்கை வீரட்டத் தேவாரத்தில், திருநாவுக்கரசர், சண்டீசர் வரலாற்றைக் கூறும்போது, சண்டீசர் ஆவின் பாலைக் கறந்து சிவனுக்குத் திருமஞ்சனம் செய்தார் என்பர். இதனை,

"தழைத்ததோர் ஆத்தியின்கீழ் தாபர
மணலாற் கூப்பி
அழைத்தங்கே ஆவின் பாலைக்
கறந்துகொண் டாட்டக் கண்டு"

என்று பாடுகிறார். ஆவின் பாலைக் கறந்து நேரடியாக அபிஷேகிப்பதைத் தேவாரமுணர்த்துகின்றது.

## தேனும் தெங்கிள நீரும்

பண்டு மக்கள் பாலையும் தேனையும் கலந்தே பயன்படுத்தினர். அதுபோலப் பாலுடன் தேனையும் அபிஷேகம் செய்தமை குறிக்கத்தக்கது. 'தேனொடு பால்தயிர் நெய்யதாடிய நீலக்குடியரன்' என்பது ஈண்டுக் காணற்பாலது. சிவபெருமானுக்கு இளநீரும் அபிஷேகம் செய்யத்தக்கது; இளநீரால் அபிஷேகம் செய்வதை மிகச்சில பாடல்களில்தான் காணமுடிகிறது.

"வானஞ் சாடு மதியர வத்தொடு
தானஞ் சாதுடன் வைத்த சடையிடைத்
தேனஞ் சாடிய தெங்கிள நீரொடும்
ஆனஞ் சாடிய ஆமாத்தூர் ஐயனே!"

என்ற பாசுரம் தேன், இளநீர், ஆனைந்து ஆகிய மூன்றையும் குறிக்கின்றது.

திருமஞ்சனம் செய்வதற்குக் கலசங்கள் பயன்படுத்தப் பெற்றன. நாவுக்கரசர் தன் தேவாரத்தில் கண்ணப்பர் வரலாற்றைப் பாடுகிறார். திருச்சாய்க் காட்டுத் தேவாரத்தில்,

"குவபெருந் தடக்கை வேடன்
கொடுஞ்சிலை இறைச்சிப் பாரம்
துவர்ப் பெருஞ் செருப்பால் நீக்கித்
தூயவாய்க் கலசம் ஆட்ட
உவப்பெருங் குருதி சோர
ஒருகணை யிடந்தங் கப்பத்
தவப்பெருந் தேவு செய்தார்
சாய்க்காடு மேவி னாரே"

என்று திருமஞ்சன நீரைக் கலசத்தில் கொண்டு வருதலைக் காட்டுகிறார். கண்ணப்பர் திருவாயினை அபிஷேகக் 'கலயம்' என்ற நுட்பம் நோக்கத்தக்கது. திருஞானசம்பந்தரும் கண்ணப்பரை 'வாய்க் கலசமாக வழிபாடு செய்யும் வேடன்' என்றார். திருக்குறுக்கை வீரட்டப் பதிகத்திலும் கண்ணப்பர் திருவாயைத் 'தூயவாய்க் கலசம் ஆட்டி' என்றதும் காண்க. குடுமித் தேவரை நீராட்டத் தேவையான திருமஞ்சன நீரைக் கண்ணப்பர்தம் வாயில் கொண்டு சென்றமையால் இவ்வாறு உரைத்தார்.

வி. எஸ். சுப்பிரமணியக் குருக்கள் தன்னுடைய சிறுநூலில் அபிஷேகப் பொருள்களையும் பலன்களையும் பற்றிக் கூறியிருக்கிறார்.

| | |
|---|---|
| சந்தானதி தைலாபிஷேகம் | - சுகத்தைத் தரும் |
| அரிசி மாப்பொடி | - மலநாசம் |
| நெல்லிமுள்ளிப்பொடி | - ரோகநாசனம் |
| பஞ்சகவ்யம் | - ஆன்மசுத்தி |
| ரஸபஞ்சாமிர்தம் | - வெற்றி அனுகூலம் |
| பழபஞ்சாமிர்தம் | - செல்வப் பெருக்கு |
| பஞ்சலோகத்தினால் அபிஷேகம் | - மந்திர சித்தி |
| பால் அபிஷேகம் | - ஆரோக்கியம், ஆயுள் விருத்தி |
| தயிர் அபிஷேகம் | - பிரஜா விருத்தி |
| நெய் அபிஷேகம் | - மோட்சம் |

| | |
|---|---|
| தேன் அபிஷேகம் | - சங்கீத வன்மை |
| கருப்பஞ்சாறு | - நித்திய சுகம் |
| நாட்டுச் சர்க்கரை | - சத்துருநாசம் |
| வாழைப்பழம் | - பயிர் விருத்தி |
| பலாப்பழம் | - லோக வசியம் |
| மாம்பழம் | - சகல வெற்றி |
| நார்த்தம்பழம் | - புத்திசாலித் தனமும் வித்தையும் கிடைக்கும் |
| தம்பரத்தம் பழம் | - பூமி லாபம் |
| மாதுளம் பழம் | - பகைகள் நீங்குதல் |
| எலுமிச்சம் பழம் | - மிருத்யு நாசம் |
| தேங்கா திருவல் | - போஜனம், ராஜா பதவி |
| இளநீர் | - சத்புத்ர பேறும் மிருத்யு நாசமும் |
| கோரோசனை | - தீர்க்காயுள் |
| பச்சைக்கர்ப்பூரம் | - பயநாசம் |
| கஸ்தூரி அபிஷேகம் | - வெற்றி |
| பன்னீர் | - சாலோக்கியம் |
| சந்தனக் குழம்பு | - சாயுஜ்யம், புனிதத்தன்மை |
| சகஸ்ராபிஷேகத் தகட்டால் அபிஷேகம் | - அறிவு, ஞானம் உண்டாகும் |
| ஸ்நபன கலசம் | - சர்வசௌபாக்யமுண்டாகும் |

இவ்வாறு 'ஆகமும் ஆலய வழிபாடும்' (ப. 36-37) என்ற நூல் அபிஷேகப் பொருள்களையும், பலன்களையும் விளக்குகிறது.

திருநாவுக்கரசர் தேவாரம் பால், தயிர், நெய், தேன், இளநீர் என்பனவற்றுடன் ஆனைந்தையும் சிவபெருமானுக்குத் திருமஞ்சனம் செய்வதாகக் கூறுகின்றது. பண்டு ஆனைந்தை ஒன்றாகக் கலந்தே அபிடேகம் செய்துள்ளனர். இதனாலேயே கோயிலைச் சார்ந்து பசுமடம் வளர்ந்திருக்கிறது. இன்று திருக்கோயில்களில் பால், தயிர், நெய் என்ற

மூன்றும் தனித்தனியே இறைவனுக்கு அபிஷேகிக்கப் பெறுகிறது. கோமயம் புனிதப் பொருளாகக் கருதப் பெற்றாலும் இந் நாளில் அதனை அபிஷேகிப்பதில்லை.

அபிஷேகப் பொருள்களை அபிஷேகிப்பதிலும் வரிசை முறைகள் உள்ளன. அய்யனார் கோயிலில் அபிஷேகம் முடிந்து அலங்காரம் செய்த பின் பன்னீரை மணப் பொருள் போல அய்யனாருக்குத் தெளித்தலு மூண்டு. எல்லாக் கோயில்களிலும் திருமஞ்சனம் இன்றியமையாததாக இருந்ததைத் திருநாவுக்கரசர் தேவாரமுணர்த்து கின்றது. இவர் பாடல்களில் பஞ்சாமிர்தம் அபிஷேகம் செய்யப் பெற்றதாகச் சொல்லப்படவில்லை.



## சுந்தரர் திருமுறையில்
# சைவசித்தாந்தம்

*'சைவசித்தாந்த சரபம்'*
**சிவஸ்ரீ தத்புருஷதேசிகர்**
தேவகோட்டை

**சி**த்தாந்த சைவர்களுக்குரிய பிரமாண நூல்கள் தோத்திரங் களும், சாத்திரங்களுமான இருவகைகளில் இருக்கின்றன. தோத்திரங் களாகிய திருமுறைகள், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் அருளிச் செய்த தேவாரம் முதல், சேக்கிழார் பெருமான் அருளிச் செய்த திருத்தொண்டர்புராணம் வரை பன்னிரண்டு என்றும், சாத்திரங்களாகிய மெய்கண்ட நூல்கள் திருவியலூர் உய்ய வந்த தேவநாயனார், அருளிச்செய்த திருஉந்தியார் முதல் உமாபதி சிவாசாரியர் அருளிச்செய்த சங்கற்பநிரகரணம் வரை பதினான்கு என்றும் சொல்லப்பெறும். பன்னிரு திருமுறைகளை அருளிச்செய்த அருளாசிரியர் இருபத்தெழுவர். பதினான்கு சாத்திரங்களை அருளிச் செய்தவர் அறுவர். வகையால் இரண்டாகவுள்ள திருமுறைகளாலும், சாத்திரங்களாலும் குறிக்கப்பெறுவது சித்தாந்த சைவ உண்மையாகிய ஒரு பொருளேயாகும்.

வழக்கிலுள்ள நூல்கள் அனைத்தையும் பாசநூல், பசுநூல், பதிநூல் என்ற மூன்று பிரிவுகளில் ஆன்றோர் அடக்குவர். மண்முதல் நாதம் ஈறாகவுள்ள மாயாகாரியப் பொருள்களையும், அவைபோன்ற அறிவற்ற பிறபொருள்களையும் பற்றிய விளக்கத்தைப் பாசநூல்களிலும் காணலாம். பாசநூல்கள் அறிவற்ற பொருள்களுடன் தொடர்பு பட்டுச் சிற்றிவு உடையனவாக வாழும் உயிர்களைப் பற்றி விளக்கம் செய்யும். இவ்விரண்டுக்கும் மேற்பட்டு எஞ்ஞான்றும் தோற்ற ஒடுக்கத்துக்கு உட்படாததாய்ப், பாசுபாசங்களின் இயக்கத்துக்கு நிமித்த காரணமாய்ப் பேரறிவு மயமாயிருக்கும் சிவத்தைப் பற்றித் தெரிவிப்பன பதிநூல்கள்.

பசு, பாசநூல்கள், பதிநூல்களைக் கற்பதற்குத் துணையாய் இருப்பனவே அன்றி, அவைமட்டுமே ஒருவனை விளங்கிய அறிவுடைய

வனாக ஆக்கமாட்டா. இயல்பாகவே விளங்கிய அறிவனாகிய இறைவனும், அவனது நல்லருளைப் பெற்றுத் தமது பசு கரணங்கள் சிவகரணங்களாகித் தொழிற்பட, அவனேயாய் நின்ற அருளாசிரியர் களும் வழங்கியுள்ள ஞானநூல்களே, விளங்கிய அறிவை பெறுவதற்கு துணை செய்வனவாம்.

நூல்களை முதல், வழி, சார்பு என மூன்றாகப் பிரித்த சான்றோர் கள் "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன் கண்டது முதல் நூல்" என்று முதல் நூல் ஆசிரியனை ஒருமையில் உணர்த்திப், பின்னர் வழிநூல் விளக்கத்தில் "முன்னோர் நூல்" என்று முதல்நூலைக் கூறி அதன் ஆசிரியரைப் பன்மையில் காட்டினர். சைவமரபு "வேத சிவாகமங்கள் ஆகிய நூல்களை ஆதிநூல்" என்றும்,"அனாதி அமலன் தருமநூல்" என்றும் போற்றி, முதல் நூல் ஆசிரியன் சிவபெருமான் ஒருவனே என்று கூறி அம்முதல் நூலோடு ஒப்பத் தோத்திர சாத்திர நூல்களையும் மதித்து, அவற்றையும் முதல் நூல் என ஏற்றுக் கொள்ளும், இது முதல் நூல் ஆசிரியர் பற்றி முன்னர் ஒருமையிலும் பின்னர்ப் பன்மையிலும் கூறும் தமிழ் மரபின் உண்மையை நாம் அறிந்து கொள்ளும் வாய்ப்பில் இருக்கிறது.

பேரறிவுடைய பதிப்பொருளாகிய சிவத்தோடு ஒப்பப் பசுவர்க்கத்தி னராகிய ஆசிரியர்களை ஒருங்கு வைத்து எண்ணுவது ஒக்குமோ எனின் "தான் வேறு, தலைவன் வேறு" என்ற நிலை நீங்கித் தன்னை இழந்து தலைவனே ஆகி விளங்கியவர் அருளாசிரியராதலின், அவர் வாக்குப் பதிவாக்கேயாக அது ஒக்குமாற்றை உணரலாம். இவ்வுண்மை "உளம் குளிர்ந்தபோதெலாம் உகந்துகந்து பாடுவேன்," "எனதுரை தனதுரையாக" என்பன போன்ற ஆளுடையபிள்ளை திருவாக்கு, "வன்றொண்டன் வண்டமிழ் மாலை வல்லார்போய் எழுமாப் பிறப்பற்று எம்மையும் ஆளுடையாரே" என்பது போன்ற ஆளுடைய நம்பி திருவாக்குகளால் உணரப்பெறும்.

திருவள்ளுவர் பெருமான் மனித இனத்தை "விலங்கினம்" என்றும் "மனித இனம்" என்றும் இருவகையாகப் பிரித்துப் பிரிக்கப்பட்ட மனித இனத்தை "இலங்கும் நூல் கற்றார்" என்று விளக்கம் செய்தார். இங்கே இலங்கும் நூல் என்று அவர் குறித்தது "பதிநூலை"யேயாகும். பாசநூல் அறிவும் பசுநூலறிவும் இம்மை வாழ்க்கைக்கு உறுதுணையாய் இருப்பன. இவ்விருவகை நூலறிவும் முற்றிய நிலையில் வரும் பதிநூலறிவு, இம்மை மறுமை ஆகிய இருவகை வாழ்க்கைக்கும் துணையாய் இருந்து பேருதவி புரியும்.

உயிரறிவு, ஐம்பொறி அளவின் பாற்பட்ட சிறுமையை உடையது. அதனால் உலகியல் பொருளைத் தானும் உள்ளவாறு அறியும் ஆற்ற ்

அதற்கில்லை. பொறிவாயில் ஐந்தவித்த இறைவனும், அந்தத் தகுதியை அவன் அருளால் பெற்ற அருளாசிரியர்களுமே எதனையும் உள்ளவாறு அறிந்து உரைக்கும் ஆற்றல் உடையோர் ஆவர். இதனை "தம்மை உள்ளவாறு அறிந்த பின்" என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கும் "உள்ளபடி இத்தை உரைக்கக் கேள்" என்ற மனவாசகம் கடந்தார் திருவாக்கும் அறிவிக்கின்றன.

பதிநூல் என்றும், முதல் நூல் என்றும் பாராட்டப்பெறுகின்ற வேத சிவாகமங்களின் முடிபுகளைச் செந்தமிழில் விரித்து உரைக்கும் சிறப்புடைய தோத்திர - சாத்திரங்களில் திருமுறைகள் ஆகிய தோத்திர நூல்கள் சித்தாந்த உண்மைகளை ஆங்காங்கே எடுத்துக்காட்டித் தெளிவு செய்கின்றன.

சிவவாக்கில் வேதம் பொதுநூலாதலின், அது உண்மைப்பொருள் பற்றிய பொதுக்குறிப்பையும், சிவாகமம் சிறப்பு நூலாதலின், அது அப்பொருள்பற்றிய சிறப்புக் குறிப்பையும் வழங்கும். இவற்றுள் சிவாகமக் குறிப்பே முடிந்த முடிபானது. இதனை 'வேதமோடு ஆகமம் மெய்யாம் இறைவன் நூல், ஓதும் பொதுவும் சிறப்பும் என்றுள்ளன" என்ற திருமூல தேவர் திருவாக்கும், "உலகியல் வேதநூல் ஒழுக்கம் என்பதுவும், நிலவு மெய்ந்நெறி சிவநெறியது என்பதூஉம்" என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கும், "ஆரணநூல் பொது சைவம் அருஞ்சிறப்பு நூலாம்" சிவாகமங்கள் சித்தாந்தம் ஆகும் என்ற அருணந்தி சிவம் திருவாக்குகளும் அறிவிக்கின்றன.

வேதமுடிபை ஓரளவில் மட்டும் ஏற்றுக்கொண்டு, சிவகாம முடிபைச் சிறிதளவுகூட ஏற்றுக்கொள்ளாத புறச்சமயவாதிகளின் கொள்கை களைக் கண்டிக்கும் முகமாகப் பிரமசூத்திரப் பாடிய கர்த்தராகிய நீலகண்டசிவம் "வேத சிவாகமங்களுக்குள் பேதம் கண்டிலம்" என்று கூறுகின்றார். "விடையின் மேல் வருவானை வேதத்தின் பொருளானை" எனவும், "அம்மானே ஆகம சீலர்க்கு அருள் நல்கும் பெம்மானே" எனவும் திருமுறை முழங்கும். வேதத்தை ஒருவாறாக ஏற்றுக்கொண்டு, சிவாகமத்தைப் புறக்கணிக்கும் சமயவாதிகள் இமய வரையின் தாழ்வானதோர் உச்சியில் நின்றுகொண்டு "இதுவே மலையுச்சி" என்று குழறுபவரை ஒப்பர்.

திருமுறை ஆசிரியர்களாகிய அருளாளர்கள், அந்நூல்கள் தோத்திர அடிப்படையில் அமைந்தனவாகலின், அவற்றில் தோத்திரத் திற்கு முன்னிடம் கொடுத்துச் சிவகாமக் கருத்துக்களை இடையிடையே வைத்து வழங்கியுள்ளார்கள். மெய்க்கண்ட நூல்களின் ஆசிரியர் களாகிய அருளாளர்கள், அந்நூல்கள் சாத்திர அடிப்படையில் அமைந்தனவாகளின், சிவாகமங்களில் உள்ள சரியை, கிரியை, யோகம்,

ஞானம் ஆகிய நால்வகைப் பாதங்களையும் விளக்குவதை அடிப்படையாகக் கொண்டு அவற்றின் வழியாக தோத்திர இன்றியமை யாமையை வழங்கியுள்ளார்கள். "தோத்திரமும், சாத்திரமும் ஆனார் தாமே" என்ற அப்பர் அடிகளின் திருவாக்கை இங்கே நினைவு கூர்ந்து இவ்விருவகை நூல்களின் பொருள் ஒற்றுமையை உணரலாம்.

வேதசிவாகம சாரமாகிய திருமுறைகளில், சாத்திரக் கருத்துக்கள் பொதிந்துள்ளன என்பதைக் காணுவது போல, அவ்வாசிரியர்களின் வாழ்க்கையிலும், சாத்திர அமைதி பொருந்தி இருப்பதைக் காணுதல் வேண்டும். திருமுறை ஆசிரியர்களுள் சுந்தரமூர்த்தி சுவாமிகள், சிவாகம நெறியைப் பேணுவதில் முன்னுரிமை பெற்ற ஆதிசைவ மரபில் அவதரித்தவர். அவரது நிலவுலக வாழ்க்கை, திருநாவலூர்த் திரு அவதாரத்தில் தொடங்கித் திரு அஞ்சைக்கள வெள்ளானை ஏற்றத்தில் நிறைவு பெறுவது.

நிலவுலகத்தில் பிறந்து பக்குவமுற்ற உயிர்களுக்குத் தத்துவ ரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவதெரிசனம், சிவயோகம், சிவபோகம் என்பன ஒன்றன்பின் ஒன்றாக நிகழ, அதனால் அவ்வுயிர்கள் பேரின்பம் பெறும் என்பது சித்தாந்த முடிபு. இந்த தச காரியங்களையும் வரிசைப்படுத்தி விளக்கம் செய்கின்ற மெய்கண்ட நூல் "உண்மை நெறி விளக்கம்" என்பது.

உயிர், மண்முதல் நாதம் ஈறாகச் சொல்லப்படும் முப்பத்தாறு தத்துவங்களுடன் கூடினாலன்றித் தானாக எதனையும் அறியும் ஆற்றல் உடையதன்று என்று காணுவது தத்துவரூபம். இது சுந்தரர் வாழ்க்கையில் அவரது "திருஅவதாரம் முதல், மணம் வந்த புத்தூர்த் திருமண அமைப்பு வரை" பொருந்துவது. ஞானாசிரியனது நல்லருளால் தத்துவங்கள் அனைத்தும் சடப்பொருள்கள் என அறிந்து அவற்றி லிருந்து தன்னை வேறாகக் காணுவது தத்துவதெரிசனம். இது அவரது வாழ்க்கையில் வேதியர் ஆவணம் காட்டி ஆட்கொள்ளப் பெற்றதில் அமைவது. தத்துவங்களில் மீண்டும் கூடாமல், அவற்றில் நீங்கி நிற்பது தத்துவ சுத்தி. இது வன்றொண்டர் வாழ்க்கையில் திருவருட்முறை புக்க நிகழ்ச்சியில் அமைவது. அஞ்ஞானம் ஒழிந்து மெய்ஞ்ஞானம் தலைப்பட, உயிர்த்தன்னை அறிவது ஆன்மரூபம். இது நம்பியாரூரர் வாழ்க்கையில் "உணர்வு தந்து உய்யக்கொண்ட கோதிலா அமுதை நாயேன், ஏதினை அறிந்து என் சொல்லிப் பாடுகேன்" என மலைவுற்றதில் அமைவது. எல்லாச்செயலும் சிவன் செயல் எனத் தெளிந்து தன் செயலென ஏதும் இல்லாது நிற்பது ஆன்மதெரிசனம். இது சுந்தரர் வாழ்க்கையில் "உனக்கு ஆளாய் இனி அல்லேன் எனலாமே"

என ஆட்பட்டு நின்றதில் அமைவது. உயிர்த்தன்மை, சிவத்தன்மையாகி அதில் ஒடுங்க இருப்பது ஆன்ம சுக்தி. சுந்தரர் வாழ்க்கையில் திருஅதிகைத் திருத்தலத்தில் நிகழ்ந்த திருவடி தீட்சையில் அமைவது.

சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவம், மகேசுவரன், உருத்திரன், திருமால், நான்முகன் ஆகிய வடிவங்களை எல்லாம் தன்னதாகக் கொண்டு ஆன்மாக்களை ஐந்தொழில்களின் பாற்படுத்திப் பராசக்தி சிவத்துடன் சேர்ப்பதைத் திருவருள் வாயிலாக உணர்வது சிவரூபம். இது சுந்தரர் வாழ்க்கையில் திருவடி தீட்சை பெற்றவுடன் அருளிய "தம்மானை அறியாத சாதியார் உளதே" என்பது முதலாகிய அநுபவத் திருப்பாடல்களில் அமைவது. உயிர் பாசஞான, பசு ஞானங்களின் தோய்வின்றிப் பதிஞானம் தலைப்படச் சிவானந்தத்தில் சேருதல் சிவதரிசனம். இது சுந்தரர் பெருமானது "மற்றுப் பற்று எனக்கின்றி நின் திருப்பதாமே மனம் பாவித்தேன்'' என்பது முதலான அநுபவத்திரு வாக்கில் அமைவது. "அவனன்றி ஓரணுவும் அசையாது" எனக்கண்டு அகமும் புறமும் அந்தச் சிவத்துடனேயே கூடியிருப்பது சிவயோகம். இது "நாடுவன் நாடுவன் நாபிக்கு மேலேயோர் நால்விரல்'' என்றும் "என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகி" என்றும் நம் ஆசிரியர் அருளும் அநுபவத்தில் அமைவது. நாதன் இவன் உடல் உறவாய் உண்டு உறங்கி நடந்து நானா போகங்களையும் தானாகச் செய்து, பேதமற நின்று இவனைத் தானாக்கி விடுவது பெருகு சிவபோகம். இது தம்பிரான் தோழர் வாழ்க்கையில் பரவையார் திருமணம் முதல் வெள்ளானையேற்றம் வரையுள்ள நிகழ்ச்சிகளில் அமைவது. இந்த முறையில் தசகாரிய அமைப்பு வன்றொண்டர் வாழ்க்கையில் பொருந்தி இருப்பதைச் சிந்தித்துத் தெளிவது சிறப்பானதாய் இருக்கும்.

சைவ சித்தாந்த நூல்கள் இறை, உயிர், தளை ஆகிய மூன்று பொருள்களும் அநாதி நித்தியமானவை என்றும், அநாதியாகவே தளையிற் கட்டுண்டு இருக்கும் உயிர், தளைத் தொடக்கிலிருந்து விடுபட்டு சிறை இன்பத்தைப் பெற வேண்டும் என்றும், அப்பேற்றைப் பெறுவதற்குக் குருவருள் ஒன்றே துணையாய் இருக்கும் என்றும், அக்குருவருள் வழியாகச் சரியை, கிரியை, யோகங்களில் பயின்று, ஞானம் கைவரப்பெற்று உயிர் பேரின்பம் அடையும் என்றும் உரைக்கின்றன.

பதி, பசு, பாசமாகிய முப்பொருள்களின் உண்மையை, மற்ற சமயங்கள் உள்ளவாறு ஏற்றுக் கொள்ள மாட்டா. அதனால் அவற்றைப் பற்றிய இலக்கணங்களையும், அவைகள் உள்ளபடி கூறுவதில்லை. உண்மையும், இலக்கணமும் உணரப் பெறாதபொழுது, சாதனம் ஒழுங்கு முறையில் இருக்க மாட்டாது. எனவேதான் வரன்முறைப்படி

அமைந்த மாண்புமிகுந்த சமயம் "சைவ சித்தாந்த சமயம்" என்று ஆன்றோரால் போற்றப் பெற்றது.

காணப்படுகின்ற இந்த உலகம், ஒரு ஒழுங்குமுறையில் செயற்பட்டுக் கொண்டிருப்பதை நாமறிவோம். அறிவற்ற சடப்பொருளாகிய உலகத்தில் நிகழும் செயற்பாட்டுக்கு நிமித்த காரணமாய், உலகத்தோடு உடனின்று அதனை இயக்கிவரும் பேராற்றல் உள்ள கர்த்தா என்று போற்றப் பெறுபவன் சிவபெருமான்.

கலப்பினால் உடலில் உயிர்போல உயிர்களேயாய் ஒன்றாகியும், பொருள் உண்மையால் கண்ணொளியும் கதிரவன் ஒளியும் போல உயிர்களில் இருந்து வேறாகியும் உயிர்க்கு உயிராய் இருந்து உயிர்களை இயக்குவதனால் கண்ணொளியும் உயிரறிவும் போல உயிர்களுக்கு உடனாகியும் சிவபெருமான் விளங்குகின்றான் என்று ஞானநூல்கள் கூறுகின்றன. இங்ஙனம் ஒன்றாதலும், வேறாதலும், உடனாதலுமான மூன்று நிலைகளும் இறைவனுக்கு உண்டெனச் சித்தாந்த நூல்கள் கூற, இவற்றில் ஒவ்வொரு நிலைமட்டும் இறைவனுக்கு உண்டென்று கூறி மற்ற சமயங்கள் மயங்கிக் கொண்டிருக்கின்றன. "அக்கரங்கள் இன்றாம் அகர உயிரின்றேல் இக்கிரமத்தென்னும் இருக்கு" என்னும் சிவஞானபோத 7ஆம் வெண்பாவும், "அகரவுயிர் போல் அறிவாகி எங்கும், நிகரில் இறை நிற்கும் நிறைந்து" என்று திருவருட்பயன் திருக்குறளும், ஒன்று, வேறு, உடன் நிலைகளை உணர்த்துவன ஆகும். அகரவுயிர் மற்ற எழுத்துக் களின் வேறாகித் தனித்து நிற்பது மட்டுமின்றி, அவ்வெழுத்துக்களோடு கலந்து ஒன்றாகியும், அவற்றின் இயக்கத்துக்கு மூலமாய் உடனாகியும் இருப்பது போலவே, இறைவனும் இருக் கின்றான் என்ற உண்மையைச் சுந்தரர் பெருமான் திருநெல்வாயில் அரத்துறைத் திருப்பதிகத்தின் ஏழாந்திருப்பாடலில் "அகரமுதலின் எழுத்தாகி நின்றாய்" என்று அருளிச் செய்து அறிவிக்கின்றார். "அகர முதல எழுத்தெல்லாம் ஆதி, பகவன் முதற்றே உலகு" என்று திருக்குறளும் இங்கே ஒப்பு நோக்குதற்கு உரியது.

பொருள்களில் எவையும் புதிதாக உண்டாவதில்லை; இல்லாது அழிந்து போதுவதும் இல்லை என்பது சைவ சித்தாந்த முடிபு. இது 'சற்காரியவாதம்' என்று சொல்லப் பெறும். இதனை இன்றைய விஞ்ஞானிகளும் ஏற்றுக் கொள்கிறார்கள். எந்தப் பொருளும் தோன்றுகிற பொழுது முன்னர் ஒடுங்கியதில் இருந்தே மீளத்தோன்றும். ஒடுங்கும்பொழுதும் தோன்றியதிலேயே ஒடுங்கும். இத்தோற்ற ஒடுக்கங்கள் அறிவில்லாத மாயாகாரியமாகிய உலகத்துக்கு உண்டேயன்றி, அறிவுடைய உயிருக்கோ இறைவனுக்கோ எப்போதும்

இல்லை. அறிவுடைய உயிர் அறிவுற்ற உலகத்துடன் தொடர்புபடுவதைத் தோற்றம் என்றும், அத்தொடர்பில் நீங்குவதை ஒடுக்கமென்றும் சொல்லுகின்றோமே அன்றி, உயிர்கெனத் தனித்த தோற்ற ஒடுக்கங்கள் கிடையா. உலகத்தோடு ஒரு காலத்தில் தொடர்புகொண்டு பிறிதொரு காலத்தில் நீக்கம் பெறுகிற உயிர்களைப் போலல்லாமல், எக்காலத்திலும் உலகு உயிர்களுடன் நீக்கமற நிறைந்திருப்பது. இறைவனது இயல்பு. அதனால் தோற்ற ஒடுக்கங்களை, உலகுயிர்களின் பாற்படுத்தியும், அவையின்மையை இறைவன்பாற்படுத்தியும், சைவ நூல்கள் உணர்த்துவனவாயின.

தோற்றப்பொருள், அறிவுடையதாயின் தானே தோன்றிவிடும். அறிவற்றதாயின் அறிவுடையப் பொருள் அத்துடன் கூடித்தோற்றுவித்தால் அன்றித் தோன்றாது. தோன்றி நின்று ஒடுங்குகின்ற உலகம் அறிவற்றது ஆகையால் அதன்கண் அம்முத்தொழில்களும் நிகழுவதற்கு, இறைவன் நிமித்தகாரணனாய் இருக்கின்றான். முத்தொழில்களைச் செய்கின்ற இறைவன், அம்முத்தொழில்களுக்கும் உட்படுபவன் ஆயின், அவனால் அவற்றைச் செய்ய முடியாது என்பது, அறிஞர்கள் அறிந்த உண்மை. முத்தொழில்களின் பாற்படாத நிலை இறைவனுக்கு இருந்தால் மட்டுமே அவனால் அவற்றைச் செய்ய முடியும். அதனால் சிவபெருமானை "ஆதிமூலம்" என்று குறிக்காமல் "அநாதி மூலம்" என்று சைவசித்தாந்தம் குறிக்கின்றது. இவ்வுண்மையைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் "தாயும் தந்தை பல்லுயிர்க்கும் தாமேயாய தலைவனார்" என்று திருக்கடவூர் மயானத் திருப்பதிகங்களின் மூன்றாவது திருப்பாடலில் உரைத்துச் சிவபெருமான் தாய்தந்தை இல்லாத அநாதிமூலம் என்பதை உணர்த்துகின்றார்.

பதி இலக்கணத்தில் தலைசிறந்ததாக உள்ள பிறப்பு இறப்பின்மையைச் சுந்தரர் பெருமான் திருக்கச்சூர் ஆலக்கோயில் திருப்பதிகத்தின் ஆறாவது திருப்பாடலில் "பிறவாய் இறவாய்" என்றும், சிவபெருமான் பிறப்பு இறப்பின் பாற்படாமையால் மற்றையோர் பிறப்பை ஒழிக்கும் வல்லமை உடையவனாக இருக்கின்றான் என்பதைத் திருக்கழுமலத் திருப்பதிகத்தின் ஆறாவது திருப்பாடலில் "என் பிறவியை வேர் அறுக்கும் கரும்பினை" என்றும் கூறியருளிச் சிவபெருமானது ஒப்புயர்வற்ற முழு முதல் தன்மையைப் புலப்படுத்துகிறார்.

சிற்றறிவு உடைய உயிர்கள் ஒன்றை அறிய வேண்டுமானால் பேரறிவு உடையவனாக அவ்வுயிர்களுடன் அத்துவித நிலையில் உள்ள இறைவனது உணர்வு அவ்வுயிர்களோடும் விரவி நிற்பதுடன், அவ்வுயயிர்களோடு உடன் சென்று பொருளிலும் விரவி நிற்றல் வேண்டும். சிவஞானபோதப் பதினொராம் சூத்திர முதலதிகரணம்

"இவ்வான்மாக்கள் அவனை இன்றியமைந்து ஒன்றையும் விடவியாவாகலான்" என்பதால் இதனை அறியலாம். உயிர்களுக்குக் காட்டும் உபகாரத்தைச் செய்கின்ற இறைவன், அவ்வுயிர்களின் அறிவிற் கலந்து, காணும் உபகாரத்தையும் செய்கிறார் என்பதைச் சைவநூல்கள் அறிவிக்கின்றன.

சிவஞான போதப் பதினொராம் சூத்திரச் சிற்றுரையில் "உயிரையின்றிமையாத கண் உருவத்தைக் காணுங்கால், உயிரினது உணர்வு கண்ணொளியெனத் தானென வேறின்றி உடனாய் விரவி நின்று, கண்ணுக்குக் காட்டிய அதனைக் கண்கண்டதென்றும், கண்ணை அதிட்டித்து நின்ற உயிர், கண்டதென்றும் பகுத்தறிய வாராது, இரண்டன் காட்சியும் ஒன்றனை ஒன்று விடாது அத்துவிதமாகி, ஒருங்கே நிகழுமாறு போல, முதல்வனை இன்றியமையாத உயிர் ஒரு விடயத்தை அறியுங்கால், முதல்வனது சிற்சத்தி ஆன்மசிற்சத்தி எனத் தானென வேறின்றி உடனாய் விரவி நிற்ப முதல்வனும் அவ்வாறு விரவி நின்று ஆன்மாவிற்கு அறிவித்த தொண்டனை அவ்வான்மா அறிந்ததென்றும், அதனை அதிட்டித்து நின்ற தானறிந்தானென்றும் பகுத்தறிய வாராது, இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்து வரும் இவ்வுபகாரம் பெத்தம், முத்தி இரண்டிலும் ஒரு பெற்றித்தாயது" என்று சிவஞான சுவாமிகள் உரைக்கிறார்கள். "தொண்டனே நினையுமா நினையே," ."விரும்புமா விரும்பே," "தொடருமா தொடரே," "நுகருமா நுகரே" என வரும் திருமாளிகைத் தேவர் திருவாக்குகளும், "அறிவானுந்தானே, அறிவிப்பான்தானே, அறிவாய் அறிகின்றோன்தானே" என்னும் காரைக்கால் அம்மையார் திருவாக்கும் இறைவனது காட்டும் - காணும் உபகாரங்களைச் செவ்விதின் விளக்குவனவாகும். சுந்தர மூர்த்தி சுவாமிகளது திருப்புக் கொளியூர் அவினாசி திருப்பதிகத்தின் எட்டாவது திருப்பாடலில் "காணாதொழிந்தேன் காட்டுதியேல் இன்னம் காண்பன் நான்" என்று இவ்வுண்மை உணர்த்தப் பெறுகின்றது.

சிவபெருமான் உயிர்களுக்கு அருள்செய்யும் பொருட்டு நிலம், நீர், துன்புறுத்துகின்ற பிறப்பு இறப்பின் பாற் படுத்துவனவாகலின் அவற்றை அருளின் பாற்பட்டனதென்று கூறுவது எவ்வாறு பொருந்தும் எனும் ஐயம் எழுக்கூடும். ஒடுக்கம், தோற்றம், நிலை, மறைப்பு, அருள் எனும் ஐந்தும் முறையே இளைப்பாற்றலும், கன்மம் கழியும் முகத்தான் மலபாகம் வரச்செய்தலும், கன்மம் கழியுமாறு அதனை நுகர்வித்தலும் கன்ம ஒப்பு வருவித்து மலங்களை முதிர்வித்தலும், பந்தம் விடுவித்தலும் ஆகிய உறுதிப்பயத்தனவாகலான், ஐந்தொழிலும் அருட் செயலேயாதலின், இவற்றுட்சில மறத்தொழிலே போலும் என மறுத்தலை ஒழிவாயாக" என்று சிவஞான சித்தியார் ஐம்பத்தியேழாந் திருப்பாடல்

உரையில் சிவஞானமுனிவர் அருளுகின்றார். "அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார், மறந்திற்கும் அஃதே துணை" என்பது திருக்குறள். நம் சுந்தரர் பெருமான் திருநீடூர்த்திருப்பதிகத்தின் மூன்றாம் திருப்பாடலில் "அல்லலில் அருளே புரிவானே" என்றும், திருக்கழிப் பாலைத் திருப்பதிகத்தின் மூன்றாம் திருப்பாடலில், "ஒறுத்தாய் நின் அருளில்" என்றும் அருளிச் செய்து இறைவன் செய்யும் மறச்செயலும் கூட அருளின்பாற்பட்டதே என்று உணர்த்துகின்றார்.

உயிர்களைப் பற்றி அலைக்கின்ற பாசங்கள் மூன்றனுள் ஆணவம் செம்பிற்களிம்பு போல அநாதியே பற்றியது. கன்மம் உயிர்களின் விருப்பு வெறுப்பு என்னும் காரண அடிப்படையில் மூலகன்மம் எனப்பட்டு அறம் பாவம் என்னும் இருவகைத்தாய் நடைமுறைக்கு வந்து பயன்தருவது. மாயை, உலகத்தோற்றத்துக்கு வித்தாய் இருந்து, உயிர்களுக்குத் தநுகரண புவன போகங்களை வழங்குவது. இங்ஙனமுள்ள மூவகை மலங்களுள் சிவபெருமானது பெருங்கருணையால் அந்த மாயாமலச்சேர்க்கை முதற்கண் நீங்க, அதனால் கன்ம மலம் விளைவின்றி ஒழிய, அதனால் ஆணவ மலமும் வழியற்றுக் கிடக்கத் திருவருட்சக்தி உயிரினிடத்திலே பதிந்து சிவப்பேற்றை வழங்கும். மாயாமலநீக்கத்துக் கன்ம மூலமாகிய விருப்பு வெறுப்பு நீக்கம் வேண்டப்பெறும். உயிர்கள் இன்பத்தில் விருப்பும் துன்பத்தில் வெறுப்பும் கொள்ளுவது கண்கூடு. இன்பத்தில் மகிழ்ச்சியும் துன்பத்தில் துயரமும் கொள்ளாமல் இரண்டையும் ஒப்பக் காணும் இருவினை ஒப்பு மலபரிபாகத்துக்கும், மலபரிபாகம் சந்நிதிபாதத் துக்கும், சத்திநிபாதம், சிவப்பேற்றுக்கும் துணை செய்யும்என அருள் நூல்கள் கூறும்.

ஆன்றோர்கள் இறைவன் பால் முதற்கண் பிறப்பை ஒழிக்க வேண்டும் என்றே விண்ணப்பிப்பார்கள். இதனைத் திருவுளத்திற் கொண்ட நம் ஆசிரியர் திருக்கழுமலத் திருப்பதிகத்தின் முதல் திருப்பாடலில் "சாதலும் பிறத்தலும் தவிர்த்து எனை வகுத்து" என்றும், திருவளிவலத்திருப்பதிகத்தின் மூன்றாம் திருப்பாடலில் "மறுபிறப்பு என்னை மாசறுத்தானை" என்றும் அருளி, மாயா மலத்தொடர்பு நீக்கத்தைத் தெளிவு செய்கின்றார்.

கன்ம மலத்தின் விளைவாகிய நல்வினை தீவினைகள், முன்னைப் பிறவிகளில் ஈட்டப்பட்டுச் சேர்ந்தனவாகச் 'சஞ்சிதம்' என்றும், அச்சஞ்சிதத்தில் இருந்து இம்மை அநுபவத்துக்குப் பக்குவப்பட்டு வந்தனவாகப் "பிராரத்தம்" என்றும் இன்மை அநுபவத்தில் ஈட்டுவன வாக "ஆகாமியம்" என்றும் மூவகைப்பட்டு உயிர்களை துன்புறுத்தும். இவற்றுள் சஞ்சிதத்தைக் குருவருள், சிவதீட்சையில் சுட்டெரிக்கும்.

பிராரத்தம் இம்மை உடலனுபவத்தில் ஒழியும் ஆகாமியம் திருவருள் வசப்பட்டுச் செயல்படுவதால் சேராது. இதனை ''ஏன்ற வினை உடலோடு ஏகும் இருவினையும், தோன்றில் அருளே சுடும்'' என்று திருவருட்பயன் உணர்த்துகின்றது. கன்ம மாயாமலங்களின் நீக்கத்தால், ஆணவமலத்தின் சேட்டை, உயிரின் பாற் செல்லாது ஒடுங்கிவிடும். சுந்தரமூர்த்தி சுவாமிகளது திருவொற்றியூர்த் திருப்பதிகத்தின் முதல் திருப்பாடல் ''பாட்டும் பாடிப் பரவித் திரிவார் ஈட்டும் வினைகள் தீர்ப்பார்'' என்று சஞ்சித வினை ஒழிப்பையும் திருக்கேதீச்சரத் திருப்பதிகத்தின் எட்டாந் திருப்பாடலில் "வெய்ய வினையாடி அடியார் மேல் ஒழிந்தருளி" என்று பிரார்த்த வினை அநுபவ மென்மையையும் திருப்பைஞ்ஞீலித் திருப்பதிகத்தின் எட்டாம் திருப்பாடல் ''பாவி நாள்தொறும் பாடுவார் வினை பற்றறுக்கும் பைஞ்ஞீலியார்'' என்று ஆகாமியம் கூடாமையையும் அறிவிக்கின்றன.

மாயையை உதறி, வல்வினையைச்சுட்டு, மலஞ்சாய அமுக்குவது சிவபெருமானது திருக்கூத்தின் பயனென்று உமாபதிசிவம் அருளுவார். திருவருளாகிய தீயில் வெய்ய வினையிரண்டும் வெந்து அகலுதலும், மாயா காரியமாகிய மெய் உருகுதலும், நிகழ இதனால் ஆணவமலம் பொடியாகி வலியிழக்கும் என்பது திருவாசகத்திற் காணப்பெறுவது. நம் ஆசிரியர் திருநின்றியூர்த் திருப்பதிகத்தின் நான்காம் திருப்பாடலில் ''பரவி உள்கி வன்பாசத்தை அறுத்து'' என்றும், ''பரமவந்து நுன் பாதத்தை அடைந்தேன்'' என்றும் அருளிச் செய்து, வலிய மலச்சேட்டை அற்றபொழுது திருவடிப்பேறு சித்திக்கும் என அறிவுறுத்துகின்றார் சிவயோக உபதேசகரராகிய சுந்தரரர் சைவசந்தி, சிவபூசை, அந்தர்யாகம், எரியோம்பலாதிய சைவ ஒழுக்கங்களையும் தமது திருமுறையில் பெரிதும் வலியுறுத்தியுள்ளார்.

நலமே தழைக



# கணபதி வழிபாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்

**முனைவர் இரா. கலைக்கோவன்**
*எம்.பி.பி.எஸ்., டி.ஓ., எம்.ஏ., எம்.ஏ., பி.எச்டி.,*
*இயக்குநர், டாக்டர் மா. இராசமாணிக்கனார்*
*வரலாற்றாய்வு மையம், திருச்சிராப்பள்ளி–620017.*

**முனைவர் மு. நளினி**
*எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி., டி.டி.இ.ஏ.*
*விரிவுரையாளர், வரலாற்றுத்துறை,*
*சீதாலட்சுமி ராமசாமி கல்லூரி,*
*திருச்சிராப்பள்ளி–620002.*

தமிழர் வாழும் இடமெல்லாம் இன்று தழைத்துப் பெருகியிருக்கும் கணபதி வழிபாடு, தமிழ்நாட்டில் எந்தக் காலத்தில் தோன்றியதென்பது குறித்துப் பல ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. எனினும் அவற்றுள் எந்த ஆய்வும் திடமான முடிவுகளை முன்வைக்காமை பெருங்குறையே.

தமிழர் வரலாறு போதுமான சான்றுகளைக் கொண்டு தொடங்குவது சங்க காலத்திலிருந்துதான். கி. மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து கி. பி. இரண்டாம் நூற்றாண்டுவரை செழித்திருந்த இச்சங்க காலத் தமிழர் வரலாற்றைத் தெளிவுற அறிய இலக்கியங்களும் கல்வெட்டுகளும் அகழ்வாய்வுச் சான்றுகளும் நன்கு உதவுகின்றன. இக்காலக்கட்டத் தமிழர் சமய வரலாறு, பல்துறை அறிஞர்களால் தொகுக்கப் பெற்றுள்ளது. சேயோன் (முருகன்), மாயோன்(திருமால்), இந்திரன், வருணன், பழையோள் (கொற்றவை), முக்கண்ணன் (சிவபெருமான்), பலராமன் என்ற தமிழர் வழிபட்ட தெய்வங்களைச் சங்க இலக்கியங்கள் பல பாக்களால் அறிமுகப்படுத்துகின்றன. சங்க இலக்கியங்களுள் காலத்தால் பிற்பட்டதாகக் கருதப்படும் கலித்

தொகை, பரிபாடல் ஆகிய இரண்டும் இறை சார்ந்த பல தொன்மங்களை விளக்குகின்றன. சங்க காலத்திற்குச் சற்று முற்பட்டதாக ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ள தொல்காப்பியமும் தமிழர் வழிபாட்டுச் சிந்தனைகளை முன் வைக்கிறது. இவ்விலக்கியங்களுள் ஒன்று கூட, மறைபொருளாகவேனும், பிள்ளையார் வழிபாட்டைப் பற்றி யாண்டும் குறிப்பிடாமை நினைவு கொள்ளத்தக்கது.

'நல்லவுந் தீயவும் அல்ல குவியிணர்ப் புல்லிலை எருக்கமாயினும் உடையவை கடவுள் பேணேம் என்னா' என்னும் புறநானூற்றுப் பாடலடி (புறம். 106) கொண்டு, அதன் பொருளை உணர்ந்தும் உணரார் போல் சிலர் சங்க காலத்தில் பிள்ளையார் வழிபாடிருந்ததாகக் கூறுவது பிழையாகும். 'நல்லதென்றும், தீயதென்றும் வகைப்படுத்த இயலாத எருக்கம்பூ தரினும் தெய்வங்கள் அவற்றை மறுப்பதில்லை' எனும் பொருளமைந்த இப்பாடல், தெய்வங்களின் சார்பற்ற தன்மையைச் சுட்டுகிறதே தவிர, பிள்ளையார் வழிபாட்டை அல்ல. எருக்கம்பூ, சிவபெருமானால் விரும்பிச் சூடிக் கொள்ளப்பட்ட பூவாக அப்பர் பெருமானால் சுட்டப்படுவதை நோக்க, பின்னாளிலேயே இது பிள்ளையாருக்கு உகந்த பூவாக மாற்றப்பட்டமை தெளிவாகும். எவ்வித அடிப்படைச் சுட்டலும் இல்லாத இப்பாடலடி கொண்டு, பிள்ளையார் வழிபாடு சங்க காலந்தொட்டே இருந்தது எனக் கூறுவார் கூற்று எவ்விதத்தானும் உண்மையாகாமை கண்கூடு.

தமிழ்நாடு முழுவதுமாய் மேற்கொள்ளப்பட்ட அகழ்வாய்வுகள் இக்காலகட்டச் சான்றுகளைப் பலவாய்த் தந்திருந்தாலும், பிள்ளையார் வழிபாட்டைக் குறிக்கும் எத்தகு அடையாளங்களையும் இன்றுவரை தரவில்லை. தமிழ் நாட்டின் குகைத்தளங்களில் காணப்படும் இக்காலக்கட்டத் தமிழ்க் கல்வெட்டுகளும் இது குறித்து மௌனமாகவே உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

சங்ககாலத்தை அடுத்தமைந்த மூன்று நூற்றாண்டுகளில் (கி.பி.200- கி.பி.500) தமிழ்நாடு தமிழர் கையிலிருந்து மாறிப் பல்லவர், களப்பிரர் வயமாயிற்று, இக்காலக் கட்ட வரலாற்றையறிய பல்லவர்களின் பிராகிருத, வடமொழிச் செப்பேடுகளும் இலக்கியங் களும் உதவுகின்றன. பல்வேறு அறிவியல் பூர்வமான சான்றுகளின் அடிப்படையில் தமிழ்நாடு, இலங்கை, ஜப்பான் சார்ந்த அறிஞர் பெருமக்கள் சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள் முதலிய இலக்கியங்களை இக்காலகட்டம் சார்ந்தவையென அடையாளப்படுத்தி யுள்ளனர். இவ்விலக்கியங்களுள், தமிழ் சமய வரலாறு குறித்து அரிய

பல தரவுகளை உள்ளடக்கியிருக்கும் சிலப்பதிகாரம் புகாரிலும், மதுரையிலும் இருந்த இறைக்கோயில்களை வகைப்படுத்தியும் வரிசைப்படுத்தியும் காட்டுகிறது.

பிறவா யாக்கைப் பெரியோன் (சிவபெருமான்), ஆறுமுகச் செவ்வேள் (முருகன்), வாலியோன் (பலராமன்), நெடியோன் (திருமால்), இந்திரன், கொற்றவை, கதிரவன் எனப் பல்வேறு முதன்மைத் தெய்வங்களைச் சுட்டும் சிலப்பதிகாரம், தருக்கோட்டம், வெள்யானைக் கோட்டம், வேற்கோட்டம், வச்சிரக் கோட்டம் என இறை சார்ந்தவற்றிற்கமைந்த கோயில்களையும் காட்டுகிறது. சிறு தெய்வ வணக்கம் பற்றியும் விரித்துரைக்கும் இவ்விலக்கியத்தில் பேரூர் சார்ந்தோ சிற்றூர் சார்ந்தோ எவ்விடத்தும் பிள்ளையார் வழிபாடு பேசப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இக்காலகட்டத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் பூலாங்குறிச்சிக் கல்வெட்டு, கோயில் களைப் பற்றியும் இறைவழிபாடு பற்றியும் கூறினாலும் பிள்ளையார் பற்றிய குறிப்புகளைக் கொண்டிருக்காமை கருதத்தக்கது.

பிள்ளையாரை முதன் முதலாக அறிமுகப்படுத்தும் இலக்கியங்கள் அப்பர், சம்பந்தர் திருமுறைகளே. இந்த ஆறு திருமுறைகளிலும் அப்பரும் சம்பந்தரும் பிள்ளையாரைப் பற்றி மிகக் குறைவான இடங்களிலேயே குறிப்புத் தருகின்றனர். இப்பெருமக்களின் காலம் கி. பி. ஏழாம் நூற்றாண்டின் தொடக்கமென அறிஞர் கொள்வர். இக்குறிப்புகளால், பிள்ளையார் சிவபெருமானால் தோற்றுவிக்கப் பட்டவர் என்பதையும் கயாசுரனைப் போரில் வென்றவர் என்பதையும், அறியமுடிவதுடன், அவரது தோற்றம் பற்றிய வண்ணனைகளையும் ஓரளவிற்குப் பெற முடிகிறது.

உமை பெண் யானையின் வடிவம் கொள்ள, சிவபெருமான் ஆண் யானையின் வடிவம் கொண்டு இணைந்ததன் பயனாய்ப் பிறந்தவர் பிள்ளையார் என்பதை இரண்டு பதிகங்களால் விளக்குகிறார் சம்பந்தர். தம்மை வழிபடும் அடியவர் தம் இடர்களைத் தீர்ப்பதற்காக இறைவன் அருளிய கொடையே கணபதி என்று பிள்ளையாரின் பிறப்பிற்குக் காரணம் காட்டும் சம்பந்தர் (சம். 1: 123:5, 126:6) 'தந்த மகத்தவன் தாதை' (1:115:2), 'மருப்புறுவன் தாதை' (1:117:8), 'கரியின் மாமுகமுடைய கணபதி தாதை' (2:232:3) என்று சிவபெருமானைச் சிறப்புச் செய்யுமாறு பிள்ளையாரின் தோற்றம் காட்டுகிறார்.

நாவுக்கரசர், சம்பந்தரின் கூற்றைக் 'கைவேழ முகத்தவனைப் படைத்தார்' (6:53:4), 'விநாயகர் தோன்றக் கண்டேன்' (6:77:8) 'ஆனைமுகற்கு அப்பன்' 6:74:7), 'கணபதி என்னும் களிறு' (4:2:5) எனும் பல்வேறு தொடர்களால் உறுதிப்படுத்துகிறார். கயாசுரனைக் கொல்லச் சிவபெருமான் பிள்ளையாரைப் பயன்படுத்திக் கொண்ட தகவலைத் தரும் நாவுக்கரசர், அதற்காகவே பிள்ளையார் பிறப்பிக்கப்பட்டாரெனக் கருதுமாறு பாடலமைத்துள்ளார் (6:53:4).

முருகப் பெருமானைப் பற்றி நாற்பத்தேழிடங்களில் விதந்தோதும் இவ்விரு சமய குரவரும், பிள்ளையாரைப் பற்றி மிகக் குறைவான அளவிலேயே குறிப்புகள் தந்திருப்பதை நோக்க, இவர்தம் காலத்திற்குச் சற்று முன்னதாகவே பிள்ளையார் வழிபாடு தமிழ்நாட்டில் கால் கொண்டதாகக் கருதலாம்.

தமிழ்நாட்டில் இன்றைக்கும் காணப்படும் இறைக்கோயில்களும் காலத்தால் பழமையானவை குடைவரைகளே. குன்றுகளைக் குடைந்தும், பாறைகளைச் செதுக்கியும் இத்தகு குடைவரைகள் அமைக்கப்பட்டன. வட தமிழ்நாட்டில் இத்திருப்பணியைத் தொடங்கிய வர் பல்லவப் பேரரசரான முதலாம் மகேந்திரவர்மர். இவர் குடைவரை கள் எவற்றிலும் பிள்ளையார் சிற்பம் இடம்பெறவில்லை. திருக்கழுக் குன்றத்தில் உள்ள ஒருகல் மண்டபம் முதலாம் நரசிம்மவர்மரின் திருப்பணியாகக் கருதப்படுகிறது. இதிலும் பிள்ளையாரின் வடிவமி ல்லை. இராஜசிம்மரின் குடைவரைகளிலும் பிள்ளையாரின் சிற்பம் இறைவடிமாகக் காட்டப்படவில்லை என்றாலும், மாமல்லபுரம் இராமாநுசர் குடைவரையின் கணவரியில் பிள்ளையார் இடம் பெற்றுள்ளார்.

இராஜசிம்மர் காலப் பணியான மாமல்லபுரம் தருமராஜர் ரதத்தின் கணவரியிலும் பிள்ளையார் எனக் கொள்ளத்தக்க வடிவங்கள் இடம் பெற்றுள்ளன. இராஜசிம்மரின் கற்றளிகளில் பிள்ளையார் கூடுகளிலும் கோட்டங்களிலும் இடம்பெறத் தொடங்குகிறார். சிராப்பள்ளியிலுள்ள கீழ்க்குடைவரை, சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த திருப்பட்டூர்க் கயிலாசநாதர் கோயில், செங்கற்பட்டு மாவட்டம் வல்லத்திலுள்ள கந்தசேனரின் குடைவரை ஆகியவற்றில் பிள்ளையார் கோட்டத் தெய்வமாகக் காட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. இக்காலக் கட்டத்தைக் கி. பி. எட்டாம் நூற்றாண்டின் தொடக்கப்பகுதியாகக் கொள்ளலாம். இதனால் வட தமிழ் நாட்டு இறைக்கோயில்களில்,

பிள்ளையாரின் சிற்பங்கள் சம்பந்தர், அப்பர் காலத்திற்கு ஏறத்தாழ ஒரு நூற்றாண்டிற்குப் பிறகே இடம் பெறத் தொடங்கியமை தெளியப்படும்.

தென்தமிழ்நாட்டில் பாண்டியர், முத்தரையர் கைவண்ணமாகப் பிறந்த குடைவரைகள் பலவற்றில் பிள்ளையாரின் சிற்பம் காணப்படுகிறது. இவற்றுள் குறிப்பிடத்தக்கது பிள்ளையார் பட்டி. இங்குள்ள பிள்ளையார் இன்றைக்கு முதன்மைத் தெய்வமாக வழிபட்டாலும், உருவான காலத்தில் சிவன் கோயிலின் பக்கச் சுவரில் கோட்டத் தெய்வமாகச் செதுக்கப்பட்டவரே ஆவார். இக்குடைவரையில் இடம்பெற்றுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டு, 'எக்காட்டூருக் கோன் பெருந்தசன்' எனும் பெயரைத் தருகிறது. இக்கல்வெட்டின் எழுத்தமைதி கொண்டு இதை ஆறாம் நூற்றாண்டென்பர் அறிஞர்கள். இக்கருத்து ஏற்புடையதாயின் பிள்ளையார்பட்டிக் குடைவரையின் காலமும் ஆறாம் நூற்றாண்டாகிவிடும். எனில், தமிழ்நாட்டின் காலத்தால் முற்பட்ட பிள்ளையார் சிற்பமாகப் பிள்ளையார்பட்டிக் குடைவரைப் பிள்ளை யாரையே கொள்ள வேண்டிவரும். குடைவரையின் அமைப்பு, சிற்பங் களின் செதுக்கு நேர்த்தி கொண்டு இக்குடவரையின் காலத்தை ஏழாம் நூற்றாண்டாகக் கொள்வாரும் உண்டு. இரண்டில் எதை ஏற்பினும் இப்பிள்ளையாரே தமிழ்நாட்டின் காலத்தால் முற்பட்ட பிள்ளையார் என்பதில் ஐயமில்லை.

திருமலைப்புரம், செவல்பட்டி, தேவர்மலை, அரிட்டாபட்டி, மலையக்கோயில், திருக்கோளக்குடி, திருப்பரங்குன்றம், மலைப்பட்டி, குன்றக்குடி, கோகர்ணம் முதலிய பல பாண்டியர், முத்தரையர் குடைவரைகளில் பிள்ளையார் சிற்பம் இடம்பெற்றுள்ளமையை நோக்க, தமிழ்நாட்டில் பிள்ளையார் வழிபாடு காலூன்றிய இடமாகப் பாண்டிய மண்ணையே கொள்ள வேண்டியுள்ளது. கி.பி. ஆறு, ஏழாம் நூற்றாண்டு களில் சிராப்பள்ளிக்குத் தெற்கே காலூன்றிப் பரவிய இப்பிள்ளையார் வழிபாடு எட்டாம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில்தான் வடதமிழ் நாட்டிற்குள் குடிபுகுந்தது. எட்டாம் நூற்றாண்டிற்குப் பிறகும் தமிழ்நாட்டுச் சமய வரலாற்றில் முருகப் பெருமானுக்குக் கிடைத்த இடம் பிள்ளையாருக்குக் கிடைக்கவில்லையென்பதே உண்மை.

பல்லவர், பாண்டியர், முத்தரையர் குடைவரைகளில் கோட்டத் தெய்வமாக இடம்பெற்ற பிள்ளையார், தொடக்கக் காலப் பல்லவக் கற்றளிகளில் ஆங்காங்கே இடம் பெற்றாலும் தொடர்ந்து கற்றளி களில்தான் உள்மண்டபத் தென்கோட்டத் தெய்வமாக நிலைபெற்றார். இந்நிலைபேறு சோழர் காலத்தில் உறுதியாக்கப்பட்டது.

சோழர் காலக் கற்றளிகளில் திருச்சுற்றில் சுற்றாலைக் கோயில்கள் உருவானபோது எண்பரிவாரத்துள் ஒன்றாகப் பிள்ளையாருக்கும் இடம் கிடைத்தது. திருச்சுற்றின் தென்மேற்கு மூலை பிள்ளையாருக்கு உகந்த இடமாக ஒதுக்கப்பட்டு அவருக்கெனத் தனித்திருமுன் அமைக்கப் பட்டது. இத்தகு பிள்ளையார் திருமுன்களைச் சோழர் கற்றளிகளிலும் பின்னால் வந்த பிறமரபுப் பேரரசுக் காலக் கற்றளிகளிலும் இன்றும் காணலாம்.

கோட்டத் தெய்வமாகவோ, சுற்றாலைத் தெய்வமாகவோ மட்டுமே அமைந்த பிள்ளையாருக்குத் தனிக் கோயிலமைக்கும் பழக்கம் மிகப் பிற்பட்ட காலத்திலேயே ஏற்பட்டது. தமிழ்நாட்டுக் கோயில்களில் கிடைக்கும் பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுகளும் அதையே உறுதி செய்கின்றன.



# ஏழகப்படை

**கம்பன்அடிப்பொடி சா. கணேசன்**

"**க**ல்லில் முட்டிக் கொண்டால் பல்லுத்தான் உடையும்" என்பது ஒரு பழமொழி. "அது சரியா?" என்று என்னைக் கேட்டால், இல்லை என்ற சொல்வதோடு மட்டும் அமையமாட்டேன். ஆனால் அப்படி முட்டிக் கொண்டால் தான் எத்தனையோ வரலாற்று நிகழ்ச்சிகளை மூடிக்கொண்டிருக்கும் இருள் ஓடி உடைபட்டு ஒளி வெளிப்படும் என்று அழுத்த மாகச் சொல்வேன்.

ஆம்; அது மெய்; முற்றும் மெய்; வெறும் புகழ்ச்சி இல்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, ஆயிரம் பல்லாயிரம் கற்கள் எத்தனை எத்தனையோ கதைகளைத் தம்முள் அடக்கிக்கொண்டு தமிழகம் எங்கும் யார் கேட்பார்கள் என்று கதை சொல்லக் காத்துக் கிடக்கின்றன. கேட்பாரில்லையே என்று ஏங்கித் தவித்து உடல் நைந்து நலிந்து உருக்குலைந்து போன கற்கள் கணக்கில் அடங்கா. எஞ்சிய உறுதியுள்ள கற்களைக் கண்டவர்கள் ஏராளம். கிட்ட நெருங்கியோர் பலர். நோக்கியவர்கள் சிலர். அவர்களிலும் சொற்பம் கற்களைக் கேட்க முன்றவர்கள். ஆனால் ஓர் அற்பத் தொகையினரே கல்லைக் காதலித்து அதன் காலடியிலே நின்று பல காலும் முட்டி மோதிக் கொண்டவர்.

சில காலமாகக் கல்வெட்டுத் துறை ஆராய்ச்சியாளர்கள் கனவிலுங்கூடக் கல்லில் முட்டிக் கொள்வதையே தவிர்க்க வொண்ணாக் கடமையாகக் கொண்டொழுதியதன் பயனாக மறைந்து கிடந்த கதைகள் பலவற்றை அந்தக் கற்கள் சொல்லத் தொடங்கின. அதுவும் அரைகுறையாக ஏதோ கடனுக்கு முட்டிக்கொண்டவர்களிடம் அந்தக் கற்களுக்கு என்னவோ ஓரளவு இரக்கம் ஏற்பட்டாலும் தக்கபடி பரிவு உண்டாகவே இல்லை. ஆனால், செம்மையாக அதாவது பக்தி சிரத்தையான வைராக்கியத்தோடு முட்டிக் கொண்டவர்களிடந்தான் கல்லும் கனிந்து கதை சொல்லத் தொடங்கி யிருக்கிறது. அவர்களும் தங்கள் காது குளிரக் கேட்ட வற்றையெல்லாம் நமது மனமும் மகிழ அப்படியப்படியே எழுதி வெளியிட்டிருக்கிறார்கள்.

என்றாலும், சரியாக முட்டிக் கொள்ளாத, ஏன், எட்டியே கூடப்பார்க்காத கதை சொல்லும் கற்கள் பல, தமிழ் நாட்டிலே இன்னும் நிரம்பக்கிடக்கின்றன. அவற்றையெல்லாம் அணுகி, முட்டி மோதி முயன்று அவற்றினுள்ளே மறைந்து கிடப்பனவற்றை வெளிப்படுத்த வேண்டும். அப்பொழுதுதான் தென்னிந்திய வரலாற்றை ஓர் அளவிலாவது, செம்மையாகப்புலப்படுத்தக் கூடும். இன்றுள்ள புதிர்களும் ஐயப்பாடுகளும் குழப்பங்களும் பேரளவு விடுபட்டு ஓரளவு கிட்டவும் கூடும். சரி; இனி கல் சொல்லும் கதையைக் கேட்கலாம்.

காரைக்குடியை ஒட்டி ஒரு சிற்றூர். 'கழனிவாசல்' என்பது அதன் பெயர். ஒரு நாள் அந்தக் கிராமத்தைச் சுற்றிப் பார்க்கலாம் என்று போனேன். மிகப்பழுதுபட்டுக் கிடக்கும் ஒரு பெருமாள் கோயில் என் கண்ணில்பட்டது. வந்தது தான் வந்தோம். பெருமாளையாவது சேவிக்கலாம் என்று உள்ளே நுழைந்தேன். வாயிற் படிக்குப்பக்கத்தில் கிடந்த கல் ஒன்று என் காலைத் தடுக்கிற்று. 'என்னடா, உள்ளே நுழையும் பொழுது அபசகுனம் போலத் தடுக்கிறதே!' என்று சிறிது தயங்கினேன். நான் தயங்கிச் சிறிது நின்றதும் அந்தக் கல் என்னைப் பார்த்துப் பேசத் தொடங்கி விட்டது. கல் பேசும் என்பதைக் கனவிலும் கண்டறியாத நான் வியப்படைந்து திகைத்து நிலைபெயராமல் நின்றே விட்டேன்.

"இத்தனை நாளாக நீ ஏன் இந்தப் பக்கத்தை எட்டிக் கூடப்பார்க்க வில்லை. 'இது ஒரு பட்டிக்காடு, இந்தக் கோயில் ஒரு பாடாவதிக் கோயில்' என்ற எண்ணந்தானே. நான் சொல்லப் போகும் கதையைக் கேட்டால் அந்த எண்ணமெல்லாம் ஆடிக்காற்றில் அகப்பட்ட பஞ்சாய்ப் பறந்து போகாதா என்ன?'' என்றும் சொல்லி நிறுத்திற்று. என்ன ஆச்சரியம்! கல் பேசுகிறது; கதையும் சொல்லாப் போகிறதாமே? நான் ஒருகால் கனவு காண்கிறேனா? அல்லது கற்பனை உலகில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறேனா?' என்று ஒரு விநாடி மயக்கமுற்றேன். ஆனால் மறு விநாடியே, 'அப்படி ஒன்றும் இல்லை; தன்னியல்பிலேயே இருக்கின்றேன்' என்று பெருமையடைந்தேன். கல் கதையைத் தொடங்கிவிட்டது. சரி; கல் சொல்லும் கதையை தான் கேட்போமே என்று காதுகளைத் தீட்டிக்கொண்டு விழித்த கண் விழித்தபடி நின்றேன்.

அப்பா கணேசா, நீ எண்ணிகொண்டிருப்போது இது ஒரு சாதாரணப்பட்டிக்காடு அல்லச சரித்திரச் சிறப்பு வாய்ந்த பழம்பெருநகரம் இது. உன் முந்னோர்கள் பன்னூறு ஆண்டுகளுக்கு

முன் இங்கே குடியேறி வாழ்ந்திருக்கி றார்கள். பக்கத்தில் இருக்கிறதே உன் ஊர்- ஆம், காரைக்குடி நகரம் - அது இன்று பெரிய நகரமாக இருந்தாலும் இருநூறு ஆண்டுகள் தாம் ஆகின்றன. அது உண்டாகி. ஆனால் இந்த நகரமோ மிகப்பழமையானது. பல பெருந்தெருக்களைக் கொண்டு விளங்கியது இந்த நகரம். 'பெருந்தெரு' என்றால் நீ நினைக்கிறபடி பெரிய வீதி என்று பொருள் அல்ல. ஓர் ஊர்ப்பகுதியைப் 'பெருந்தெரு' என்று வழங்குவார்கள் அக் கால மக்கள். பல தெருக்களையும் சந்துகளையும் கொண்டு விளங்கும் 'பெருந்தெரு' தெரிந்ததா? இந்த ஊர். கோட்டையும் கொத்தளமும் அங்காடியுமாக அந்தக் காலத்தில் கண்குளிரக் காட்சியளித்துக் கொண்டிருக்கும். இங்கு ஒரு பெரும்படை இருந்தது. பாண்டிய நாட்டிற்கே பெரும்புகழ் ஈட்டிக் கொண்டிருந்த படைக்கு இவ்வூர்தான் இருப்பிடம். இந்தப் படையின் பெயரைக்கேட்டாலே எதிரிகள் திடுக்கிடுவார்கள். அந்தப் பெயர் என்ன என்று தெரிந்துகொள்ள நீ மிக்க ஆவல் உள்ளவனாயிருக்கிறாய் அல்லவா? பாவம்! உன்னைக் காக்கவைக்கவில்லை. சொல்லிவிடுகிறேன். கேள்; 'ஏழகப்படை' என்பது தான் அப்படைக்கு உரிய பெயர். இந்த ஊர் இன்னும் தமிழ் நாட்டுச் சரித்திரப் புத்தகத்தில் இடம் பெறாவிட்டாலும் இந்த 'ஏழகப்படை'யின் பெயர் இடம் பெற்றுவிட்டது. மரம் உறங்கும்; மண் உறங்கும்; பூ உறங்கும்; புள் உறங்கும்; மக்களும் உறங்குவர் என்றாலும் இந்த வளநகர் உறங்கியறியாது. கடைகளும் வீடுகளும் கதவுமூடக் கண்டறியேன். இரவு பகலும் எந்நேரமும் இந்த நகரம் ஜே ஜே என்று இருக்கும். இந்நகரத்தைக் கண்டுதானே ஒரு புலவர் 'அடையாத வாயில் அகம்' என்று பாராட்டி பாடியிருக்கிறார்? என்ன, உனக்கு எல்லாம் வியப்பாக இருக்கிறது அல்லவா? நீ நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி தான்; வகையாக வந்து மாட்டிக்கொண்ட உன்னிடம் என் கதையைச் சொல்லாமல் மட்டும் விட மாட்டேன்.

"இந்த நகரின் பெயர் தான் 'ஏழகம்' என்பது. அதனால் தான் இங்கிருந்து அந்தப் புகழ் பெற்ற படை 'ஏழகப்பெரும் படை' அல்லது 'ஏழகப்படை' என்று வழங்கியது. 12ஆம் நூற்றாண்டுக்கு முன்வரையில் இந்தப்படை ஈடும் இணையுமற்றுத் தனிப்புகழ் கொண்டு விளங்கியது. வணிகர் வாழ்ந்த பகுதிக்கு 'ஏழகப்பெருந்தெரு' என்பது பெயராகும். அதை 'ஏழகச்சக்கவர்த்திப் பெருந்தெரு' என்றும் கூறுவார்கள். இந்தப் பெரு மாள் கோயிலுக்கு 'ஏழகப்பெருமான் விண்ணகரம்' என்பதே திருநாமம். வீரபாண்டியன் காலத்தில் இதற்கு வீரபாண்டியபுரம்' என்ற

மற்றொரு பெயரும் ஏற்பட்டது. அதனால் இதை 'ஏழகப்பெருந் தெருவான வீரபாண்டியபுரம்' என்றோ 'ஏழகச் சக்கரவர்த்திப் பெருந் தெருவான வீரபாண்டியபுரம்' என்றோ இணைத்துக் குறிப்பிடுவதை சாசன வழக்காகி விட்டது. மேலும் சிறுகுளம், கழினி வாயில், மருதேந்திரபுரம் முதலான பெயர்களால் இதன் நகரப் பகுதிகள் வழங்கி வந்திருக்கின்றன.

"இங்கே வசித்த நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தொகை நிலையால் 'ஐஞ் ஞாற்றுவர்' என்றும் வகை நிலையால் எழுவகையார் அல்லது ஏழகத்தார் என்றும் குறிப்பிடப் பெற்றார்கள். அவர்களுக்குள்ளே ஒரு பிரிவினரான, அதாவது ஏழுவகை நகரத்தார்களுக்குள் ஒரு வகையினரான வயிரவன் கோயிலாருக்கு 'ஏழகப் பெருந்தெருவான வீர பாண்டிய புரமுடையார்' என்றே கோத்திரப் பெயர் வழங்கி வருகிறது. அதுவன்றியும் அவர்களின் உட்பிரிவு மூன்றுக்கும் சிறுகுளத்தூருடையார், கழனிவாயிலுடையார், மருதேந்திரபுரமுடையார் என்றே பெயர்கள் வழங்கியும் வருகின்றன என்பது உனக்குத் தெரியுமே.

"பாண்டிய நாட்டுப்படை இருவகை யான அமைக்கப்பட்டிருந்தது. ஒன்று மறப்படை; அதாவது (offensive Force) வெளிப்போந்து தாக்குகின்றவர்கள் மற்றொன்று அகப்படை; அதாவது (defensive Force) உள்நின்று வெளியார் தாக்குதலைத் தடுத்து நாட்டைக்காப்பவர்கள். அவ்விருவகையினரின் சந்ததியார்களே இன்று மறவர் என்றும், அகம்படையர் அல்லது அகம்படியர் என்றும் முறையே அந்த அகப்படையில் மிக்க ஆற்றல் கொண்ட பகுதி இங்கே வைக்கப்பட்டிருந்தது. ஏழகத்தில் இருந்தகாரணத்தால் அந்தப் படைக்கு ஏழகப்படை என்று பெயர் வழங்கி வந்திருக்கிறது.

"இங்கிருந்த பல கல்வெட்டுகளும் இன்று மாய்ந்த மடிந்து மட்கிவிட்டன. என் மீதில் இருந்த எழுத்துக்களும் உன்னைப் போன்றவர்களின் கால் பட்டும் கைபட்டும் அழிந்தொழிந்தன. ஆனாலும் பக்கத்தில் உள்ள புதுக்கோட்டைச் சீமையில் அந்தச் சமஸ்தான அரசாங்கம் காட்டிய அக்கறையினால் அந்தச் சமஸ்தான எல்லைக்கு உட்பட்ட கல்வெட்டுக்களை எல்லாம் கல்வெட்டுப் பகுதியினர் பேணிப் பாதுகாத்து வருவதுடன் படி எடுத்து வெளியிட்டும் இருக்கிறார்கள். அவற்றுள் ஆலங்குடித் தாலுகா கோவிலூரில்

பாலபுரீசர் கோயில் தெற்குச் சுவரில் உள்ள சாசனம் யார் செய்த பூஜ பலனாலோ, இன்றும் இவ்வாறு நின்று கதை சொல்லிக்கொண்டிருக் கிறது.

"இந்த விவரங்கள் எல்லாம் வெளியுலகுக்குப் புலப்பட்டிருந்தால் மதுரை தாலுக்காவில் இன்று திருவேடகம் என்று வழங்கும் ஏடகந்தான் ஏழகமாயிருக்க வேண்டும் என்றும், 'ஏழகப்படை' என்பது அந்த ஏடகத்தில் இருந்தபடையே ஆக வேண்டும் என்றும், 'ஏழகத்தார்' எனக் காணப்படும் சொல்லும் அந்த ஏழகப்படையைக் குறிப்பிடுவ தாகவே கொள்ள வேண்டும் என்றும் திருநீலகண்ட சாஸ்திரியாரைப் போன்ற புகழோராகிய சரித்திரப் பேராசிரியர்களுங்கூட மயங்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்காது அல்லவா?

"அன்று பரகேசரி மூன்றா வது குலோத்துங்க சோழன் குலசேகர பாண்டியன் மீது கடுங்சினங் கொண்டு பெரும் படை நடத்திப்போர் செய்ய வந்தான். அப்படி வந்து கொண்டிருந்தவனை இந்த ஏழகப்படை மட்டியூரில் எதிர்த்துப் பொருதது. அந் நாளில் இவர்கள் காட்டிய வீர தீர பராக்கிரமங்களை எதிரிகளுங்கூட உளமாரப் பாராட்டினார்கள். அதை நினைக்கும் பொழுதெல்லாம் உடல் சிலிர்க்கிறது; உள்ளம் இறும்பூது எய்துகிறது.

''இவற்றையெல்லாம் யார் உலகிற்கு எடுத்து விளக்கப் போகிறார்களோ? மேலும் ஒன்று மட்டும் சொல்ல வேண்டும் என்னைப் போல இன்னும் எத்தனையோ கற்கள் தங்களிடம் உள்ள கதைகளை யெல்லாம் சொல்லவேண்டும் என்று தவியாய்த் தவித்துக் கொண்டிருக்கின்றன. அவற்றையெல்லாம் கண் காது, கொடுத்துக்கேட்பார் யாரோ? ஏதோ என் ஏக்கம், பெருமானைச் சேவிக்கச் சென்ற உன்னைத் தடுத்து நிறுத்திக் காலத்தை போக்கி விட்டேன். என் மீது கோபங்கொள்ளமாட்டாயே?"

ஏதோ பெருந்தவறு செய்து விட்டு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும் பாவனையில் அந்தக்கல் தன் பேச்சை முடித்தது.

"கோபமா? ஆம்; கோபந்தான்; அதுவும் ஆறாத கோபம். ஆனால் உன் மீது அல்ல; எங்கள் முன்னோர்களின் மீது தான் கோபமும் ஆத்திரமுமாக வருகிறது. வந்து என்ன செய்வது, அவர்கள் யாவருமே தப்பித்துச் சென்று விட்டார்களே! இனிக் கோபமும் ஆத்திரமும்

கொள்வதால் என்ன பயன். போகட்டும்? உலகறியாது மறைந்து கிடக்கும் இந்த உண்மைகளையெல்லாம் எனக்கும் புலப்படும் வண்ணம் எடுத்துரைத்த உனக்கு என்ன கைமாறு செய்வதென்பதுதான் புலப்படவில்லை. ஆனால் நீ தெரிவித்தபடி செல்லும் இடங்களில் காணும் கற்களை எல்லாம் கதை சொல்வதைக் கேட்டு அவற்றின் ஏக்கத்தை ஏதோ என்னால் முடிந்தவரை போக்க முயல்கிறேன்'' என்று சொல்லி நன்றியறிவோடு பெருமாளுக்கு போட வேண்டிய கும்பிடை அந்த அருமையாக கல்லுக்கே போட்டு விட்டு வீட்டுத் திரும்பினேன். நான் செய்தது சரிதானே?



# திருக்கோயில் நந்தவனம்

சிவஸ்ரீ பி. ஸ்ரீதர் சிவாசாரியார்
*பிள்ளையார்பட்டி*

பூப்பூக்கும் பூந்தோட்டம் நந்தனவனம் என்றும் நந்தவனம் என்றும் அழைக்கப்பெறும்; இந்திரனது பூங்காவனத்துக்கு நந்தனவனம் என்று பெயர். இச்சொல் பெருங்கதை என்னும் காப்பியத்தில் 'அந்தர மருங்கி னந்தன வனத்தோடு' (பெருங். இலாவாண 12:49) என்று வருகின்றது. கம்பர் 'நந்த நந்தவனங்களின் நாண்மலர்' (கிளை காண். 14) என்று ஆளுவர்; எனினும் மக்கள் பேச்சில் 'நந்தவனம்' என்று அழைப்பதே மிகுதி. தூய இடத்தில் நல்ல மண்ணில் பல்வகைச் செடிகொடிகளைப் பயிரிட்டு அவை பூக்கும் மலர்களைத் திரட்டி மாலைகளாகவும் சரங்களாகவும் தொடுத்துத் திருக்கேயிலுக்கு வழங்குவதற்காக ஏற்படுத்தப் பெற்றதே நந்தவனம். இங்குக் காய்க்கும் மாமரம், கொய்யாமரம் போன்றவற்றைப் பயிர் செய்யார். இளநீர்த் தேவை கருதித் தென்னை வைத்திருப்பதுமுண்டு.

## நந்தவனம் ஏற்படுதல்

நந்தவனங்கள் கோயிலை ஒட்டிக் கோயில் எல்லைக்குள் அமைந்திருப்பது ஒருவகை; இன்னொருவகை பெரிய நிலப்பரப்பில் கோயிலை விடுத்துத் தனியே அமைந்திருப்பது; மற்றொரு வகை பசுமடத்தை ஒட்டியே பசுமடத்துடன் சேர்ந்திருப்பது. திருக்கோயில் திருப்பணி செய்த நகரத்தார்கள், கோவிலிலுள்ள எல்லாத் தெய்வங்களுக்கும் காலையிலும், மாலையிலும் அணிவிக்க நந்தவனம் அமைத்தனர். தேவாரப் பாடல் பெற்ற தலங்களில் திருக்கோயில் திருப்பணி செய்தவர்களே, நந்தவனமும் ஏற்படுத்தினர். சில ஊர்களில் திருப்பணியாளரொடு தொடர்புடையவர்கள் நந்தவனம் அமைத்தனர். கோயிலுக்கு ஆகம பாடசாலை எவ்வாறு தேவையோ அவ்வாறே நந்தவனமும் தேவை என்று உணர்ந்தனர், நகரத்தார்கள்.

## பூவகை

திருக்கோயிலில் எந்த தெய்வத்துக்கு எந்த வண்ணப்பூ வேண்டுமோ அதைக் கருதிப் பயிரினங்களை வைத்தனர். சிவப்பு அரளி,

நந்தியாவட்டை, மஞ்சள் அரளி, பொன் அரளி, மாசிப்பச்சை, துளசி, கொழுந்து (மரிக்கொழுந்து), செவந்தி, போன்றவை பயிரிடப்பெற்றன. செவ்வரளி எக்காலத்தும் பூக்கும்; வேண்டிய அளவும் பூக்கும். சவுட்டான் நந்தியாவட்டை எல்லா நாளிலும் நிறையப் பூக்கும்; இது வெள்ளை நிறப்பூ. பர்மாவிலுள்ள சவுட்டான் என்ற ஊரிலிருந்து கொண்டுவரப்பட்டுப் பயிர் செய்யப்பெற்றது; இப்பூவகையைச் செட்டிநாட்டில் மட்டுமே காணமுடியும். இவையன்றி பவளமல்லி (பாரிஜாதம்), மனோரஞ்சிதம், நாகதாளி (சிவலிங்கம் போன்றது) ஆகியனவும் நந்தவனத்தில் இருந்தன. கொடிப்பூவாக முல்லை, சாதி, மல்லிகை ஆகியன பந்தல் போடப்பெற்று வளர்க்கப்பெற்றன. ரோஜாச் செடியை நந்தவனத்தில் பெருமளவில் பயிரிடவுமில்லை; அவற்றைக் கோயிலுக்குக் கொடுத்ததாகவும் தெரியவில்லை.

## நீர்ப்பூ

தெய்வங்களுக்கு நீர்ப்பூக்களின் மீது விருப்பமும் உண்டு. இதனால் நந்தவனத்தில் செயற்கையாகத் தண்ணீர்த் தொட்டி களமைத்து அவற்றில் தாமரை, செங்கழுநீர் போன்ற மலர்களை வைத்து வளர்த்தனர். புள்ளிருக்கும் வேளூரில் தெ.கி.தெ. தனியே செங்கழுநீர் ஓடை வைத்து அருத்த சாமத்துக்குச் செங்கழுநீர்ப் பூ வழங்கினார்கள். கீழச்சிவல்பட்டியில் நா. அ. அவர்களும் தண்ணீர்த்தொட்டி இரண்டு அமைத்து நீர்ப்பூக்களைச் சிவன் கோயிலுக்கு வழங்கினார்கள்.

## தூய்மை காத்தல்

நந்தவனத்தில் தெய்வக் கைங்கரியத்துக்குப் பயன்படுத்தப்படும் பூச்செடிகளுக்குப் பாயும் தண்ணீர், கமலை போட்டு இறைக்கப்பட்டது; பின்னர் இயந்திரம் பொருத்தப்பெற்றது. யாரும் நீராடிய தண்ணீரோ துணி துவைத்த தண்ணீரோ பெண்கள் குளித்த நீரோ நந்தவனச் செடிகளுக்குப் பாய்வதில்லை; பாயவிடுவதில்லை. தீட்டுக்குரிய பெண்களை நந்தவனத்துக்குள் அனுமதிப்பதில்லை; இவ்வாறு பூக்களின் தூய்மை காப்பாற்றப்பெற்றது. நந்தவனத்தில் பூச்செடிகள் அன்றி மூலிகைச் செடிகளும் ஒரோ வழி வளர்க்கப்பட்டன. இதனால் நந்தவனம் திருக்கோயில் திருப்பணிக்குத் துணை நின்றது போல மக்களுக்கும் பயன்பட்டது.

## தொடக்கமுறை

முதற்கண், பசுமடம் அல்லது நந்தவனம் தொடங்கப்பெற்றது. பாடல்பெற்ற தலங்களில் நந்தவனம் இருந்தால் அதை அடிப்படையாகக் கொண்டு பசுமடங்கள் உருவாகின; பசுமடத்தின் எரு, நந்தவனத்துக்கு உரமாயிற்று. பசு உரத்தை வெளியே வாங்க வேண்டிய தேவை இதனால்

அடிபட்டுப் போயிற்று. நந்தவனத்தில் வேண்டாது வளர்ந்த புற்கள், பசுக்கள் மேயப்பயன்பட்டன. பசுமடத்தில் வேலை பார்த்தவர், நந்தவனத்தையும் பேணினார்.

## பூச்சேகரித்தலும் தொடுத்தலும்

நந்தவனத்தில் பூக்களைத் திரட்டிக் கட்டுவதற்கு என்று தனியே கட்டடம் இருந்தது. இதற்கெனப் பட்டர், தேசிகர், பிள்ளைமார் என்ற சாதியார் இருந்தனர். இவர்கள் காலையில் பூக்களைப் பறித்து மாலையாகவும் சரங்களாகவும் தொடுத்துக் கோயிலில் கொண்டு போய்ச் சேர்ப்பர்; காலையில் மாலைகள் நிறைய இருக்கும்; மாலையில் அர்த்தசாமத்துக்குரிய மாலைகளே கொண்டுபோய்க் கொடுக்கப் பெறும். தருமத்தை நிறுவியவர், இப்பணி ஒழுங்காக நடைபெறுகிறதா? மாலைகள் வருகின்றனவா? அவற்றைக் குருக்கள் ஒழுங்காகத் தெய்வங்களுக்குச் சாத்துகின்றார்களா? என்று கண்காணித்தனர்.

நகரத்தார்கள் நந்தவனங்களை நிறுவிச் சிவனருள் பெற்றனர். நகரத்தார்கள் வாழும் முப்பத்து நான்கு ஊர்களில் தனியே நந்தவனமுள்ளது. பெரும்பாலான ஊர்களில் தனிப்பட்டவர்களோ தனிப்பட்ட வகையினரோ இத்தருமத்தைச் செய்துள்ளனர். கீழச்சிவல் பட்டி, சிவன் கோயிலுக்கு மூன்று திறத்தாரால் மூன்று நந்தவனங்கள் இருக்கின்றன. பாடல்பெற்ற தலங்களில் ஐம்பத்தாறு தலங்களில் நந்தவனங்கள் உள்ளன.

## மாலையிட்டு அழகுபார்த்தல்

சிவபெருமானுக்கு அபிஷேகம் முடித்து ஆடை அணிவித்து அழகு கூட்டியபின் மாலையணிவிப்பது மேலும் அழகு சேர்க்கும். பழைய காலத்தில் தெய்வத்தின் கழுத்தில் மாலை அணிவித்துத் தலையில் கொண்டை மாலை கட்டுவது நடைமுறை; கொண்டைமாலை கட்டும் வழக்கம் இக்காலத்தில் நின்றுவிட்டது. திருநாவுக்கரசர் ‘சலம் பூவொடு தூபம் மறந்தறியேன்'' என்பர். மலரின்றிச் சிவபூசை நிறைவுபெறாது. வைத்தீசுவரன் கோயில் சிவபெருமானுக்குச் சம்பாதி நெடுந்தூரம் சென்று மலர் கொண்டுவந்து செலுத்தி வணங்கினான். இதனைத் திருஞானசம்பந்தர்,

‘யோசனை போய்ப்பூக் கொணர்ந்துஅங்(கு)
ஒருநாளும் ஒழியாமே
பூசனை செய்துஇனி திருந்தான்
புள்ளிருக்கு வேளூரே’

என்று பாடுகின்றார். பூவிட்டுச் சிவபெருமானை வழிபடுதல் மிகச் சிறந்த செயலாகும்.

அருச்சனைக்குத் தேவையான வில்வத்தை வழங்குதல், ஓமங்களுக்கு வேண்டிய ஸமித்துகள் ஆகியவற்றையும் நந்தவனங்களே வழங்கின. எப்பொருளானாலும் தூயதாக இருக்கவேண்டும். கண்ட இடத்தில் வளர்ந்த அறுகம்புல்லைப் பயன்படுத்தலாகாது என்று கருதி விநாயகருக்கு அணிவிக்கத் தூய்மை நிறைந்த இடத்தில் அறுகம்புல்லை வளர்த்தனர்.

தொலைக் கடைகளின் வருமானம் இன்மையாலும் பசுமடம், நந்தவனங்களை நிருவகிக்கத் தக்க ஆட்கள் கிடைக்காமையாலும் நாளடைவில் இத்தருமம் குறைந்து போய்விட்டது. நந்தவனங்கள் பல இருந்த இடம் தெரியவில்லை; சில நந்தவனங்கள் இன்றும் திறம்பட நடைபெற்று வருகின்றன.

| | ஊர்ப்பெயர் | அறம் செய்தோர் | பிறகுறிப்பு |
|---|---|---|---|
| | **செட்டிநாட்டு ஊர்கள்** | | |
| 1. | சூரைக்குடி | - | 26.6.1988 |
| 2. | அரியக்குடி | - | |
| 3. | அலவாக்கோட்டை | - | |
| 4. | ஆவினிப்பட்டி | - | |
| 5. | உலகம்பட்டி | - பழ. சிவ. சிவராமன் செட்டியார் | |
| 6. | கடியாபட்டி | - | |
| 7. | கண்டரமாணிக்கம் | - | |
| 8. | கல்லல் | - | |
| 9. | காரைக்குடி | - | |
| 10. | காளையார்மங்கலம் | - | |
| 11. | கீழச்சிவல்பட்டி & பி.அளகாபுரி | 1. க. தெ. வும், மு. சாமு. வும் கூட்டு<br>2. க. தெ. நா. அ. 3. நா. கி. & நா. சி. | |
| 12. | குருவிக்கொண்டான்பட்டி | சித. அ. சி. சிதம்பரம் செட்டியார் | |
| 13. | குழிபிறை | - | |
| 14. | கொத்தமங்கலம் | - | |
| 15. | கோட்டையூர் | - | |

| | | |
|---|---|---|
| 16. | கோனாபட்டு | - |
| 17. | சண்முகநாதபுரம் | - |
| 18. | சிராவயல் | - |
| 19. | சிறுகூடற்பட்டி | - |
| 20. | சோழபுரம் | சி. கரு. சி. கரு. வெ. |
| 21. | நடராசபுரம் | - |
| 22. | நற்சாந்துபட்டி | கும. பெரி. |
| 23. | நாட்டரசன்கோட்டை | லெ. லட்சுமணன் செட்டியார் |
| 24. | பட்டமங்கலம் | அ. வீர. அ. |
| 25. | பலவான்குடி | வீ. சித. சிதம்பரம் செட்டியார் |
| 26. | பள்ளத்தூர் | - |
| 27. | மிதிலைப்பட்டி | க. எ. பழ. |
| 28. | மேலைச்சிவபுரி | - |
| 29. | இராயவரம் | - |
| 30. | கொ. இலட்சுமிபுரம் | மு. சி. வி. வும், ந. சொ. அரு. வும் |
| 31. | நெ. இலட்சுமிபுரம் | வ. செ. வும், கு. வ. கும. வும் |
| 32. | வலையபட்டி | ஆ. வி. சித. |
| 33. | வேகுப்பட்டி | - |
| 34. | வேந்தன்பட்டி | சுப. மு. முத்தையா செட்டியாரும், முரு. மெ. மெய்யப்ப செட்டியாரும் |

## செட்டிநாட்டைச் சுற்றியுள்ள ஊர்கள்

| | | |
|---|---|---|
| 35. | கண்டதேவி | - |
| 36. | குன்றக்குடி | - |
| 37. | கோவிலூர் | இரண்டு நந்தவனம்: 1. காரைக்குடி சு. ராம. 2. ப. முரு |
| 38. | திருமெய்யம் | நா. நா. முத்துக்கருப்பன் |
| 39. | நயினார் கோயில் | வீர. அ. சொ. |
| 40. | பில்லமங்கலம் | ஆத்தன்குடி ராம. கா. அரு. அரு. |

41. பேரையூர்
(பெய்யாத விநாயகர்) பெ. ராம. ராம.

42. இராயவரம் மலைக்கொழுந்தீசர் கோயில்
அரு. சாத்தப்ப செட்டியார்

## காவிரி வடகரை

| | | |
|---|---|---|
| 1. | தில்லை | காரைக்குடி மெ. செ. |
| 2. | சிவபுரி | - |
| 3. | திருநல்லூர்ப் பெருமணம் | சிறுகூடல்பட்டி சு. வெ. |
| 4. | சீர்காழி | - |
| 5. | புள்ளிருக்கும் வேளூர் | - |
| 6. | திருக்கண்ணார் கோயில் | பள்ளத்தூர் அள. சுப. சுப்பிரமணியன் செட்டியார் |
| 7. | திருநீடூர் | அரிமளம் அ. அரு. அண்ணாமலை செட்டியார் |
| 8. | திருவியலூர் | தேவகோட்டை சி. சு. பழ. சுப. சோம |
| 9. | திருவையாறு | தேவகோட்டை பி. ச. அரு. |
| 10. | திருவானைக்கா | தேவகோட்டை முரு. லெ. முருகப்ப செட்டியார் |

## காவிரி தென்கரை

| | | |
|---|---|---|
| 1. | திருக்கடம்பந்துறை | பி. அழகாபுரி க. தெ. இராமன் செட்டியார் |
| 2. | திருப்பாராய்த்துறை | கோனாபட்டு கா. சா. நா. |
| 3. | திருவெறும்பூர் | - |
| 4. | திருத்தென்குடித்திட்டை | பலவான்குடி ராம. கு. ராம. ராமசாமி செட்டியார் |
| 5. | திருவிடைமருதூர் | மெ. அரு. நா. |
| 6. | திருமயிலாடுதுறை | - |
| 7. | திருக்கடையூர் | கோனாபட்டு சுப. கு. சொக்கலிங்கம் செட்டியார் |
| 8. | திருவேட்டகுடி | - |
| 9. | திருத்தெளிச்சேரி | - |

| | | |
|---|---|---|
| 10. | திருஅரிசிற் கரைப்புத்தூர் | நேமத்தான்பட்டி மெ. மு. பழ. |
| 11. | திருக்கலய நல்லூர் | காரைக்குடி முத்த. வெ. வெள்ளையன் செட்டியார் |
| 12. | திருவிற்குடி | பள்ளத்தூர் சொ. மு. அ. மெ. அருணாசலம் செட்டியார் |
| 13. | திருச்சிக்கல் | பூலாங்குறிச்சி ராம. ப. வ. ராமநாதன் செட்டியார் |
| 14. | திருக்கடுவாய்க்கரைப் புத்தூர் | தேவகோட்டை மு. ப. ராம. வெ. குடும்பத்தார் |
| 15. | திருஇரும்பூளை | தேவகோட்டை பெரி. சோம. சோமசுந்தரம் செட்டியார் |
| 16. | திருப்பூவனூர் | காரைக்குடி பனை. மெ. மெ. பழநியப்ப செட்டியார் |
| 17. | திருக்களர் | காரைக்குடி ஆத. மெ. ஆத. லெ. ஆத. |
| 18. | திருக்கொள்ளம்புதூர் | நச்சாந்துபட்டி பெ. ராம. |
| 19. | திருநெல்லிக்கா | கானாடுகாத்தான் கா. அ. மு.கா. |
| 20. | திருக்காறாயில் | தேவகோட்டை தி. சு. பழ. |
| 21. | திருமறைக்காடு | ஒக்கூர் வீர. ராம. நா. ராம |
| 22. | கிள்ளுகுடி | கொத்தமங்கலம் நகரத்தார் காரைக்குடி ராம. ப. பெ. |
| 23. | தில்லைவிளாகம் | தேவகோட்டை ராம. அரு. அரு. |

## பாண்டிய நாடு

| | | |
|---|---|---|
| 1. | திருஆப்பனூர் | பூலாங்குறிச்சி ராம. ப. வ. & தேவகோட்டை ராம. அரு. அரு. |
| 2. | திருப்பரங்குன்றம் | புதுவயல் நாகப்ப செட்டியார் |
| 3. | திருவேடகம் | தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு.மெ.மெய்யப்ப செட்டியார் |
| 4. | திருப்புனவாயில் | தேவகோட்டை அழ. சுப. பழ. |
| 5. | திருவாடானை | கோனாபட்டு பெ. சித. தேவகோட்டை பெரி. எ. |
| 6. | திருக்கானப்பேர் | கொ. அழகாபுரி கா. மெ. & தி. ராம. தி. |

| | | |
|---|---|---|
| 7. | திருப்பூவணம் | வ. ராம. கு. மு. |
| 8. | திருநெல்வேலி | தேவகோட்டை வி. கரு. சித. |
| 9. | பழநி | - |
| 10. | திருச்செந்தூர் | கண்டரமாணிக்கம்<br>மெ. சி. பெரி. சோமசுந்தரம் செட்டியார் |
| 11. | திருப்பெருந்துறை | அரிமளம் அ. அரு. |

## கொங்கு நாட்டுத் தலங்கள்

| | | |
|---|---|---|
| 1. | திருக்கருவூர் | கானாடுகாத்தான் சா. ராம. மு. |
| 2. | திருப்பேரூர் | பெரி. சோ. |
| 3. | திருமுருகன்பூண்டி | திருப்பூர் நகரத்தார்கள் |
| 4. | சிவன்மலை | தேவகோட்டை தெ. வெ. அ. கதி.<br>அண்ணாமலை செட்டியார் |
| 5. | சென்னிமலை | தேவகோட்டை வெ. ஆ. ஆ. |

## நடுநாட்டுத்தலம்

| | | |
|---|---|---|
| 1. | திருப்பாதிரிப்புலியூர் | தீ. நா. முத்தையா செட்டியார் |
| 2. | திருவண்ணாமலை | கோட்டையூர் அ. க. அ. மெ. வகையினர் |

## தொண்டை நாடு

| | | |
|---|---|---|
| 1. | திருக்கழுக்குன்றம் | காரைக்குடி நா. அ. |
| 2. | திருக்கச்சி ஏகம்பம் | கண்டனூர் ராம. வயி. அரு. |
| 3. | திருக்காளத்தி | தேவகோட்டை மெ. அரு. பொது |
| 4. | திருவொற்றியூர் | தேவகோட்டை மு. மா. அழகப்ப செட்டியார் |
| 5. | திருவான்மியூர் | ராம. முரு. இராமன் செட்டியார் |

[இப்பட்டியல் முழுமையானதன்று]

# திருக்கோயில் பசுமடம்

**பேராசிரியர் தெ. சொக்கலிங்கம்**
*இயக்குநர், தெ.பொ.மீ. தமிழாய்வகம், காரைக்குடி*

## ஆவின் சிறப்பு

மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார், மணிமேகலையில் பால்தரும் பசுவின் சிறப்பினை,

"விடுநில மருங்கில் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட்கு எல்லாம்
பிறந்தநாள் தொட்டும் சிறந்ததன் தீம்பால்
அறந்தரு நெஞ்சோடு அருள்சுரந்து ஊட்டும்"

என்று (காதை 13: அடி 51-54) எடுத்துரைக்கின்றார். ஆவின் பெருமையையும் தேவையையும் உணர்ந்த தமிழர் அவற்றை வளர்ப்பதும் கண்ணுங்கருத்துமாய்க் காப்பதும் தம் கடமை எனக் கொண்டிருந்தனர். தமிழிலக்கணங்கள் வெட்சி, கரந்தை என்று பசுக்களை மையப்படுத்திப் போரை விளக்குவதும் அவற்றின் சிறப்பையே காட்டுகின்றது. வேளாளர்கள் போல வைசியர்களும் பசுக்களைப் பேணினர்; அவர்களைக் 'கோவைசியர்கள்' என்று வழங்குவது மரபு. நாட்டுக்கோட்டை நகரத்தார்களும் பசுக்களை வளர்ப்பதில் ஆர்வமுடையவர்களாய் விளங்கினார்கள். இவர்கள் தங்கள் வீடுகளிலேயே பால் மாடுகளைப் பராமரித்துப் பால், தயிர், மோர், நெய் என்று அவற்றின் பயனைத் துய்த்தனர்.

## தெய்வங்களின் திருக்கோயில்

தமிழர்கள் அனைவரும் பசுக்களைத் தெய்வமாகக் கருதிப் போற்றிக் கொண்டாடுகின்றனர். இதற்கு நகரத்தார்களும் விதிவிலக் கல்லர். திருக்கோயில் திருக்குட முழுக்கு விழா, புதுமனை புகுவிழா, அறுபதாண்டு நிறைவுவிழா போன்ற பல்வேறு சிறப்பு நாள்களில் 'கோபூசை' என்னும் சிறப்பு வழிபாடு நடைபெறும். அருளுள்ளம் வாய்ந்த ஆக்கள் கடவுள் வடிவாகக் கொள்ளப்பெறும் தகையன.

சிவபிரானுடைய வாகனமான நந்திதேவருக்குள்ள சிறப்பைப் போலப் பசுக்களுக்கும் முதன்மை உண்டு.

சேக்கிழார் பெருமான், 'மேயவேணித் திருமுடிமேல் விரும்பி ஆடி அருளதற்குத் தூய திருமஞ்சனம் ஐந்தும் அளிக்கும் உரிமைச் சுரப்பிகள் தாம்' (சண்டேசர் புராணம்: 20) என்று ஆனினம் சிவவழிபாட்டிற்குரிய பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்று ஐந்து பொருள்களைத் தருதலைப் பாராட்டிப் பேசுவர். திருநீற்றுக்கு வேண்டிய சாணத்தைத் தருவது பசுவே; ஆதலால் அதனை 'நீறு தரும் மூலம் அவதாரம் செய்யும் மூர்த்தம்' என்று திருத்தொண்டர் புராணம் போற்றுகிறது. அப்புராணம்,

"தங்கும் அகில யோனிகட்கும் மேலாம் பெருமைத் தகையன;
பொங்கு புனித தீர்த்தங்கள் எல்லாம் என்றும் பொருந்துவன;
துங்க அமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத
அங்கம் அனைத்தும் தாம்உடைய அல்லவோ? நல்ஆன் இனங்கள்"
(சண்டேசுவரர்: 19)

என்று பசுவின் தெய்வச் சால்பை எடுத்துரைக்கிறது.

## பசுமடம் நிறுவலும் நிறுவாமையும்

சிவ வழிபாட்டில் பேரீடுபாடுடைய நகரத்தார்கள் ஆனினத்தைப் பேணி வளர்த்துத் திருக்கோயிலுக்குப் பால் வழங்கப் பசுமடங்களைப் பல ஊர்களிலும் கட்டி வைத்திருக்கின்றனர். இவ்வாறு ஏற்படுத்தப் பெற்ற பசுமடங்கள் மிகப்பல. இவை எல்லாம் சிவன் கோயில்களைச் சார்ந்தவை: நகரத்தார்கள் ஐயனார், கறுப்பர் வழிபாட்டில் ஆர்வம் காட்டினாலும் அக்கோயிலுள்ள ஊர்களில் அவர்கள் பசு மடம் ஏற்படுத்தவில்லை. கீரணிப்பட்டி முத்துமாரி அம்மன் கோயிலில் மு. அள; சிவ. கரு; மு. லெ. சி.; மற்றும் பலர் பசுமடம் வைத்திருக் கிறார்கள்.

## பசுமடம் நிறுவும் அடிப்படைகள்

நகரத்தார்கள் சிவன் கோயிலைச் சார்ந்து பசுமடம் ஏற்படுத்திய அடிப்படையை நான்கு வகையாகப் பிரித்துக் காட்டலாம்.

1. பொது நிதியிலிருந்து உண்டாக்கப்பட்டவை.
2. தனிப்பட்ட ஒரே குடும்பத்தார் ஏற்படுத்தியவை- தனிப்பட்டோர் ஏற்படுத்தியவை.
3. நகரப் பொதுவாக ஏற்படுத்தியவை.
   (அ) ஒரே ஊரைச் சேர்ந்தவர்கள்
   (ஆ) வெவ்வேறு ஊரைச் சேர்ந்தவர்கள்

4. ஒன்றுக்கு மேற்பட்ட குடும்பத்தினர் ஏற்படுத்தியவை.

இந்நான்கு வகைப்பகுப்பும் பசுமடத் தருமத்தை ஏற்படுத்திய முறையில் பகுக்கப்பட்டவை. பசுமடங்கள் ஏற்பட்ட ஊர்களின் அடிப்படையில் மூன்று வகையாகப் பகுக்கலாம்.

அவையாவன:

1. நகரத்தார்கள் வாழுகின்ற உள்ளூரில் ஏற்படுத்தியவை.
2. செட்டிநாட்டைஒட்டிய சிறந்த பகுதிகளில் ஏற்படுத்தியவை.
3. பாடல் பெற்ற திருத்தலங்களில் ஏற்படுத்தியவை.

## ஒன்பது கோயில் – பசுமடம்

நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கு மிக அணுக்கமான தொடர்புடையன ஒன்பது நகரக் கோயில்கள். இவற்றில் இளையாத் தக்குடி, சூரைக்குடி, வேலங்குடி, நேமம் ஆகிய நான்கு ஊர்களில் நகரப் பொதுவில் ஏற்படுத்திய பசுமடம் இருந்திருக்கிறது. பிள்ளையார்பட்டிக் கோயிலில் பி. அழகாபுரி ராம. மு. சோம. சோமசுந்தரம் செட்டியார் ஒருவரே ஏற்படுத்திய பசுமடம் இன்று வரை தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இலுப்பைக்குடி, இரணியூர், மாத்தூர், வயிரவன் கோயில் ஆகியவற்றில் 'பசுமடம்' ஒன்று தனியே நிறுவப்படவில்லை. ஆனால் நகர விடுதியில் பால் மாடு வைத்துக் கோயிலுக்குப் பால் வழங்கியுள்ளனர்.

## தனிப்பட்டோர் ஏற்படுத்தியவை

நகரத்தார்கள் வாழுகின்ற ஊர்கள் (பழைய கணக்குப்படி) தொண்ணூற்றாறு: அவற்றில் இருபதைந்து ஊர்களில் மட்டுமே பசுமடம் ஏற்பட்டிருக்கிறது. இவற்றில் தனிப்பட்ட குடும்பத்தினர் ஏற்படுத்தியன:

| | ஊர் | பெயர் |
|---|---|---|
| 1. | அரண்மனை சிறுவயல் | தெ. பெரி. பெரியண்ணன் செட்டியார் |
| 2. | உ.சிறுவயல் | மெ. க. மெ. நாராயணன் |
| 3. | உலகம்பட்டி | பழ. கரு. நா. நாகப்ப செட்டியார் |
| 4. | கண்டவராயன்பட்டி | வடு. பெரி. ந. கரு. நல்லகருப்பன் செட்டியார், |
| 5. | சிறுகூடல் பட்டி | ஆத. கு. பழ. மு. முத்தையா செட்டியார் |
| 6. | சிராவயல் | பெரி. மு. நா. |

| | |
|---|---|
| 7. சோழபுரம் | அலவாக்கோட்டை சி. வெ. முத்துராமன் செட்டியார் |
| 8. பறியாமருதுபட்டி | முரு. பழ. முத்தராமன் செட்டியார் |
| 9. மிதிலைப்பட்டி | க. எ. பழ. |
| 10. கொ. லெட்சுமிபுரம் | மு. சி. வி. ந. சொ. அரு. |
| 11. வலையபட்டி | பு. கு. குமரப்ப செடட்டியார் |
| 12. வேந்தன்பட்டி | ராம. மு. முத்துராமன் ெட்டியார் |

செட்டிநாட்டை ஒட்டிய சிறந்த பகுதிகளில் தனிப்பட்டவர்கள் நிறுவிய பசுமடம் பலவாம். அதன் விவரம்:

| ஊர் | பெயர் |
|---|---|
| 1. கண்டதேவி | பழ. பி. ச. பிச்சப்ப செட்டியார் |
| 2. குன்றக்குடி | கோனாபட்டு சு. மு. சு. |
| 3. கோயிலூர் | காரைக்குடி ராம. மு. மு. |
| 4. திருமெய்யம் | காரைக்குடி வெ. மு. ராமு. |
| 5. நயினார் கோயில் (நயினார்பட்டி) | வீர. ஆ. சொ. |
| 6. இராயவரம் | கானாடுகாத்தான் மலைக்கொழுந்தீசர் சா. அ. நா. சு. கோயில் சுப்பிரமணியன் செட்டியார் |
| 7. மானாமதுரை | ஆ. சுப. சு. சுப்பிரமணியன் செட்டியார் |

மேலே சுட்டிக்காட்டிய பசுமடங்கள் அனைத்தும் தனிப்பட்ட ஒரே குடும்பத்தார் ஏற்படுத்தியன: இவை செட்டி நாட்டுக்குள் அடக்கமான ஊர்களில் உள்ளவை.

## பொதுநிதியில் ஏற்பட்டவை

இவைபோல நகரத்தார் பொது நிதியில் செட்டிநாட்டு வட்டார ஊர்களில் பசுமடங்கள் ஏற்படுத்தப்பட்டன. அவ்வாறு பசுமடம் அமைக்கப் பெற்ற ஊர்கள் ஆவினிப்பட்டி, காரைக்குடி (நாகநாத சுவாமி கோயில்) சொக்கனேந்தல், வேகுப்பட்டி என்பனவாம்.

## பலர் ஏற்படுத்தியவை

நகரத்தார்களில் சிலர் கூடிக் கண்டனூர், கல்லல், கோனாபட்டு சண்முகநாதபுரம், நடராசபுரம் ஆகியவூர்களில் பசுமடம் நிறுவினர். செம்பனூரில் க. சி. ராமு. ம. இராமநாதன் செட்டியாரும் கும. நா.

குடும்பத்தாரும் பசுமடம் அமைத்தனர். பூலாங்குறிச்சியில் ராம. ப. வ. ராம தனதில் மூலதனம் வைத்துக் கான்சாத்துமலை முருகன் கோயிலுக்குப் பால் கொடுத்து வந்தார்கள்.

நகரத்தார்களில் ஆடவர்களைப் போலப் பெண்களும் அறங்களை நிறுவிச் செயற்படுவதில் ஆர்வமிக்கவர்கள். பூங்குடியில் கண்ணம்மை ஆச்சி பெருந்தொகையைச் செலவிட்டுப் பசுமடம் நிறுவியுள்ளார்கள். பாடல் பெற்ற தலங்களிலோ பிறவூர்களிலோ நகரத்தார் குலப் பெண்கள் பசுமடம் நிறுவவில்லை. பசுமடம் நிறுவவும் தொடர்ந்து நடத்தவும் நிறையத் தொகையும் ஆட்களும் தேவை. திருக்கோயில் விளக்கு அமைத்தல், கட்டடம் கட்டல் போன்ற அறங்களில் பங்குபெற்ற ஆச்சிமார்கள் பசுமடம் நிறுவநினைத்திலர். பெண்கள் நிறுவிய பசுமடங்களில் இந்தப் பசு மடம் ஒன்றுதான் தெரிகின்றது.

## பாடல் பெற்ற தலங்கள்

செட்டிநாட்டூர்களிலும் வட்டாரத்திலும் பசுமடம் அமைத்த நகரத்தார்கள், பாடல் பெற்ற திருத்தலங்களிலும் பசுமடம் அமைக்கலா யினர், நகரத்தார்கள், பாடல் பெற்ற திருத்தலங்களில்தான் முதற்கண் பசுமடங்கள் அமைத்திருக்க வேண்டும்; அதுபோலப் பசுமடம் நிறுவிய அறத்தை முதற்கண் தொடங்கிய நகரத்தார் யார்? அவர் எவ்வூரினர்? என்பன போன்ற கருத்துகள் ஆராய்தற்குரியன. கிடைத்து உள்ள தரவுகளுக்கேற்ப முதற்கண் பாடல் பெற்ற தலங்களில் நம் பசுமடம் நிறுவப்பட்டிருக்க வேண்டும் என்றும் இத்தருமத்தைத் தேவகோட்டை நகரத்தார்களே தொடங்கி இருக்க வேண்டும் என்றும் முதன்முதல் தொடங்கியவர் யார் என்பதை ஆராய வேண்டும் என்றும் கருத்து வெளிப்படுகிறது.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், காவிரித் தென்கரைத் தலங்கள் பதினாறில் பசுமடங்கள் நிறுவியுள்ளனர். மிகுதியான எண்ணிக்கை இப் பகுதியில் தான். அடுத்துப் பாண்டிய நாட்டுப் பதிகள் பதினொன்றிலும், தொண்டை நாட்டுத் திருத்தலங்கள் நான்கிலும் நடுநாட்டுத் திருத் தலங்கள் மூன்றிலும் கொங்கு நாட்டுத் திருத்தலங்கள் இரண்டிலும் பசுமடங்கள் நிறுவப்பெற்றன.

### ஆ. கொங்குநாடு

| | | |
|---|---|---|
| 1. | திருக்கருவூர் | கானாடுகாத்தான் சா. ராம. மு. |
| 2. | திருப்பேரூர் | தேவகோட்டை<br>ச. அரு. அரு. சி. கரு. சா.<br>ஆ. நடுநாடு |

| | | |
|---|---|---|
| 3. | திருமுதுகுன்றம் | தேவகோட்டை பழ. சுப. |
| 4. | திருப்பாதிரிப்புலியூர் | கடியாபட்டி தீ. நா. முத்தையா செட்டியார் |
| 5. | திருவண்ணாமலை | 1. சா.நா.அ.நா.<br>2. இராமச்சந்திரபுரம் முரு.மு.அ.முத்தையா செட்டியார் |

## தொண்டை நாடு

| | | |
|---|---|---|
| 6. | திருக்கச்சி ஏகம்பம் (காஞ்சிபுரம்) | கண்டனூர் ராம. வயி. அரு. |
| 7. | குமரகோட்டம் | மேற்படி வயி. ராம. |
| 8. | திருக்கள்ளில் | தேவகோட்டை மெ. அரு. |
| 9. | திருவொற்றியூர் | தேவகோட்டை சு. ராம. சு. லெ. |

## பாண்டிய நாடு

| | | |
|---|---|---|
| 10. | மதுரை | பூங்குடி கூ. க. சித |
| 11. | திருஆப்பனூர் | அரிமளம் பெரி. முரு. ராம. முருகப்ப செட்டியார் |
| 12. | திருப்பரங்குன்றம் | புதுவயல் அ. சு. பழ. |
| 13. | திருஏடகம் | தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு |
| 14. | திருப்புனவாயில் | தேவகோட்டை சேவு. ராமு. அரு |
| 15. | திருவாடானை | கோனாபட்டு பெ. சித. |
| 16. | திருக்கானப்பேர் | தேவகோட்டை சொ. மெ. மெ. பழ & அழ. வீர. சித.& பழ. ப. பழ |
| 17. | திருப்பூவணம் | உ. ராம. உ. மு. |
| 18. | திருநெல்வேலி | தேவகோட்டை வி. கரு. சித. |
| 19. | பழநி | தேவகோட்டை திருமுருகாற்றுப்படை இலக்குமணன் செட்டியார் |
| 20. | திருப்பெருந்துறை | அரிமளம் அ. அரு. |

## காவிரி வடகரைத் தலம்

21. திருநெல்வாயில் (சிவபுரம்) நகரத்தார் பலர்

23. திருநல்லூர்ப் பெருமணம் காரைக்குடி நா. கு.

| | | |
|---|---|---|
| 24. | திருவியலூர் | தேவகோட்டை மைசூர் இராமநாதன் செட்டியார் |
| 25. | புள்ளிருக்கும் வேளூர் | பொதுநிதி |
| 26. | திருவையாறு | தேவகோட்டை வ. அழ. வ. சோலைமலை செட்டியார் |
| 27. | திருவானைக்கா | காரைக்குடி சி. மு. அரு. நாராயணன் செட்டியார் |

## காவிரி தென்கரைத் தலம்

| | | |
|---|---|---|
| 28. | திருப்பராய்த்துறை | ஆத்தங்குடி சு. ராம. சு. |
| 29. | திருத்தென்குடித் திட்டை | பலவான்குடி ராம. கு. ராம. இராமசாமிச் செட்டியார் |
| 30. | திருவிடைமருதூர் | தேவகோட்டை மெ. லெ. மெ. |
| 31. | திருமயிலாடுதுறை | நகரப்பொது |
| 32. | திருக்கடையூர் | கோனாபட்டு சுப. கு. சொ. |
| 33. | திருவேட்டக்குடி | நகரப் பொது |
| 34. | திருஅரிசிற் கரைப்புத்தூர் | நேமத்தான்பட்டி மெ. மு. பழ. |
| 35. | திருக்கலயநல்லூர் | காரைக்குடி முத்த. வெ. வெள்ளையன் செட்டியார் |
| 36. | திருவிற்குடி | பள்ளத்தூர் சொ. மு. அ. மெ. அருணாசலம் செட்டியார் |
| 37. | திருச்சிக்கல் | ஆ.தெக்கூர் ஆறு. நா. ஆறுமுகம் செட்டியாரும் அவர் உடன்பிறந்தோரும் |
| 38. | திருகடுவாய்க் கரைப்புத்தூர் | தேவகோட்டை அ. ராம. அ. லெ. |
| 39. | திருஇரும்பூளை (ஆலங்குடி) | தேவகோட்டை மு. ப. ராம. அ. வெ. |
| 40. | திருப்பூவனூர் | காரைக்குடி பனை. மெ. மெ. பழனியப்ப செட்டியார் |
| 41. | திருக்களர் | காரைக்குடி ஆத. மெ. ஆத. லெ. ஆத. |
| 42. | திருக்கொள்ளம் | நெ.இலக்குமிபுரம் லெ. ஆ. வயி. வயிரவன் செட்டியார் |
| 43. | திருமறைக்காடு | 1. பள்ளத்தூர் அழ. முரு. அழ. & அழ. ராம. சொ. அ. |

| | |
|---|---|
| | 2. காரைக்குடி ந. ப. பாம.்க. இராமசாமி செட்டியார் |
| 44. கிள்ளுக்குடி | கொத்தமங்கலம் நகரத்தார் |
| 45. தில்லைவிளாகம் | காரைக்குடி மு. சிவ. மெ. மெய்யப்ப செட்டியார் & ஷையார் மகன் வினைதீர்த்தான் செட்டியார் & லெட்சுமணன் செட்டியார். |

## பசுமடப்பணி ஆர்வலர்

நகரத்தார்கள் திருவண்ணாமலையிலும் திருமறைக்காட்டிலும் மட்டுமே இரண்டு பசுமடங்களை அமைத்திருக்கின்றனர். திருத்தலத்தின் மீது நகரத்தாருக்கு உள்ள ஈடுபாடும் தொடர்பும்தான் இவ்வாறு இரண்டு பசுமடங்கள் ஏற்படக் காரணமாகும். தேவகோட்டை நகரத்தார் பதினைவரும் காரைக்குடி நகரத்தார் எண்மரும் பள்ளத்தூர் நகரத்தார் மூவரும் கானாடுகாத்தான் நகரத்தார் இருவரும் பசுமடங்கள் நிறுவியிருக்கின்றனர்.

## பசுமடங்கள் தோன்றக் காரணங்கள்

நகரத்தார்கள் தனியாகவும் பொதுவாகவும் திருத்தலங்களில் பசுமடம் அமைத்தற்கு ஏதேனும் காரணம் இருக்க வேண்டும்; சிலர், பால் வழங்குதலின் சிறப்பை உணர்ந்து பசுமடம் அமைத்தனர். திருக்கோயில் சிவபெருமானுக்கு அபிஷேகம் செய்யத் தூய ஆவின்பாலாக இருக்க வேண்டும் என்றும் எருமைப் பாலாக இருக்கக் கூடாது என்றும் தண்ணீர் கலந்து பால் இருத்தலாகாது என்றும் கருதி நகரத்தார்கள் பசுமடம் வைத்தனர். பசுமடம் வைத்தமைக்கு நேர்த்திக் கடனும் ஒரு காரணமாகும். திருத்தலங்களில் பசுமடம் ஏற்பட்ட மையைப் புலப்படுத்தக்கூடிய இரண்டு நிகழ்ச்சிகள் இங்குத் தரப்படுகின்றன.

## நோயும் நோய் நீக்கமும்

நெற்குப்பைக்கு அருகிலுள்ள சதுர்வேதி மங்கலத்தில் (மட்டியூர்; இன்று எஸ்.வி. மங்கலம் என்பர்) உருத்திர கோடீஸ்வரர் கோயில் என்ற பாண்டியர் காலக் கோயிலுள்ளது. இங்குக் கி.பி. 1914இல் நாச்சியாபுரம் நகரத்தார் கண்ணப்ப செட்டிாயர் பசுமடம் நிறுவினார். அவர் ஏன் நிறுவினார் என்பதற்கு ஒரு வரலாறு உண்டு. நாச்சியாபுரம் கண்ணப்ப செட்டியார் தன்னூரிலிருந்து சதுர்வேதிமங்கலம் வழியாகத் தனக்கு

★ பசுமடங்களின்பட்டியல் முழுமையானதன்று. விவரம் அறிந்தவர்கள் நூலாசிரியருக்கு எழுதி உதவ வேண்டுகிறேன்.

நிலபுலமுள்ள இஞ்சிக்குடிக்கு மாட்டு வண்டியில் போயிருக்கிறார். உடல்நலத்துடன் பயணத்தைத் தொடங்கிய செட்டியாருக்குத் திடீரென்று உடல்நலமின்றிக் குளிரும் காய்ச்சலுமாகி விட்டது. செட்டியார் உடல்நிலையைக் கண்ட வண்டிக்காரன் மாடுகளை விரைவாய் ஓட்டிச் சதுர்வேதிமங்கலத்தை அடைந்தான். அங்கு யாராவது உதவக்கூடியவர்கள் உள்ளார்களா என்று வண்டிக்காரன் விசாரிக்கவும், ஊர் மக்கள் அவ்வூரிலுள்ள சைவ வீட்டைக் காண்பித்து அங்குப் போகச் சொன்னார்கள். செட்டியார் அங்கு போய்ச் சேர்ந்தார்.

அந்தச் சைவ வீடு நல்ல பண்பான குடும்பம்; மிதிலைப்பட்டி செவ்வூரில் வாழ்ந்த கவிராயர்களுக்கு உறவான குடும்பம். அந்த வீட்டின் தலைவி- ஆச்சி- செட்டியாரின் நோய் நிலையைக் கண்டு, தங்கள் குடும்பத்திற்கு வைத்திருந்த மருந்துகளை உட்கொள்ளுமாறு கொடுத்தார். தூதுவளை ரசம் வைத்துக் கஞ்சி உணவளித்தார். அந்த நேரத்தில், வெளியே சென்றிருந்த ஆச்சியின் கணவர் வீடு வந்தார். சைவ ஆச்சியும் எல்லாவற்றையும் தன் கணவரிடம் தெரிவித்தார். நேரம் ஓடியது. சைவ வீட்டின் மருந்தும் உணவும் ஓய்வும் செட்டியாருக்கு உடல் நலத்தையும் மன வலிமையையும் ஏற்படுத்தின. அக்குடும்பத்தாரின் கனிந்த அன்பால் நாச்சியாபுரம் செட்டியார் நலம் பெற்றார். ஒருநாள் ஓடிவிட்டது.

செட்டியாருடன் பேசிக் கொண்டிருந்த சைவச் சான்றோர், ‘இங்குப் புராதனமான சிவாலயம் உள்ளது; அதற்குப் பால் அபிஷேகத்துக்குப் பசுமடம் ஒன்று அமைக்க வேண்டும்; இந்த வழியாக வந்து போகும் நகரத்தார் பலரிடமும் என் வேண்டுகோளைச் சொல்லிவிட்டேன்; அதில் நீங்கள் ஆயிரமாவது மனிதர்’ என்றார். செட்டியாரும் ‘நானே இதைச் செய்கிறேன்; மற்றவர்கள் போல் என்னைக் கருத வேண்டாம்’ என்று சொல்லிவிட்டுத் தன்னுடைய நிலபுலன்களைப் பார்க்கப் போய்விட்டார். ஒருவாரத்தில் மீண்டும் சதுர்வேதிமங்கலம் வழியாக நாச்சியாபுரம் வந்து சேர்ந்தார்.

## விரைந்து தருமம் உருவாகுதல்

ஊருக்கு வந்ததும் முதல் வேலையாகச் சுழிசுத்தமான ஓர் இளங்கன்றுள்ள இளம் பசுமாட்டையும் அதை மேற்பார்க்க ஓர் ஆளையும் ஏற்பாடு செய்து மங்கலத்துக்கு அனுப்பி வைத்தார். செட்டியாருக்கு மருத்துவம் செய்து அன்னமிட்ட வீட்டிலேயே, உடனடியாகப் பசுமடம் உருவாகிவிட்டது. பின், செட்டியார் இங்கு வந்து பசுமடத்திற்கு இடம் வாங்கினார். சைவக் குடும்பத்தினரே குறைந்த விலைக்குத் தங்கள் நிலத்தில் ஒரு பகுதியைக் கொடுத்தனர். கி.பி. 1914இல் இப்பசுமடம் கட்டப்பெற்று நன்கு நடைபெற்று வந்தது. (தகவல்:

சைவக் குடும்பத்தைச் சார்ந்த ஆசிரியர் சோமசுந்தரம்பிள்ளை அவர்கள்.)

## பொதுநிதியில் தருமம்

தனிப்பட்ட ஒருவர் பசுமடம் நிறுவிய சூழ்நிலையை நாச்சியாபுரம் கண்ணப்ப செட்டியார் நிகழ்ச்சி காட்டுகின்றது. கீழச்சிவல்பட்டி -பி. அளகாபுரி நகரத்தார்கள் தலைமையில், ஆண்டுதோறும் சித்திரைத் திங்களில் வைத்தீசுவரன் கோயிலுக்குத் தொன்றுதொட்டு வண்டிப் பயணமாகவும் நடைப் பயணமாகவும் மக்கள் செல்லுகின்றனர். இவர்கள் வைத்தீசுவரன் கோயிலுக்குப் போய்த் தாங்கள் கொண்டு செல்லும் காணிக்கைகளை அங்குள்ள நகர மடத்தில் மகமை எழுதுவது வழக்கம். இவ்வாறு வரும் பொன்னும் வெள்ளியும் பணமும் மிகுதி. ஆண்டுதோறும் இந்த வருமானம் நகர விடுதிக்கே போயிற்று. வண்டிப் பயணத்தில் தலைமையும் முதன்மையும் உடையவர்கள், இந்த மகமையைத் தனியே எழுதித் தருமம் நடத்த வேண்டும் என்று கருதினார்கள். க. தெ. கி. தேனப்ப செட்டியார், புதிதாகப் பேரேடு வாங்கி மகமையைத் தனியே எழுதிக் கணக்கைத் தொடங்கினார்கள். அந்த ஆண்டே நிறைய வருமானம் வந்தது.

இந்த வருமானத்தில் பசுமடம் நடத்த வேண்டும் என்பது தேனப்ப செட்டியாரின் திருவுள்ளம்; வேறு சிலர் தேர் செய்ய வேண்டும் என்றனர். பின்னர் நகர மடத்தில் திருவுளச் சீட்டுப் போட்டுப் பார்த்ததில் 'தேர்' என்று முடிவாயிற்று. திருவுளச் சீட்டு எழுதியவர், இரண்டு சீட்டிலும் 'தேர்' என்று எழுதி எல்லாரையும் ஏமாற்றிவிட்டார்; இறைவன் அவரைச் சோதிக்கவே பின் தான் செய்த பிழையைச் சொல்லித் திருநீறு பெற்றார். இறுதியில் பசுமடம் நிறுவப் பெற்றது. வைத்தீசுவரன் கோயிலில் பசுமடம் ஏற்பட்ட வரலாறு இதுவாகும். (தையல்நாயகி மாலை 1996, பார்க்க.)

## ஒன்றே ஒன்று

பசுமடம் உருவாவதற்கு மேலே இரண்டு வரலாற்று நிகழ்ச்சிகள் சுட்டிக் காட்டப்பட்டன. இவைபோல இன்னும் பல இருக்கலாம். பசுமடங்களை அமைப்பதற்கு வேறு சில அடிப்படைகளும் உண்டு. தனிப்பட்டவர்கள் தாங்கள் தொழில் செய்த ஊர்கள் பாடல் பெற்ற தலங்களாக இருந்தாலும் அங்கே பசுமடம் நிறுவினார்கள். வரதையான தெய்வங்களின் திருவருளைப் பெறுதற்குப் பலர் திருத்தலங்களில் பசுமடம் அமைத்ததும் உண்டு. ஒரு தலத்தில் யாராவது நகரத்தார் பசுமடம் நிறுவியிருந்தால், அடுத்தவர் அந்த ஊரில் பசுமடம் தொடங்கச் சென்றால், முன்னர் இருப்பதால் இன்னொரு மடத்தை அங்குத்

தொடங்குவது இல்லை. திருவண்ணாமலையிலும் திருமறைக்காட்டிலும் மட்டுமே நகரத்தார்கள் இரண்டு பசுமடங்களை அமைத்திருக்கின்றனர்.

## நகரவிடுதியைச் சார்ந்தமை

நகரத்தார்கள், இமயம் முதல் குமரி வரை நகரவிடுதி அமைத்து இறையுணர்வு மிக்கவர்களாய் வாழ்ந்தனர். அவர்கள் தனியாகத் தங்கித் தெய்வ தரிசனம் செய்து நற்கதி அடையப் பெரிதும் விரும்பினர். நகர விடுதியில், வழிபாட்டுக்குரிய கடவுளர்களாக விநாயகர், தண்டாயுத பாணி, வேல், சிவகாமி உடனாய நடராசர் ஆகியோரை அமைத்தனர். இவர்களை நித்திய வழிபாடு செய்யவும் ஏற்பாடு செய்தனர். விடுதிகளில் நகரத்தார்கள் தங்கிச் சிவதெரிசனம் செய்தபோது அபிஷேக ஆராதனைக்குப் பாலின் தேவையையும் அதன் இன்றியமை யாமையையும் உணர்ந்தனர். அபிஷேகப் பாலை வெளியிடங்களில் வாங்கியபோது, பால் தூய்மையற்றதாயும் எருமைப் பால் கலந்ததாயும் நீர்த்தன்மை மிக்கதாயும் இருந்ததைக் கண்டு வருந்தினர். எனவே பால் மாடுகள் வாங்கிப் பராமரித்துத் தூய பாலைச் சிவபிரானுக்குத் திருமஞ்சனம் செய்ய வேண்டும் என்று எண்ணினர். இதனால் நகர விடுதியுடன் ஒன்று அல்லது இரண்டு பால் மாடுகளை வைத்துப் பால் கொடுத்தனர். நகர விடுதியின் அங்கமாகப் பசுமடம் தோன்றிற்று.

## நந்தவனச் சார்பு

நகர விடுதியை ஒட்டிப் பால் மாடுகள் வளர்க்கப் பெற்றது போல நந்தவனத்தை ஒட்டியும் பசுமடம் அமைக்கப் பெற்றது. நந்தவனத்தின் ஒரு பகுதியில் பசுத் தொழுகட்டப்பட்டது. பசுமாடுகளின் கழிவு, நந்தவனத்துக்கு உரமாயிற்று; நீர்ப்பாய்ச்சும் கிணறு மாடுகளும், காளைகளும் குளிப்பாட்டவும் குடிக்கவும் நீர் தரும் மையமாயிற்று. இவ்வாறு நந்தவனத்தைச் சார்ந்து பசு மடமும் தோன்றிற்று. பி. அளகாபுரியில் க. தெ. நா. அங்கப்ப செட்டியார் நந்தவனத்தையும் பசுமடத்தையும் ஒன்றாக அமைத்துத் தெய்வத் திருப்பணி செய்தமை குறிக்கத்தக்கது. காசியில் நகர விடுதி, நந்தவனம், பசுமடம் ஆகிய மூன்றும் ஒன்றாக இணைந்து ஒரே நிறுவனமாகக் கடவுட் பணி செய்து வரும் பாங்கு, நகரத்தார்களுக்குக் கோடிக் கோடிப் புண்ணியத்தைக் கொட்டிக் கொடுத்து வருகிறது.

## தனியே வளருதல்

பசுமடம், ஒரு சார்பு நிறுவனமாக இருந்தபோது, நிறையப் பால் மாடுகளை வைத்துத் தொடர்ந்து திருக்கோயிலுக்கு நிறையப் பால் கொடுக்க முடியவில்லை; மாடுகள் பால் வற்றுவதும் பயிராவதுமாக (கரு உண்டாதல்) இருக்கவே, திருமஞ்சனத்துக்குப் பால் வழங்க முடியாமல்

முட்டுப்பாடு ஏற்பட்டது. இக்குறைகளைக் களைந்து நிறைவாகப் பால் வழங்கும் தெய்வப் பணியைத் தொடர்ந்து நடத்த நகரத்தார்கள் தனியே 'பசுமடம்' என்ற அமைப்பைக் கண்டு நிறுவினர். இதுவே 'கோசாலை' என்று போற்றப் பெற்றது. இந்த அமைப்பை முதற்கண் நிறுவிய நகரத்தார் யார் என்று தெரியவில்லை.

## பசுமடம் அமைப்பும் கட்டடமும்

நகரத்தார்கள் பசுக்கள், அவற்றை மேற்பார்க்கும் கோனார், அதை நிருவகிக்கும் கணக்குப்பிள்ளை ஆகியவர்கள் வாழ்ந்திடத் தக்கக் கட்டடங்கள் கட்டினர்; இக்கட்டடங்கள் நகர விடுதியை ஒட்டியோ தேரோடும் வீதியிலோ கோயிலுக்கு அருகில் அமையுமாறு கட்டப் பட்டன. பசுமடக் கட்டடங்கள் அனைத்தும் கற்கட்டடங்கள்; நூறாண்டு களுக்குக் குறையாமல் செம்மையாக இருக்குமாறு கட்டப்பட்டன. இவை செட்டிநாட்டுக் கட்டடப் பாணியில் அமைந்தவை. சில இடங்களில் பழைய கட்டடத்தை வாங்கிப் புதிதாகக் கட்டியுமுள்ளனர்.

பசுமடத்தில் பால் மாடுகள், கன்றுகள், காளை ஆகியவற்றைக் கட்டி வைக்கக் காற்றோட்டமான தாழ்வாரம் அமைக்கப்பட்டது; அத்தொழுவத்தின் அடித்தளத்தில் கற்கள் பரப்பப்பட்டன. மாடு தின்ன வைக்கோலைப் போட்டு வைக்கக் கல்லால் தடுப்பும் மாடு கட்ட இரும்பு வளையமும் அமைக்கப்பட்டன. பகல் நேரத்தில் மாடுகளைக் கட்ட வெட்டவெளி, பசுமடத்தின் பின்புறம் விடப்பட்டது. மாடுகள் தண்ணீர் குடிக்கத் தொட்டிகளும், தவிடு புண்ணாக்குகளை இருப்பு வைத்துக் கொள்ள அறைகளும் இருந்தன. பால் கறக்கப் பல சட்டிகளும் அவற்றைக் கோயிலுக்குக் கொண்டுபோக மூடியுடன் கூடிய குடங்களும் மருந்து ஊற்ற மூங்கில் கொட்டங்களும் பசுமடங்களில் இருந்தன. மாடுகளுக்குப் புடலை மணி, வெங்கல மணி, சங்கு ஆகியன கம்பளிக் கயிற்றுடன் கட்டப்பட்டன.

## பணியாளர்

மாடுகளைப் பார்க்கத் தனியே ஆள்களும் பால் கறக்கக் கோனார்களும் இருந்தனர். மாடுகளின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு மெய்க்காட்டாள்கள் நியமிக்கப்பட்டனர். இவற்றைக் கண்காணிக்கவும், வரவு செலவைக் குறிக்கவும் கணக்கப்பிள்ளை நியமிக்கப்பட்டார். மாடுகள் ஈத்துக்கூடக் கூட வயது முதிர்தலைக் கருதிப் பழையனவற்றைக் கழித்துவிட்டுப் புதிய பால் மாடுகள் வாங்கப்பெறும். காளைக் கன்றுகளும் விற்கப்பட்டன; கிடாரிக் கன்றுகள் மாட்டொடு வைத்து வளர்க்கப்பெற்றன.

## காளையும் காராம் பசுவும்

ஒவ்வொரு ஆண்டுக்கும் தேவையான வைக்கோலைப் பசுமடத்தில் வாங்கிப் போர் போட்டு வைத்திருப்பர்; இதற்கென்று தனியிடம் ஒதுக்கப்பட்டிருந்தது. இவற்றுக்கெல்லாம் மேலாக, பசுமடத்திலுள்ள பசுமாடுகள் பயிராவதற்கு என்று தனியே ஒரு வளமான காளை மாடும் வைத்திருந்தனர். பசுமாடு, பால் வற்றியதும் உடனடியாகக் கருவுறுதற்கு என்று இந்த ஏற்பாடு செய்யப்பெற்றது. இதனால் புதிய புதிய மாடுகள் அடிக்கடி வாங்காமல், தொடர்ந்து பசுமடத்து மாடுகள் கன்று போடுதலும் பால் கொடுத்தலுமாக இருந்தன.

சில பசுமடங்களில் 'காராம் பசு' என்னும் பசுவைத் தேடிப் பிடித்து வாங்கி வந்தனர்; இப்பசுவின் நாக்கும் மடியும் கறுப்பாக இருக்கும். காராம் பசுவின் பால், சிவபெருமானுக்கு மிக உகந்தது. இத்தகைய பசுக்கள் கிடைப்பது அரிது.

பசுமடம் என்பது திருக்கோயிலுக்கு மடைப்பள்ளி போல மிகமிக இன்றியமையாத நிறுவனமாகும். திருக்கோயிலில் விடிகாலை நிகழும் விசுவரூப தரிசனத்தில் பசு இடம்பெறுகின்றது. ஆனைந்து (பஞ்சகவ்வியம்) ஆகிய அபிஷேகத்திற்குரிய பொருள்கள் பசுமடத்தி லிருந்தே பெறப்படுகின்றன. திருக்கோயில் கிரியையில் கோமயமும் கோசலமும் திருக்கோயிலை அலகிடுவதற்கும் கிரியைகளுக்கும் தேவை. திருநீறு தயாரிக்கச் சாணமும் திருநீறு தயாரிக்கும் பணியையும் பசுமடமே செய்து வந்தது. இதனை அறிந்த சேக்கிழார்,

> "மேய வேணித் திருமுடிமேல் விரும்பி ஆடி அருளதற்குத்
> தூய திருமஞ்சனம் ஐந்தும் அளிக்கும் உரிமைச் சுரபிகள்தாம்"
> (1230)

என்று போற்றிப் புகழுகின்றார்.

## தருமத்தின் நோக்கம்

சிவபிரானை வழிபடும் மக்கள் தங்கள் கருத்திற்கு ஏற்ப அபிஷேகப் பொருள்களைத் திருக்கோயிலுக்கு வழங்குவர். தானும் தன் மரபினரும் இசைவன்மை அடைய இறைவனுக்குத் தேனால் அபிஷேகம் செய்ய வேண்டும். அதுபோல் உடல்நலமும் ஆயுள் வளர்ச்சியும் வேண்டுகின்ற வர்கள் சிவபெருமானுக்குப் பால் அபிஷேகம் செய்ய வேண்டும். தங்களுக்கு ஆண் மகன் பெற விரும்புவோர் தயிர் அபிஷேகமும் மோட்சத்தை நாடுவோர் நெய் அபிஷேகமும் செய்தல் வேண்டும். திருக்குற்றாலத் தலபுராணம் 'பயமது சத்துரு நாசம் ததிக்கு மகப் பெருகும்' (சிவபூசை விதித்த சருக்கம்: 44) என்று கூறுகிறது.

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் உடல் நலத்தையும் ஆயுள் வளர்ச்சியையும் கருத்தில் கொண்டே பசுமடங்களை நிறுவிப் பால் கொடுத்தனர். பசுமடங்களில் பாலன்றித் தயிரோ நெய்யோ கோயிலுக்குக் கொடுக்கப்படவில்லை.

## பாலின் தூய்மை

பால் அபிஷேகத்துக்கு மட்டுமின்றித் திருவனந்தலுக்கும் அருத்தசாமப் பூசையில் பள்ளியறை நைவேத்தியத்துக்கும் தனியே கொடுக்கப்பட்டன. பசுமடத்தில் பால், அபிஷேக நேரத்தை ஒட்டிக் கறந்து கொண்டு போய்க் கொடுக்கப் பெற்றது. எருமைப் பாலோ தண்ணீரோ கலக்கப்படவில்லை. பாலைக் கொண்டு செல்லுபவர் நீராடி நீறு பூசித் தூயராய் மூடியிட்ட குடத்தில் பாலைக் கொண்டு சென்றார்.

## காலமும் நிருவாகமும்

உள்ளூரில் பசுமடம் வைத்தவர்களுக்குப் 'பசுமடத்தார் வீடு' என்றே பட்டப் பெயரும் வழங்கியது. பசுமடம் நடைபெறத் தனியே மூலதனம் வைக்கப்பெற்றது; சிலர் நன்செய் நிலங்களை வாங்கி மூலதனமாக வைத்தனர். பெரும்பாலான பசுமடங்கள் கி.பி. 1860க்குப் பின்னரும் கி.பி. 1920க்கு முன்னரும் தாம் ஏற்படுத்தப்பட்டன. பர்மா, செய்கோன் ஆகிய ஊர் வணிகம் மேலோங்கியிருந்த போது, நகரத்தார் களின் திருக்கோயில் தருமங்கள் தலைசிறந்து நின்றன. தனிப்பட்ட குடும்பங்களின் பொருளாதாரத் தாழ்வு, பொதுக் குடும்பங்களிடையே எழுந்த பிணக்குகள், போன்றவை இன்றைக்குப் பசுமடத்தை நடத்துவதில் தடையை ஏற்படுத்திவிட்டன. பசுமடம் என்பது ஒரு பால் பண்ணையை நிருவகிப்பது போன்றது. பொருள் மிக்கவர்கள் கூடப் பசுமடத்தை வைத்து நிருவகிக்க முடியாமல், பாலை விலைக்கு வாங்கிக் கோயிலுக்குக் கொடுக்கின்றனர்.

பொது நிதிகளால் அமைந்த பசுமடங்கள் கூட இன்று நடைபெற வில்லை. நகரத்தார்களில் பொதுப் பணங்களை வைத்திருப்போர், அந்தத் தருமங்களை நடத்தாமல், பொருளைச் சுய வளர்ச்சிக்குப் பயன்படுத்துகின்றனர். அற உள்ளங் கொண்ட நகரத்தார்கள் நிறுவிய தருமங்கள், என்றும் குன்றாமல் நடைபெறப் பார்வதி உடனாய பரமசிவனே அருள்புரிய வேண்டும்.

# திருக்கோயிலும் மருத்துவமும்

**பாலாம்பிகைதாசன்**

மக்கள் வாழ்வில் மாறி மாறி மயங்கி வருவது நோய்; நோயை அழித்து வெல்ல மனிதன் மருந்தை நாடியது போலக் கடவுளையும் நாடினான். மருந்து உண்டாலும் கடவுள் அருள் இருந்தால் தான் நோய் ஒழியும் என்று மக்கள் நம்பினர்; சமயங்களும் இதனையே வலியுறுத்தின. சமயங்களைப் பரப்ப வந்த குருமார்களும், நோய்க்கு மருந்து கொடுத்தலோடு தங்களின் சமயக்கோட்பாட்டையும் வழிபாட்டையும் இணைத்தே கொடுத்தனர். தொன்றுதொட்டுத் தமிழ் மக்களிடையே நோய் நீக்குவதில் திருக்கோயில்கள் தனியிடம் பெற்றுள்ளன. மக்கள் பலரும் ஒருங்கு கூடுகின்ற திருக்கோயில்கள், மருத்துவ மன்றங்களாகத் திகழ்வதை இன்றும் காணமுடிகிறது.

## கோயிலில் – முதல் மருத்துவம்

இறைவனைப் பல்வேறு பெயர்களாலும் அடைமொழிகளாலும் மக்கள் வேண்டி மன அமைதியையும் செல்வத்தையும் அடைகின்றனர். திருக்கோயில்கள் செவ்வனம் உருவான போது கோயில்கள் சமுதாயக் கூட்டங்களாக விளங்கின. பல்லவர் காலத்தில் திருக்கோயிலைச் சார்ந்து மருந்தகங்களோ மருத்துவச் சாலைகளோ இருந்தமைக்குச் சான்றுகள் கிடைத்தில. மகேந்திரப் பல்லவன் காலத்தவர் என்று வரலாற்றாசிரியர்கள் தெளிவாகக் கூறிய திருநாவுக்கரசர்தான், தனக்கு உண்டாகிய சூலை நோயைச் சிவபெருமானை வேண்டி நீக்கியருளுமாறு பாடுகின்றார். திருவதிகை வீரட்டானத் திறைவனைப் பாடுகின்ற திருநாவுக்கரசர் தனக்கு வந்த நோயினைக் 'கூற்றாயினவாறு' என்று இயம்புகிறார். இப்பதிகத்திலுள்ள பாடல்கள் ஒவ்வொன்றிலும் நோயின் நிலை புலப்படுமாறு தொடர்களை அமைத்துத் திருநாவுக்கரசர் பாடுகின்றார். இன்னொரு பாட்டில்

'சுடுகின்றது சூலை தவிர்த்தருளீர்; தன்னை அடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங்கடன் ஆவதுதான்' என்று தெரிவிக்கின்றார்.

சுலவி வயிற்றகங்கனலும் சூலையுடன் திருநாவுக்கரசர், வந்தணைந்து திலகவதியார் அடிமேலுற வணங்கினார். திலகவதியார் திருவீரட்டம் புகுவதற்குத் திருக்கையிலைக் குன்றுடையார் திருநீற்றை அஞ்செழுத்தோதிக் கொடுத்தார். திலகவதியார் வழிகாட்ட திருவதிகை வீரட்டானச் சிவபெருமானைத் திருநாவுக்கரசர் 'மருதம் பிணிமாயை அறுத்திடுவான்' பாடினார். மன்னும் பதிகம் பாடியபின் 'வயிற்றடு சூலை மறப்பிணிதான், அந்நின்ற நிலைக்கண்' அகன்றது. இதனைத் திருநாவுக்கரசர் தேவாரமும் திருத்தொண்டர் புராணமும் நன்குணர்த்து கின்றன. சிவபெருமானைப்பாடி நோய் நீக்கம் பெற்ற முதல் நிகழ்ச்சி இஃதேயாகும். நாயன்மார்களிலும் ஆழ்வார்களிலும் திருநாவுக்கர சராகிய அப்பர் பெருமானே முதற்கண் தன்நோய் நீக்கத்துக்காகக் கடவுளை நாடியவர். மருந்துகளாலும் மந்திரங்களாலும் நோய் தீராமையாலேதான் அவர் இறையருளை நாடிப் போந்தார். இறைவன் மணி மந்திர ஔடதங்களால் தீராத நோயையும் தீர்ப்பவன் என்பது இதனால் புலனாகும்.

## திருக்குறள் மருத்துவம்

திருவள்ளுவர், மருந்து எனும் அதிகாரத்தை அமைத்திருப்பது நோயின் பழமையைக் காட்டுகிறது. இந்த அதிகாரத்தில் நோய்களின் வகைகளை ஆசிரியர் எடுத்துரைக்கவில்லை. அவர் மருந்து பற்றியும் உணவுபற்றியும் பேசினாரே அன்றிக் கடவுளைக் கொண்டு வந்து பேசிலர். சமண சமயத்திலிருந்து சைவத்துக்கு மாறிய திருநாவுக்கரசரே, முதற்கண் நோய் போக்கக் கடவுளை வேண்டிப்பாடுகின்றார்; ஆழ்வார்கள் எவரும் நோய் நீக்குமாறு திருமாலைப் பாடவில்லை.

## திருக்கோயில் மருத்துவக்களம்

திருநாவுக்கரசர் சிவபெருமானைப் பாடி நோய் நீக்கம் பெற்றமையால், புள்ளிருக்கும் வேளூர்த் தேவாரத்தில்,

'வாராத செல்வம் வருவிப் பானை
மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித்
தீராதநோய் தீர்த்தருள வல்லான்...'

-என்று சுட்டிப் போற்றுகின்றார். இவருடைய வாழ்க்கை அனுபவம் சிவபெருமானை மருந்தாகக் கண்டு வணங்க இவரைத் தூண்டியிருக்கிறது. தன்னோய் நீக்குவதற்கு மருந்தாகத் திருவதிகை வீரட்டானத் திறைவனைத் திருநாவுக்கரசர் கொண்டதனால், திருக்கோயில் மருத்துவக்களமாகத் தமிழகத்தில் மலர்ச்சி பெற்றது.

## சம்பந்தர் மருத்துவம்

திருஞானசம்பந்தர் வாழ்வில், திருக்கோயில் மருத்துவ மன்றமாகத் திகழ்ந்தமைக்குப் பல சான்றுகள் உள்ளன. மழ நாட்டில் திருப்பாச்சிலாச்சிரமம் என்ற ஊரில் கொல்லி மழவன் மக்களுக்கு ஏற்பட்ட முயலகன் என்ற நோயைத் திருஞான சம்பந்தர் இறைவன் திருமுன்னரே போக்கினார். சம்பந்தர் திருப்பாச்சிலாச்சிரமப்பரமனை வணங்கி,

**துணிவளர் திங்கள் துளங்கி விளங்கச்**
**சுடர்ச்சுடை சுற்றி முடித்துப்**
**பணிவளர் கொள்கையர் பாரிடஞ் சூழ**
**ஆரிட மும்பலி தேவர்**
**அணிவளர் கோலமெல் லாஞ்செய்து பாச்சில்**
**ஆச்சிராமத் துறை கின்ற**
**மணிவளர் கண்டரோ மங்கையை வாட**
**மயல்செய்வதோ இவர் மாண்பே.**

-என்று தணிவில் பிணி தவிர்க்கும் பதிகத்தண்டமிழ் பாடினார். சம்பந்தப் பெருமான் போற்றி நிற்க, மழவன் பயந்த மழலை மென்சொல் கன்னி, உறுபிணிவிட்டு நீங்கிக் கதுமெனநின்றெழுந்தாள். சிவபெருமானைப் போற்றிப் பணிந்து சம்பந்தப்பெருமான் நோய் போக்கினார்.

அடுத்துத் திருஞான சம்பந்தர், கொடி மாடச் செங்குன்றூரைச் சென்று சேர்ந்தார். அக்காலத்தில் அவர் உடன் வந்த அடியார்களுக்குப் பனி என்னும் சுரநோய் வந்து வாட்டியது. 'எவ்விடத்தும் அடியார்களைப் பற்றிய இடர்களைப் போக்குவது திருநீலகண்டம்' என்று ஆணையிட்டுச் சம்பந்தர் பாடினார். அதனால் அந்நோய் கொங்குநாட்டைவிட்டே ஒழிந்தது. இவ்வருஞ்செயலைக் 'கொங்கிற் பனி நோய் பரிசனத்தைத் தீர்ப்பித்தும்' என்று நம்பியாண்டார் நம்பி நவில்வர்.

ஒரு வணிகன் மகள் தன் முறை மாப்பிள்ளையுடன் உடன் போக்காகத் திருமருகலுக்கு வருகின்றாள். அங்கு வந்து தங்கும் போது அவள் காதலனாய கணவனை அரவம் தீண்ட அவன் மாண்டு போகின்றான்; காதலன் மாண்டமை கண்ட காரிகை இடைவிடாது புலம்பிக் கதறுகின்றாள். செய்தியறிந்த திருஞானசம்பந்தர், திருமருகலிறைவனைப் பணிந்து 'உடையானே தகுமோ இந்த ஒள்ளிழையாள் உள் மொழி' என்றெடுத்துப் பாடினார். அரவ நஞ்சால் மாண்டவன், பொங்குவிடந் தீர்ந்தெழுந்து நின்றான். இதற்கு ஞான சம்பந்தர் பாடிய பதிகம் செவிலியிரங்குதல் என்னும் அகப்பொருளாய் அமைந்திருக்கிறது.

திருமயிலையில் என்பையும் சாம்பலையும் திருஞானசம்பந்தர் பெண்ணாக எழுப்பினார். இது விரிவான வரலாறு; முன்னர் விளக்கியன நோய் நீக்கியன. இந்நிகழ்ச்சி தனி அற்புதமாக அமைகிறது. சாம்பலாகிப் போன பெண்ணை இங்கு மீட்ட வரலாறு வியப்பைத் தருகிறது. திருஞானசம்பந்தரின் வாழ்க்கை நிகழ்ச்சிகள் எல்லாம் நோயுற்றவரோ மாண்டவரோ தெய்வநலத்தால் காப்பாற்றப் பெற்றிருக்கின்றனர். இவை மந்திரத்தாலோ மனித தந்திரத்தாலோ நிகழ்ந்தன என்று சம்பந்தரோ நம்பியாண்டார் நம்பியோ பிறரோ பேசவில்லை.

திருஞானசம்பந்தர் பாண்டியனுக்கு ஏற்பட்ட நோயை நீக்கும்போது, 'திருவாலவாய் அண்ணல் நீறே மன்னுமந்திரமுமாகி மருந்துமாய் எல்லாப் பிணிகளையும் போக்கவல்லது' என்ற உண்மையை நிலை நாட்டினார். திருநீற்றுப்பதிகம் இன்றும் பலருக்கு நோய் நீக்கும் மருந்தாக அமைகிறது.

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப் படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தி லுள்ளது நீறு
செந்துவர் வாயுமை பங்கன் திருவால வாயான் திருநீறே."

என்பது திருஞானசம்பந்தர் திருமொழி.

திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர் ஆகியோர் சிவபெருமானைப் பாடி நோய் நீக்கம் பெற்றது போலச் சுந்தரரும் சிவபெருமானைப் பாடி நோய் நீங்கப்பெற்றார். இவ்வண்ணம் திருநாவுக்கரசர் வாழ்க்கையில் தொடங்கிய திருக்கோயில் மருத்துவம் திருஞானசம்பந்தராலும்

பின்பற்றப்பட்டது. இருவர் வழியும் தன் வழியே என்று சுந்தரரும் பின்பற்றினார். சைவ சமய குரவர் நால்வரில் மாணிக்க வாசகரல்லாத மூவரும் திருக்கோயிலை மருத்துவ மன்றமாக்கி மக்களைக் கவர்ந்தனர். திருக்கோயிலை மக்கள் வாழ்க்கையில் ஒரு முதன்மையான அங்கமாக்க இத்தகைய முயற்சிகள் இன்றியமையாதனவாயின.

## மன்னர் உருவாக்கிய மருந்தகம்

பிற்காலச் சோழராட்சியில், திருமுறைகள் தொகுக்கப்பட்ட போது, திருக்கோயில்களின் பெருமை உணரப்பட்டது; கோயிலைச் சார்ந்து மருத்துவச்சாலைகள் விளங்கின. தஞ்சாவூரில் கி. பி. 1015இல் 'சுந்தர சோழ விண்ணகர ஆதுர சாலை' என்று மருத்துவமனை இருந்தது. இதனைக் குந்தவை தேவி ஏற்படுத்தியிருந்தாள் (248 Of 1923). திருமுக்கூடலிலுள்ள வீரராஜேந்திரன் கல்வெட்டு (335 Of 1917) மகா விஷ்ணு கோயிலில் பதினைந்து படுக்கைகள் இருந்தன என்றும் இது 'வீர சோழன்' என்று பெயருடையதென்றும் தெரிவிக்கின்றது. இதே கல்வெட்டில் இம் மருத்துவமனையில் வைக்கப்பட்டிருந்த மருந்துகளின் பட்டியலும் தரப்பட்டிருக்கிறது. பிற்காலச் சோழராட்சியில், திருக்கோயிலைச் சார்ந்து மருத்துவ நிலையங்கள் தோன்றின. அப்பர், சுந்தரர் ஆகிய இருவரும் நோய்க்கு ஆளாகியமையும் இவர்களைத் திருக்கோயிலில் பலரும் கண்டு நோய் நீக்க வேண்டியமையும் கோயிலைத் தழுவி மருத்துவ சாலைகள் அமைந்திடக் காரணமாயின.

## மரமும் மருந்தும்

திருக்கோயில் சிவபெருமான், நோயைத் தீர்க்கும் மருந்துவன் என்று கொள்ளப்பட்டபோது கோயிலுக்குரிய தலமரம் மருத்துவ குணமுடையதாயிற்று. இதனால் தலமரங்களுக்கு மக்களிடையே தனி மதிப்பு ஏற்பட்டது. திருக்கோயில் மருத்துவ நிலையமானமையால், கடவுளே மருத்துவனாக வந்தான் என்றும் கண்ணொளி தந்தான் என்றும் வரலாறுகள் தோன்றின. திருச்சிராப்பள்ளி இறைவன் தாயுமானசுவாமி தாயாகி மகளொருத்திக்குப் பிள்ளைப் பேறு பார்த்தாள்; சம்பந்தரின் 'நன்றுடையானை' என்ற பதிகம் இனிய பிள்ளைப்பேற்றைத் (சுகப்பிரசவம்) தருவதாகும். இந்த நிகழ்ச்சி திருக்கோயில், மக்களின் நோயைத் தீர்ப்பதில் பெற்றிருந்த பங்கை வெளிப்படுத்துவதாகும். இறைவன், மருத்துவன் ஆனது போலக் கோயில் பொருட்களும் மருந்துகளாயின.

## தண்ணீர் மருந்து

திருக்கோயிலின் திருக்குளமும் தீர்த்தச் சிறப்புடையது; இது மக்கள் நோய் நீக்குவதில் தலையாயது. திருக்கோயில் திருக்குளத்தில் நீராடினால் பல நோய்கள் பறந்துவிடும். புள்ளிருக்கும் வேளூர் என்னும் வைத்தீசுவரன் கோயிலிலுள்ள சித்தாமிர்தத் தீர்த்தம் மிக அற்புதமானது. இக்குளத்தில் ஒரு மண்டலம் நீராடினால், காய்ச்சல், தோல் நோய்கள், வயிற்று வலி முதலிய நோய்கள் நீங்கிவிடும். இக்குளத்துத் தண்ணீருக்குத் தனி மருத்துவ குணமுள்ளது. இக்குளத்தினுள் தன்வந்திரி என்னும் சித்த மருத்துவரால் உருவாக்கப்பெற்ற நவபாஷாணக்கற்கள் கிடக்கின்றன. அந்த பாஷாணங்களின் தன்மை தண்ணீரில் கலந்து அந்த நீர், நோயை அழிக்கிறது. இதனால் இக்குளத்தில் எக்காலத்திலும் தவளைகள் இருப்பதில்லை; புதிதாகத் தவளையைக் கொண்டு வந்து இக்குளத்தில் விட்டால் உடனே இறந்துவிடும். சிவகங்கை மாவட்டம் பாகம் பிரியாள் கோயில் தீர்த்தத்திற்கும் இந்த மருத்துவ குணம் உண்டு. திருக்கோயில் தீர்த்தங்களுக்கு என்று தனியான மருத்துவ குணங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இயற்கையில் இயைந்த இவை இறையருள் என்று மக்களால் போற்றப்படுகிறது. ஆகவேதான் மூர்த்தி, தலம், தீர்த்தம் என்று மூன்றும் சிறப்பிக்கப்படுகின்றன.

## மண் மருந்து

திருக்கோயிலைச் சார்ந்த மண்ணும் மருத்துவ குணமுடைய தாகும். களிமண், செம்மண் ஆகியன இயல்பிலேயே மருத்துவகுண முடையன. நீர் கொண்டாலும் கட்டிகள் புறப்பட்டாலும் கால் கை வலித்தாலும் தலைபாரமாக இருந்தாலும் மண்ணைப் பூசுவது நாட்டுப்புற மக்கள் வழக்கம். காந்தியடிகள் கால் வலிக்குக் கண்ட மருந்து மண் அன்றோ? சங்கரன் கோயிலில் கோமதியம்மை திருமுன்னர் வழங்கப்பெறும் புற்றுமண் பல நோய்களுக்குத் தக்க மருந்தாகும். இதனை உட்கொள்வதில்லை; வெளிப்பூச்சுக்கு மட்டுமே பயன்படுத்துவர்.

புள்ளிருக்கும் வேளூரில் வழங்கும் திருச்சாந்துருண்டையும் திருக்குளத்தில் எடுக்கப்பெறும் மண்; இந்த உருண்டையை மாத்திரை என்பர். இதனை நாள் தோறும் உண்டு நோய் நீங்கியவர்களும்- நோயின்றி வாழும் அடியார்களும் பலர் உள்ளனர். காளமேகப் புலவர் 'மண்ணையே மருந்தாக உண்டார்' என்று பாடுவதும் நோக்கத்தக்கது.

திருக்கோயில்களில் திருமஞ்சனம் செய்யும் எண்ணெயும் கால் கை உடல்வலி போக்கும் மருந்தாகிறது. பரமக்குடிப் பக்கம் குருசாமி கோயில் எண்ணெய் புகழ் பெற்றது. அதுபோலக் குருவாயூர் எண்ணெயும் மருந்தாக மக்களிடையே போற்றப்படுகிறது.

## நோய் போக்கும் திசை

திருக்கோயிலில் தொடர்புடைய பலபொருள்களும் மருந்தாகி நோய் நீக்குவது போல மேற்குநோக்கி வீற்றிருக்கும் கடவுளரனைவரும் நோய் போக்குபவர்களாகக் கொண்டாடப்படுகின்றனர். சமயகுரவர் பாடிய புள்ளிருக்கும் வேளூர், திருமயிலை ஆகிய ஊர்களில் திகழும் சிவபெருமான் மேற்கு நோக்கி வீற்றிருந்து தன் அடியவர்களின் நோயைப் போக்குகிறார்கள். எனவே, நோய் ஒழியக் கடவுளை வணங்குவோர் இறைவனை மேற்கு நோக்கிய வண்ணமாய் நிறுவுதல் சாலும். பழநிமுருகன், ஐயப்பன் ஆகியோரும் மேற்கு நோக்கியே வீற்றிருக்கின்றனர். மேற்கு நோக்கிய இறைவனுள்ள கோயில்களின் வரலாற்றை ஆராய்ந்தால் அவண் யாரேனும் பிணி நீக்கம் பெற்ற வரலாறு இருக்கும்.

## பைத்தியம் தெளிதல்

உடல் நோய் போல மன நோயும் மக்களை வாட்டும் தகையது; உடல் நோயினும் மன நோய் மிகக் கொடியது. பைத்தியம் போக்கி வைத்தியம் செய்யும் திருக்கோயில்களுமுள்ளன. புதுக்கோட்டைக்கருகி லுள்ள திருவரங்குளம் சிவன் கோயில் வரலாற்றுச் சிறப்பினது. இங்குள்ள அம்மன் கருவறை முன்னர் ஒரு கல் இருக்கிறது. இக்கல்லில் பைத்தியமாக உள்ளவர்களைக் கட்டிப்பிடித்துக் கொண்டிருப்பது போலக் கட்டி வைக்க வேண்டும். இதற்கென இரும்புச் சங்கிலி உள்ளது. கட்டிவைத்து அம்மன் தீர்த்தப் பிரசாதத்துடன் ஒரு குடம் தண்ணீரைக் கொட்டுவர். இவ்வாறு நாள்தோறும் மூன்று நாழிகை பைத்தியத்தைக் கல்லொடு கட்டிவைப்பர். இவ்வாறு ஒரு மண்டலம் அம்மனை வழிபட்டால் பைத்தியம் தெளிகிறது. நோயாளிகளை அடிப்பது தாக்குவது கிடையாது. பல்வேறு நோயுற்றவர்களும் குடும்பச் சிக்கல்களில் அகப்பட்டுக் கொண்டவர்களும் பத்து நாள், நாற்பது நாள் என்று இவ்வூரில் தங்கிக் கோயிலில் வழிபாடு செய்கின்றனர். குணசீலம் என்ற குணசேகரம் என்னும் வைணவ திவ்விய தேசமும் பைத்திய நோய் போக்கும் திருக்கோயிலாகும். இசுலாமியர் கொண்டாடும் ஏர்வாடி

தர்காவும் பைத்தியம் முதலிய நோய்களைப் போக்கச் சிறந்த இடமாக மக்களிடம் புகழ்பெற்றிருக்கிறது.

## பில்லிசூனியப் பிணிபோக்கல்

ஒருவருக்கு இன்னொருவர் வைக்கும் ஏவல், பில்லி, சூனியம் ஆகியவற்றால் ஏற்படும் நோய்களையும் துன்பங்களையும் நீக்கும் கோயில் அழகர் மலையாகும். மந்திரப் பிரயோகங்களால் விளையும் கேடுகளை ஒழிக்க அழகர் மலையின்றி வேறு தளமில்லை. இம்மலை மீது ஓடும் சிலம்பாற்றில் (நூபுர கங்கை) நீராடித் திருமாலை வணங்கிப் பதினெட்டாம்படிக் கருப்பரைப் பணிந்தால் பில்லி சூனிய மந்திரங்கள் தறிகெட்டோடித் தீமை விலகிவிடும்; பில்லி சூனிய மந்திரம் அறுந்து தொல்லை விளையாது. இங்கு வழிபட்டால் ஏவல் வைப்போரை எதிர்த்து ஏவல் வைக்கவோ திருப்பிவிடவோ வேண்டியதில்லை. திருவரங்கத்தில் வழிபாடு செய்தாலும் இப்பயன் உண்டு; எனினும் அழகர்மலை வழிபாடு அதனைவிடச் சற்றுக் கூடுதல் பயனைத் தருவதாகும். அங்குள்ள கருவறையின் அமைப்பும் மூர்த்திக்கு இடப்பட்டுள்ள யந்திரமும் தனி மதிப்பும் சிறப்புமுடையன; சுதர்சன சக்கரமும் மந்திரமும் எல்லா இடர்களையும் எதிர்ப்பையும் நீக்கவல்லன. ஸ்ரீசுதர்சன மந்திரம் ஓதியே மன்னன் மகளைப் பிடித்திருந்த பேயை ஸ்ரீராமாநுசர் ஓட்டினார் என்பது வரலாறு. மேல் மருவத்தூர் ஆதிபராசக்தி கோயிலில், அடியார்களுக்கேற்படும் பில்லி சூனியங்களின் தொல்லையை நீக்க அதர்வணக்காளி என்ற அம்மை நிறுவப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது.

## நோக்கமும் அபிடேகப் பொருள்களும்

திருக்கோயில் வழிபாடன்றித் திருக்கோயிலில் செய்யும் அபிடேகப் பொருள்களிலும் நைவேத்தியப் பொருள்களிலும் நோக்கம் கூறப் பட்டிருக்கிறது. இன்ன பொருளைக் கடவுளுக்குத் திருமஞ்சனமாட்டு வித்தால் நோய் நீங்கும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எண்ணெய், தண்ணீர் ஆகியன சுர நோய் போக்குதற்குரியன. இறைவனுக்குப் படைக்கும் புளியன்னம் நோய் நீக்கும் என்பர்.

## நோய் தரலும் நீக்கலும்

பாடல் பெற்ற திருப்புத்தூருக்கு அருகிலுள்ள சிறுபெரிச்சியூரில் பழமையான சிவன் கோயிலுள்ளது. அங்கு மேற்குப் பார்த்த வயிரவர்

எழுந்தருளியிருக்கிறார். இராயவரம், சாக்கோட்டை, நேமம், திருப்புத்தூர் முதலிய இடங்களில் வயிரவர் மேற்கு நோக்கியவர். இவர்கள் நோய் போக்கும் கடவுளராவர். சிறுபெரிச்சியூர் வயிரவர் வடிவம் செட்டிநாட்டிலேயே மிகச் சிறந்த வேற்றுமையான வடிவம். இவ்வயிரவருக்கு அபிஷேகம் செய்தவற்றையோ நைவேத்தியம் செய்தவற்றையோ உண்டால் தொழுநோய் ஏற்படும்; நோயுள்ளவர்கள் உண்டால் அந்நோய் போய்விடும். இச்சிலை மருத்துவ குணமுடைய சிலை என்று சொல்லப்படுகிறது. செட்டிநாட்டு வட்டாரத்திலுள்ள இன்னொரு வயிரவர் கோயில் தூர்வாசபுரத்தில் இருக்கிறது. இக்கோயிலுள்ளவற்றைத் தின்னும் காக்கை, எலி ஆகியவற்றின் வாய் வெள்ளையாக இருக்கும். கோயிலுக்கு வருபவர்கள், சிவாசாரியார் தராமல் எதையும் (திருநீறு, சந்தனம், குங்குமம்) நெற்றியில் இட்டுக்கொள்ளக்கூடாது; எடுத்து அணிந்தால் அந்த இடம் வெள்ளையாகிவிடும். இப்பகுதியை ஆண்ட புதுக்கோட்ட மன்னர், இங்குவந்த போது சந்தனத்தைக் கேட்டு வாங்கி நெற்றியில் வைத்துக்கொள்ள அந்த இடம் வெள்ளையாகிவிட்டது. பின்பு அவர் ஒரு ஊரைக் கோயிலுக்கு விட்டுக்கொடுத்து நோய் நீங்கப்பெற்றார் என்பது ஊரகக்கதை. செட்டிநாட்டில் பல கோயில்களில் இத்தகைய வெண்மை நிறமாகும் நோய் வயிரவருடன் தொடர்புபடுத்தி வழங்குகின்றது.

## பழநியும் பஞ்சாமிர்தமும்

நோய் தீர்க்கும் திருக்கோயில்களில் பழநியைக் குறிக்காவிடில் பயனில்லை. குஜத்திருத்தலமாகிய பழநியின் இறைவனே மருந்துப் பொருளாலானவன். இப்பெருமானைப் போகர் என்னும் சித்தர் உருவாக்கினார். இங்குச் செய்யும் பஞ்சாமிர்த அபிடேகமே சிறப்பானது. பழநியாண்டவரின் அருளும் அருமருந்தும் இந்த அபிஷேகத்தின் மூலம் எல்லா மக்களுக்கும் கிடைத்தது. இன்று இத்திருவுருவம் சிதைந்துவிட்டது; அபிஷேகம் செய்து செய்து வடிவம் குலைந்துவிட்டது என்று சொல்லப்படுகிறது. கடவுள் வடிவம் மருந்தாதலைக் கண்டு அதன் பகுதிகள் சிறிது சிறிதாக ஒடிக்கப்பட்டு விட்டன. சிலையின் சிதைவைக் காரணம் காட்டிச் சிலைக்கு அபிடேகம் நிறுத்திவைக்கப்பட்டிருக்கிறது; நோயுற்ற ஏழை மக்களுக்குக் கிடைக்கக் கூடிய தெய்வீக மருந்து கிடைக்காமல் போய்விட்டது. இன்று வெறும் தின்னும் பொருளாகப் பஞ்சாமிர்தம் மாறியுள்ளது.

வயிற்று வலி, வயிற்று நோய், தோல் நோய், குன்மம், ரோகம், இளைப்புப் போன்ற பல கொடிய நோய்களைப் பழநியாண்டவருக்கு அபிடேகம் செய்த பஞ்சாமிர்தம் போக்கும். போகர் என்னும் பெருமான் காலங்கடந்தும் தான்கண்ட மருந்துகளை மக்கள் பெற வேண்டும் என்ற அருள் நோக்கில் இத்தெய்வீகச் சிலையை- உடலைக்காக்கும் செவ்வாய்க்கு அதிபதியான பழநியம் பெருமானாக- வடிவமைத்திருக் கிறார். அம்மருந்தாற்றல் தேன், நெய், பழம் ஆகியவற்றில் கலந்து நோயாளர்க்கு மருந்தாகிறது. அந்த பஞ்சாமிர்தத்தை உண்டால் நோய் நீங்கும். இறை நம்பிக்கையும் மருந்தும் தீராத வினையையும் தீர்த்து விடுந்தகையன. சிவபெருமான் உகந்தாடும் ஆனைந்துக்கும் (பஞ்சகௌவியத்துக்கும்) இம் மருத்துவ குணமுண்டு. இது புற்றுநோய் போக்கும் மருந்தென்பர்.

பழநியாண்டவர் சிலையை மூலிகைகளாலும் எண் மருந்துகளா லும் இருக்க வேண்டிய பகுதிகளை உருவாக்க வேண்டும். இவ்வாறு இட்டு நிறைவு செய்து மீண்டு மூர்த்திக்கு அபிஷேகம் நடைபெறுமாறு செய்ய வேண்டும். இது சிவாகம நெறிக்குரியதாகும்.

## சித்தர் நெறி வேண்டும்

சித்த மருத்துவர்களும் ஸ்தபதிகளும் அருளாளர்களும் ஒருங்குகூடி மூலிகைகளாலும் மருந்துகளாலும் எண் மருந்துகளாலும் புதிய விக்கிரகங்களை வடிவமைக்க வேண்டும். நோய்க்குரிய மருந்துகள் கொண்டு திருமேனியைத் தனித்தனியே வடித்துத் திருமஞ்சனம் செய்து அதனை ஆய்வுக்கூடச் சோதனை செய்து நடைமுறைப்படுத்தலாம். அண்மையில், காரைக்குடி மீனாட்சிபுரம் முத்து மாரியம்மனுக்கு மூலிகை அபிடேகம் மிக விரிவாகவும் சிறப்பாகவும் நடைபெற்றது. இதன்மூலம் அம்மையின் திருமேனிக்கு மருத்துவகுணம் ஏற்றும் முயற்சி மேற்கொள்ளப்பட்டிருக்கிறது.

## நஞ்சு முறிக்கும் கல்

மதுரை மாவட்டம் பெரிய ஊர்ச்சேரி காமாட்சி அம்மன் கோயிலின் முன் ஆறடி உயரமுள்ள ஒன்றரை அடி அகலமுள்ள கல்தூண் ஒன்று காணப்படுகிறது. (நன்றி: தினமணி டிசம்பர் 25, 1998). அத்தூணின் மேற்பகுதியில் எழுத்துகளும் நடுவில் கருடனும் அதன் கீழ்ச் சதுரக் கட்டத்தில் மந்திர எழுத்துகளும் விளங்குகின்றன. விஷப்பூச்சிகளால் தீண்டப்பட்டோர் இக்கம்பத்தைச் சுற்றிவந்து மூன்று முட்டு முட்டினால்

உடனே நஞ்சு இறங்கும். நச்சுப் பூச்சிகளால் தீண்டப்பட்டோர் வரமுடியாவிட்டால், அவரைப் பார்த்தோர் கம்பத்தில் முட்டிக்கொண்டு வேட்டியை நீரில் நனைத்துப் பிழிந்து கட்டிக்கொண்டால், வேட்டி காய்ந்தவுடன் நஞ்சு இறங்கிவிடும். இச்செய்தியும் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டின் கீழ் மந்திரச் சொல் ஒன்றும் பொறிக்கப்பட்டிருக்கிறது.

இக்கல்லில் பொறிக்கப்பட்டுள்ள ஆறுகட்டங்கள் படுக்கை வடமாகவும் ஐந்து கட்டங்கள் நீள வாக்கிலும் முப்பது கட்டங்கள் உள்ள சக்கரமாகும். மேல்கீழாக 'சரவணபவ' என்றும் மற்றைய மூன்று வரிசைகளில் மந்திரச் சொற்கள் உள்ளன; 'ஓம் மசி நசி நசிமசி' என்ற மந்திரச் சொற்கள் காணக்கிடைக்கின்றன. இதில் கருடாழ்வார் உருவம் இருப்பதால் பாம்புகடிக்கு மருந்தாக இக்கல் விளங்குவதை அறிய முடிகிறது. கருடனுக்கு மேலே சங்குசக்கரம் வட்டவடிவில் தென்படு கிறது. இக்கல்லை நான்கு தலைமுறையாக முத்துக்கனியாபிள்ளை குடும்பத்தினர் பராமரித்து வருகின்றனர்.

இக்கல்லுக்கு அருகே இருந்த கிணறு தூர்ந்து சிறு குழியாக விளங்குகிறது. இன்றும் இக்கல்லை முட்டி நஞ்சு நீக்கம் பெறுவோர் பலர் என்று தெரிகிறது. இது காமாட்சி அம்மன் கோயிலை ஒட்டி நிகழ்ந்து வருகிறது.

## தேர்வட மருந்து

தேரோட்டத்தில் தேரிழுக்கத் தேர் வடத்தைப் பயன்படுத்துவர், வடமின் றேல் இரும்பாலான தேர்ச்சங்கிலி இருக்கும். ஆனால் கருநாடக மாநிலம் மங்களூருக்கருகே 'குகேசுப்பிரமணியா' என்ற தலம் விளங்குகிறது. இங்குத் தேர்த்திருவிழாவில் தேரை இழுக்க வளைந்து கொடுக்கக்கூடிய ஒருவகையான பிரம்பைப் பயன்படுத்துகின்றார்கள். இதனை மலையிலிருந்து வெட்டிக் கொண்டு வருகின்றனர். இந்தப் பிரம்புக் கொடி தேர்வடம் போலத் தொகுக்கப்பட்டுத் தேரிழுக்கப் பெறும். மக்கள் இந்தப் பிரம்பைக் கெட்டியகப் பிடித்துக் கொண்டு தேரை இழுப்பர். தேர் உரிய இடத்தைச் சேர்ந்ததும் அந்தப் பிரம்பைத் துண்டு துண்டாக மக்கள் அகப்பட்டதை வெட்டிக் கொண்டு போகின்றனர். தேரிழுத்த பிரம்பு இருந்த இடம் தெரியமல் மக்கள் கைகளுக்குப் போய்விடுகின்றது. இதனை மக்கள் 'மகாப்பிரசாதம்' என்று போற்றுகின்றனர். எவ்வகையான விஷகடியாக இருந்தாலும் இந்த

மர வடத்தைத் தேய்த்துத் தடவினால் உடனே குணமாகிவிடும். இதனை க்ஷேத்திரக் கோவைப் பிள்ளைத் தமிழிலும் ஆசிரியர் குறித்திருக்கிறார்.

எல்லாச் சமயத்தாரிடமும் நோய் நீக்கம் பெறப் பல வேண்டுதல்கள் செய்துகொள்ளும் பழக்கம் இருக்கிறது.

1. உடலுறுப்புகளுக்குத் தீமை விளையின் உறுப்புகளை வெள்ளியால் செய்து கோயிலுக்கு வழங்குதல்.

2. எடைக்கு எடை சருக்கரை, பழம், கயிறு போன்றவற்றைக் கொடுத்தல்.

3. மாவிளக்கு, காவடி எடுத்தல், பூக்குழி இறங்கல் போன்ற நேர்த்திக் கடன்களைச் செய்தல்.

4. குறிப்பிட்ட மந்திர செபம் செய்யுமாறு பொருளை வைப்பு நிதியாக்கிக் கட்டளை நிறுவல்.

5. வேண்டுதல் செய்து அதனை நிறைவேற்றல்.

உடல் நலத்துக்கு திருக்கோயில் வழிபாடு இன்றியமையாது விளங்குவது போல் வாழ்க்கை வளர்ச்சிக்கும் திருக்கோயில் வழிபாடு வழிகாட்டுகிறது. திருமணம் நடைபெறவும் மக்கட்பேறு பெறவும் வட்டாரத்துக்கு வட்டாரம் குறிப்பிட்ட திருக்கோயில்கள் இருக்கின்றன. எனவே மக்களுக்குக் குறையாத வயதும் கழுபிணி இல்லாத உடலும் வேண்டித் திருக்கோயில்களை இன்றும் அவர்கள் வழிபட்டு வருகின்றனர். வளர்ந்து வரும் விஞ்ஞான உலகில், மன அமைதியையும் வாழ்க்கைத் தேவையையும் திருக்கோயில்களின் தெய்வங்கள் அருளி வருகின்றன.



# ஆலய நாதசுர இசைமரபுகள்

**திரு. ஏ. வி. செல்வரெத்தினம்**
*நாதசுரக்கலைஞர் ஆண்டாங்கோயில்*

குஞ்சரமா முகத்தோ டைந்து கரத்தோனை
பிஞ்சுமதியணி மகனை பிரணவத்தின் பொருளானை
வஞ்சியுமை பாலகனை யாகூவிலமர்ந் தோனைத்
தஞ்மென்று வணங்கியே தமிழ்புனைந் தளித்திடுவோம்.

## தோற்றுவாய்

இயல் இசை நாடகம் என்ற முப்பெரும் பிரிவு தமிழ்மொழிக்கே உரியது. பெருமை வாய்ந்த இந்த முக்கலையும் "ஆசைதரும் கோடி அதிசயங்கள் கண்டதிலே ஓசை தரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ'' என்று பாரதியார் குறிப்பிடுகின்றார்.'' முக் கண்ணனாகிய இறைவனுக்கு உரியதாகிய இக்கலையில் மங்கல வாத்யமாக வழங்கிடும் குழல்வகை, நாதஸ்வரம் என்பது பற்றிக் கட்டுரை எழுதிடக் குருவருளாலும் இறைவனின் திருவுள்ளப் படியும், பெரியோர்களின் ஆசியுடன் முன்வந்துள்ளேன். குறையிருப்பின் நீக்கி நிறைகளைப் போற்றியருளக் கோருகின்றேன்.

கற்பனை கடந்த ஜோதி கருணையே
உருவமாகி அற்புதக் கோல நீடி
அருமறைச் சிரத்திரன் மேலாம்
சிற்பர வியோமமாகும் திருச்சிற்றம்பலத்துடன் நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற பூங்கழல் போற்றி போற்றி!
– சேக்கிழார்

சிவபெருமான் மனம் வாக்கு காயங்களுக்கு எட்டாதபடி அவைகளைக் கடந்து நிற்பவன். ஆதியும் அந்தமும் இல்லாத அருள்பெருஞ் ஜோதியாகிய சிவபெருமான் தன்னைவலகம் அறியப்படாத அபார மகிமையை உடையவர். ப்ரும்மா, விஷ்ணு போன்ற தேவர்களாலும் வேதாதி நூல்களாலும் அறியப்படாதவர்.

## சிவத்யானம்

இந்துநிப பஞ்சமுக ஹஸ்த தஸயுத்தம்
குலவர டங்கமஸ வஜ்ர அபயம்ச லயது
பாசவரதங்குச மனிதர்கண வாமே
ஸ்வேத கமலாஸன சதா சிவஸ் வரூபம். –ஆகமநூல்

சிவபெருமான்- பாலச்சந்திரன், கங்கை, கொன்றை, முதலியன விளங்கும் சடா முடியையும், ஐந்து திருமுகங்களையும், பத்துத் திருக்கரங்களையும் உடையவராய்; சூலம், மான், மழு, வாள், அக்னி, டமருகம், நாகம், பாசம், அங்குசம், கண்டாமணி, தாமரை மலர், பரிவட்டம், மாதுளம்பழம், மாத்திரைக்கோல் ஆகியவற்றைத் தரித்தவராய், அபயவரத ஹஸ்த்தராய் சுத்த ஸ்படிக வடிவராய், உமையொரு பாகத்துடன் ஸ்ரீ கைலாயத்தில் வீற்றிருப்பார். ஆன்மாக்களுக்கு அருள்புரியும் பொருட்டுச் சிவபெருமான், அருவமாகவும், உருவமாகவும், அருஉருவமாகவும் விளங்குகின்றார்.

## அருவ வழிபாடு

**உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்**
**வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சிவன் சிவலிங்கம்**
**கள்ளப்புலன் ஐந்தும் காளாமணி விளக்கே.** –திருமூலர் மந்திரம்

எங்கும் வியாபித்திருக்கும் இறைவனை நம் மனத்தினுள் ஜோதி ரூபமாக வழிபடுதலாலும், சிவலிங்கத்திலிருந்து தோன்றிய இருபத்து ஐந்து உருவ மூர்த்தி களாகவும், சிவபெருமான் அருளிய இருபத்தெட்டு சிவாஹமம் மூலமாகவும் வழி பட்டு இறையருள் பெறலாம். இவை அனைத்திலும் மிகமேலானதாகவும் நான்காம் படியாகவும் அமையப் பெற்றது இறைவனை இசையால் வழிபடுதல், இயலிசை நாடகமாய் எழுவேல்களாய் வழிபடும் அன்பர்களின் உள்ளத்தில் எப்பொழுதும் இறைவன் இருப்பதைக் குறிப்பிடும். கபிலதேவ நாயனாரின் பதினோராந் திருமுறைப் பாடலை உவமை கூறலாம். சுந்தரமூர்த்தி நாயனார்க்கு வெள்ளையானை அருளிச் சாயுச்சிய பதவிக்கு இறைவன் அழைத்துக் கொண்டதான வரலாறு நாம் அறிந்ததே. சுந்தரமூர்த்தி நாயனாரின் பக்தியான இறைவழிப் பாமலர்களுக்கு இறைவன் மகிழ்வுற்றான்.

## ஏழாந்திருமுறை

மந்திரம் ஒன்றறியேன் மனைவாழ்க்கை மகிழ்ந்தடியேன்
சுந்தரவே டங்களால் துரிசேசெயும் தொண்டன்எனை

அந்தரமால் விசும்பின் அழகானை அருள்புரிந்த
சுந்தரமோ நெஞ்சமே நொடித்தான்மலை உத்தமனே.

ஓடும் கொடிய விஷப்பாம்பும் பேயும் இசைகேட்டு உள்ளுருகி
ஆடும் கருங்கல் அசைந்துவரும் அழகுகுழந்தை குரல் கேட்கும்
மாடு இசை கேட்டு ஓடிவரும் வந்த பசுவும் பால் சுரக்கும்
பாடும் இசைகேட்டு உருகாரை என் சொல்வேன் பாவலரே!

சிதம்பரத்தில் ஸ்ரீ நடராஜ மூர்த்தியின் ஆனந்த தாண்டவத்தின் போது ஈசனின் உடுக்கை ஒலியிலிருந்து ஸமஸ்க்கிருத வியாகர்ண சாஸ்த்திரம், சங்கீதம், நாட்டிய சாஸ்திரம், வேதாந்தம் போன்றவை தோன்றியதாகத் தலவரலாறு கூறுகின்றது.

## செய்யுள்

தத்தம்தீம் தாம் தோமென்று நர்த்தனம் செய்கின்ற
சித்சபா நாதருடைய ஐந்து முகங்களிலும்
சச்சபுடம் முதல் ஐந்து தாளங்களும் முறையே
இத்தரை மீதினில் இசைக்கென்று பிறந்தனவாம்
கங்கை தரித்தோன் முகத்தில் காணும் ஐந்து தாளமுடன்
தங்குதள துங்குமுனி நூற்றெட்டும் சொல்லவே
வடக்கு அரிபாதத்தை வைத்த செழுஞ்ஞானக்
கடக்குன்றிற்கும் ஞானக்காப்பு.

அகஸ்த்திய முனிவரால் நூற்றெட்டுத் தாளங்கள் தோற்றுவிக்கப் பட்டதாகத் தெரியவருகிறது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப் பெற்ற காமிக சாஸ்திரத்தில் கோயில் பூஜா காலங்களுக்காக நூற்றெட்டு வாத்யங்கள் உபயோகப்படுத்தி வந்ததாகவும் கூறப் பட்டுள்ளது.

## இசைக் கருவிகள் நான்கு வகை

துளைக் கருவிகள், நரம்புக் கருவிகள், தோல் கருவிகள், கஞ்சக்கருவிகள் என நான்கு வகைப்படுத்தி, கோயில் பூஜைக்கெனவும், மணவினைக்கெனவும், விளையாட்டிற்கெனவும், வீரத்திற்கெனவும், விழாவிற்கெனவும் வழங்கி வந்துள்ளன. இவைகளைப் பற்றிச் சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, முதலிய பழம்பெரும் நூல்களின் வாயிலாக அறியக்கிடக் கின்றன. எல்லாவற்றையும் தனித்தனியே விளக்கிடுவதற்குக் கட்டுரை இடமளிக்காது. எனவே, இங்கு அவசியமானதாகிய குழல் வகைகள் மாத்திரம் சொல்லப்படுகின்றது.

## துளைக்கருவிகள்

சங்கு, தவளச்சங்கு, திருச்சின்னம், பூரி, நபூரி, எக்காளம், கவுரி காளம், தாரை, கோணத்தாரை, பெருந்தாரை, முகவீணை, வங்கியம், பெருவங்கியம் நாதஸ்வரம், திமிரி நாதஸ்வரம் என்பவை துளைக் கருவிகளாகும்.

கோயில் பூஜா காலங்களுக்கு என்று தற்போது குழல் வகைகளில் எஞ்சி நிற்பது நாதஸ்வரம், சங்கு, முகவீணை, திருச்சின்னம், எக்காளம், நபூரி, ஆகியவை மட்டுமே. இவைகளில் முதன்மைநிலை வகிப்பது. 'நாதஸ்வரமே' சுவாமி புறப்பாட்டில் இறைவனுக்கு நேராக நின்று வாசிக்கப்படும் சேவகமுறை நாதஸ்வர மேளத்துக்குத்தான் கொடுக்கப்பட்டுள்ளது. மற்றைய குழல்வகைகள் மேளத்துக்குப் பின்புறமும், தேவாரம் திருப்பல்லாண்டு முதலியன சுவாமிக்குப் பின்புறமும் சேவகமுறை கொடுக்கப்பட்டுள்ளது. இதன் காரணம்:

## புராண வரலாறு

துர்வாச முனிவரின் சாபத்தினால் தேவேந்திர மகாராஜாவின் ஆஸ்திகளனைத்தும் கடலுக்குள் சங்கமமாகி விடுகின்றன. தேவேந்திரன் மகாவிஷ்ணுவிடம் முறையிடுகின்றார். இதன் காரணமாக மகாமேரு பர்வதத்தை மத்தாகவும் வாசுகி என்ற பாம்பினைக் கயிறாகவும் கொண்டு தேவர்கள் ஒருபுறமும் அசுரர்கள் ஒருபுறமுமாகவும் நின்று திருப்பாற்கடலைக் கடைகின்றபோது ஸ்ரீ மகாலெட்சுமி அமிர்த குடத்தோடு பிரஸன்னமாகின்றார். தேவர்கள் புறம் அமிர்தம் கிடைக்கப்பட்ட உத்வேகத்தில் வெற்றி முழக்கமாகப் பாம்பின் வாலையே கொம்புபோல் வாயில் வைத்து ஊதி சுயம்பிரகாசமாகிய நாதத்தை எழுப்பியதாகச் சொல்லப்படுகின்றது. ராஜ வாத்யம்- மங்கள வாத்தியம் என்பதான பொருளுடன் விளங்கி வரும் நாதஸ்வரத்துக்கு நாதஸ்வரமா? நாகஸ்வரமா என்ற வழக்கு ஒன்று உள்ளது. நாக சர்பத்தின் உருவ அமைப்போடு விளங்குவதனால் நாகஸ்வரம் என்று சொன்னாலும், நாதனால் நாதத்தை எழுப்பி நாதோபாசனையே செய்துவரும் இந்த வாத்யத்துக்கு "நாதஸ்வரம்" என்ற பெயரே மிகவும் பொருந்தும்.

## நாதஸ்வரம் செய்விக்கும் மரம்

ஓங்கிய மூங்கிலுயர் சந்துவெண் கலமே
பாங்குடை செங்காலி கருங்காலி பூங்குழலாய்
கண்ண ணுவந்த கழச்சிவை யாமென்றார்
மண்முழுது நூலுணர்ந்தோர் வைப்பு.

பஞ்சபுராண நூலில் கண்டுள்ள இந்தச் செய்யுளில், ஐந்துவகைகள் தான் சொல்லப்பட்டுள்ளன. எங்கள் மூதாதையர்களின் குறிப்பின்படி சந்தனம்- கருங்காலி, செங்கருகங்காலி எனச் சொல்லப்படும் ஆச்சாமரம் - வேங்கை மூங்கில் - தோதகத்தி - விப்புளா- வெண்கலம்- வெள்ளி - பொன்-யானைத் தந்தம் இப்பதி னொன்றில் ஏதாவது ஒன்றினால் நீளம் 120 நெல் - கீழணசு வைக்கும் நீளம் விரல் 1 நெல் 4; மேலணசு வைக்கும் நீளம் விரல் 2 நெல் 4; சுரத்தின் துவாரம் சுற்றளவு நெல் 1; உளவின் சுற்றளவு மேல் புறம் 2 1/2 விரல் கீழ்ப்புறம் 4 1/2 விரல். நாதசுரத்தின் முழுநீளம் 32 விரல்கள் என்று சொல்லப்படுகின்றது.

இந்த விவரப்படி 28 அங்குலம் நீளம் (ஒரு 1.1/2 சென்டிமீட்டர்) அஞ்சுகட்டை ஸ்ருதி உள்ள நாதஸ்வரம் இந்தக் கணக்குவரும்.

என் தந்தையார், ஆண்டாங்கோயில், வீராசாமி பிள்ளை அவர்கள் இந்த அளவுள்ளதான தங்க நாதஸ்வரம் வாசித்துள்ளார். ''தங்க நாயனக்காரர் வீடு'' என்பதாக எங்கள் வீடு அடையாளம் சொல்லப்படும் வழக்கம் இன்றும் நடந்து வருகின்றது.

நாதஸ்வரம் தற்போது செங்கருங்காலி என்னும் ஆச்சா மரத்தில் மட்டுமே செய்விக்கப்படுகின்றது. இம்மரம் 42 வயதுள்ளதாகவும் கூடுதல் குறைச்சலாகவும் வயதுடையது கூடாது என்பதாகவும், 42 வயது தானா என்று சோதித்திட, அம்மரத்தைக் கொஞ்சம் சீவி விளக்கில் பிடித்தால் தீபம்போல் எரியுமென்றும் கூடுதல் குறைச்சல் வயதுள்ளதாயின் கருகிவிடும் என்றும் சொல்லப்படுகின்றது.

ரிக்வேதத்தில் உத்தாலவேணு என்னும் பெயர் நாதஸ்வரமே என்பதை ஜெர்மானிய ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ச்சி செய்து கண்டறிந்து தெளிவாக்கி யுள்ளார்கள். வேத சாஸ்த்திர முறைப்படி நாதஸ்வர உடற்கூறின் வேதைகள் சொல்லப்படுகிறது.

அடிவட்டம் சூரியன், மேல்சுற்று அஷ்டமாநாகம், அதன்மேல் காணப்படும் சில் சந்திரன், மேலே உள்ள ஸ்வரத்தின் துளை சக்தி, உள்ளே பெருந்துளை விஷ்ணு, சுயம்பிரகாசமே நாதம்,

துளைகளில் எழும் ஒலி ஸப்தமாதர்கள்; சுரங்கள் தேவர்கள். கிருஷ்ணா, இந்திரன் வலதுகனிஷ்டை சரஸ்வதி - அருமிகை- இந்திராணி- மத்திமை- வைரவி- தர்சனி- வராகி இடது அருமிகை- காளி- மித்திமை- நாராயணி- தர்சனி- துர்கை- என்பதாகச் சொல்லப்படுகின்றது.

(இது நந்தி மதமாம்)

1. எகிப்தில் உள்ள இரண்டு பிரமிடுகளிலும், மலேஷியாவில் உள்ள ஒரு புராதன ஆலயத்திலும் நாதஸ்வர வாத்யம் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டுக்கள் காணப்படுவதாக ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

2. சிலப்பதிகாரத்தில் வங்கியம் என்ற பெயரில் நாதஸ்வரம் குறிப்பிடப்படுவதினை, அந்நூல் உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் சொல்லியுள்ளார்.

3. கி.பி. 1100ஆம் ஆண்டில் எழுதப்பட்ட சிங்கிராஜ புராணம் என்ற கன்னட நூலிலும்

4. ஸ்காந்தம் என்ற பழைமையான ஸமஸ்க்ருத நூலில் சிவரகஸ்ய காண்டம் என்ற அத்யாயத்திலும் நாதஸ்வரம் பற்றிய விவரங்கள் உள்ளதாக ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

5. கி.பி. 1400ஆம் ஆண்டு துவங்கிக் காணப்படும் பல கல்வெட்டுகளும் நாதஸ்வர- தவில்- வித்வான்களுக்கு மான்யம் வழங்கப்பட்டதற்கான செப்பேடுகளும் உள்ளதாக ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்துள்ளன.

இத்தகைய தொன்மை வாய்ந்த நாதஸ்வரக்கலையினை இறைவன் தனக்கே உரியதாக வைத்துக்கொண்டுள்ளதே மிகவும் சிறப்புடைய தாகும். உலகில் திருக்கோயில்கள் தோன்றிய நாளாய் குழலொலியும்-பாவராக தாளத்துடன் அமையப்பெற்ற கூத்தொலியும், பெரியமேளம் சின்னமேளம் என்கின்ற பெயருடன் ஈசனின் பூஜைக்குச் சேவகம் செய்யப்பட்டு வந்துள்ளது.

### சேந்தனார் திருப்பல்லாண்டு

குழலொலி யாழொளி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம் பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று விம்மி மிகு திருவாரூரின்
மழவிடையார்க்கு வழி வழியாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழ அடியாரொடும் கூடி எம்மானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## இளங்கோவடிகள்

"குழலினும் யாழினும் குரல் முதல் ஏழும்
வழுவின்றிசைத்து வழித்திறன் காட்டும்
அரும்பெறன் மரபிற்பெரும்பாண் இருக்கையும்"

என்பதாகச் சிலப்பதிகாரத்தில் குழலைத்தான் முதன்மையாகக் கொண்டு பாடியுள்ளார்கள்.

## நாதஸ்வரத்துக்குச் சில நியதிகள்

இன்னின்ன நேரத்தில் ராகங்கள் (நிறங்கள் என்றும் சொல்லலாம்) வாசிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு நிறங்களுக்கும் உள்ள சிறப்புக்கள் என்ன என்பதையும் முன்னோர்கள் வகுத்துத் தந்துள்ளார்கள். அவற்றின் விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன. அக்காலத்தில் சங்கீதத்தை மிகவும் பக்தியுடனும், காயகதோஷம் வராமலும் கையாண்டுள்ளார்கள். உதாரணமாக மண்பாண்டங்களில் சமைத்துப் படைத்திட எவ்வளவு பக்குவம் வேண்டுமோ அத்தகைய முறையில் ஆக்கியளித் துள்ளார்கள். இசைவுலகில் என்றென்றும் வாழுபவர்களாகிய மகானுபவர்களால் சொல்லப்பட்ட வழிமுறைகளை என் சிற்றறிவுக்கு எட்டியவற்றினைத் தெரிவித்துள்ளேன்.

## இலக்கணமுறை இராக நிறங்களும் அவற்றின் மெய்யுணர்வுகளும்

1. நாட்டை : இது இறைவன் பவனி வருவதைப் பறை சாற்றிடவும், இறைவணக்கத்துடன் நற் காரியங்கள் துவங்கிடவும், வீரமுழக்கமாக அமைந்த நிறம்

2. கௌளை : மனதில் தெய்வபக்தியைப் பெருக்குவதற் கும், இறைவனுக்கு அபிஷேகம் நடக்கும் போதும் தென்றல் வடிவை உணரச் செய்யும் நிறம்.

3. ஆரபி : இறைவனை ஜோதியாகத் தியானம் செய்வதற்கு உகந்த நிறம்.

4. வராளி : பந்தபாசங்களை மறந்து மனத்தை ஒரு நிலைப்படுத்தி 'ஒன்றென்ற ஒன்றே காண்' என உணரச் செய்து யோக நிலையளிக்க இந்த நிறம் உகந்தது.

5. ஸ்ரீராகம் : உமையொருபாகம் என்பதை, பரமனில் பாதி ஸ்ரீ என்னும் தத்துவத்துடன் அர்த்த நாரீஸ்வரராக உணரச் செய்வது, ஸ்ரீ ராகம் என்னும் நிறம்.

6. கல்யாணி : மகிழ்ச்சியாய் அமர்ந்துகொண்டு இன்ப உணர்ச்சியுடன் இசையை ஆராதிப்பது இந்த நிறத்துக்குப் பொருந்தும்.

7. தன்யாசி : கடவுளிடம் நம் குறைகளை முறையிட்டு ஆபத்ஸஹாயராக வந்து அருளக்கோரிடு வதற்கு இந்த நிறம் ஏற்றது.

8. கேதாரகௌளை : மிகவும் துன்பப்படுவதாய் வேண்டி, குறை தீர்க்கும்படி கேட்டுக் கொள்ளுவதற்கு இந்த நிறம் உரியது.

9. பூர்விகல்யாணி : பாவம் செய்யாதே மனமே என்று தன் மனத்தையும் தரணியிலுள்ள போக்கும் இந்நிலை அருள்வேண்டும் என்பதற்காக வேண்டுவது இந்த நிறம்.

10. பெஹாக் : தான் விரும்பிய கோரிக்கை நிறைவேறிட நன்றியுடையவனாக வேண்டிக்கொள்வது இந்த நிறம்.

11. யதுகுல காம்போதி: மெய்யறிவுத் தோற்றம் உண்டா கவே, அதற்குமுன் தான் செய்த பாபச் செய்கைகளைக் குறித்து இரங்குதலும், இனி அவ்வாறான செய்கைகளில் ஈடுபடாமல் உறுதி மனம் வேண்டிடுவதாக அமையப் பட்டது இந்த நிறம்.

12. பிலகரி : நல்ல காரியங்களைச் செய்வதற்குத் துணிவு, புலன்களை வெற்றி கொள் எனத் தூண்டு தல் செய்வதற்கு இந்த நிறம் பெரிதும் தகுதியுடையதாகும்.

13. ஸகானா : ராகதேவதைகளிடம் மன்னிப்புக் கோரிட இந்த நிறம் பொருந்தும்.

14. ஆனந்தபைரவி : நிலைபெற்ற சாந்தம் கோரிடுவதற்கு இந்த நிறம் உகந்தது.

15. தோடி : கடவுளிடம் நம்பிக்கையுடைய ஒரு அன்பன் தனக்கும் கடவுளுக்கும் உள்ள பேதாபேதங் களை வெளிப்படுத்த இந்த நிறம் தகுதியுடை யது.

16. பூபாளம் : அருணோதயத்தின் மெய்யுணர்வும் சாந்த மனோ நிலையும் அமைதியும் தரும் நிறம்.

17. மோகனம் : கடவுளின் எல்லையில்லாப் புகழினைப்பாடிப் பரவசப்படும் நிறம்.

18. நீலாம்பரி : நற்சாந்த நிலையில் அமைதியாய்த் தூங்கி, தேக வலிமை மனோவலிமை புத்துணர்ச்சி யும் பெற்று வாழ் என்று வாழ்த்தும் நிறம்.

19. முகாரி : துக்கத்தை வெளிப்படுத்திப் புலம்பலாகக் கோரிக்கை விடுக்கும் நிறம்.

20. நாட்டைக்குறிச்சி : எல்லோரும் இன்பசாகரத்தில் திளைத்து இனிய மன மகிழ்வு பெறும் நிறம்.

21. நாதநாமக்கிரியை: நாதமும் வேதமும் கீதமுமாகிய இறைவனின் கிரியா சக்தியைப் போற்றிப் புகழும் நிறம்.

22. புன்னாகவராளி : மெய்ம்மறந்து மகாதேவனிடம் மனம் லயித்துக் கூத்தாடி மகிழச்செய்யும் இந்த நிறம்.

23. சாவேரி : கடவுளிடம் கொண்டுள்ள தூயதான பக்திக் காதலை வெள்ளப் பெருக்காகப் பெருக் கெடுத்து ஓடச் செய்வது இந்த நிறம்

24. சங்கராபரணம் : கைலைநாதரைக் கல்யாணசுந்தரராகக் கொண்டு கண்டு மகிழ்வுபெறும் உணர் வினைத் தூண்டச் செய்யும் நிறம்.

25. வேகடை : சத்தியத்தையே கடைப்பிடித்து வரும் ஒரு அன்பருக்கு எதிர்பாராத இன்னல் வந்து நேர்ந்துள்ளபோது, நண்பனாக வந்து காத்தருளும்படியாக இறைவனிடம் வேண்டி யழைக்க இந்த நிறம் உகந்தது.

26. மத்தியமாவதி : பக்தியுடன் பகவானை அனுதினமும் போற்றும் பாவலர்களுக்கும் பாமரர்களுக் கும் கோரிக்கையில்லாம லேயே ஸர்வமங் களங்களும் கங்காள தாரணர் அருள்பாலித் திடுவார் என்பதைக் குறித்திடும் நிறம்.

இம்மாதிரி நிறங்களின் சுவை உணர்ச்சி தக்கவிதத்தில் பொருந்துவதாய், இன்பமாய், அநிர்வன்மாய்ப் புகழத்தக்க விதத்தில் நிற ஆளத்தியென்பது நம் தமிழ்நாட்டிலேயே தொன்று தொட்டு மரபாக வழங்கி வருகின்றது. இந்த நிறமாகிய இராகமும், நிறத்தின் ஆலாபனை முறையும் நம் தமிழினத்தோரின் பூர்விகச் சொத்து.

## திருக்கோயில்களில் அன்றாடம் நடைபெறும் பூஜாகாலங்கள்

**அதிகாலை 5 மணிக்கு துவக்கம் உஷகாலம்**
**காலை 9 மணிக்குத் துவக்கம் காலசந்தி**
**பகல் 12 மணிக்குத் துவக்கம் உச்சிக்காலம்**
**மாலை 5 மணிக்குத் துவக்கம் சாயரட்சை**
**இரவு 7 மணிக்குத் துவக்கம் இரண்டாங்காலம்**
**இரவு 9 மணிக்கு அர்த்தஜாமம்– பள்ளியறை பூஜை.**

## பள்ளியறை பூஜை சமயம்

ஆந்தபைரவி- நீலாம்பரி- ஸகானா ஆகிய நிறங்களில் ஏதாவது ஒன்று வாசித்துக் கதவடைப்பாட்டு என்று சக்கரவாக இராக நிறத்திலமைந்த பாடல் வாசிக்கப்படும். மற்றும் இராக நிறங்களைப் பூஜாகாலங்களுக்கென்று பன்னிரண்டு பாகமாகப் பிரித்துக் காண்பிக்கப்பட்டுள்ளதின்படி அந்தந்தக் காலம் நேரத்துக்கு ஏற்ப வாசித்திடுவதே வழக்கம்.

### அதிகாலை மணி 4 முதல் 6 வரை

பூபாளம்- பௌளி- மலயமாருதம்- வலஜி நாத நாமக்கிரியை- மாயாமாளவ கௌளை.

### காலை மணி 6 முதல் 8 வரை

பிலகரி- கேதாரம்- கொளளிபந்து- ஜகன்மோகினி-

### காலை மணி 8 முதல் 10 வரை

தன்யாசி- அசாவேரி - சாவேரி - ஆரபி- தேவகாந்தாரி- தேவமனோகரி

### 10 மணி முதல் பகல் 12 மணி வரை

சுருட்டி- ஸ்ரீராகம்- மத்யமாவதி- மணிரங்கு- பிருந்தாவன சாரங்கா- தர்பார்.

### பகல் மணி 12 முதல் 2 மணிவரை

சுத்தபங்களா- பூர்ணசந்திரிகா- கோபிகா திலகம்- முகாரி- கௌட மல்லாரி.

### பிற்பகல் 2 மணி முதல் 4 மணிவரை

நாட்டைக் குறிஞ்சி- உசேனி- ரவிசந்திரிகா- வர்த்தனி- ஹம்ஸானந்தி- மந்தாரி.

### மாலை 4 மணி முதல் 6 மணிவரை

பூர்விகல்யாணி- பந்துவராளி- வஸந்தா- லலிதா- சரஸ்வதி- சீளாங்கி- கல்யாணி- போகவசந்தம்- ஹம்ஸப்பரமரி.

### மாலை 6 மணி முதல் இரவு 8 மணி வரை:

சங்கராபரணம்- பைரவி - கரகரப்பிரியா- பைரவம்- நாராயணி- ஹம்ஸத்வனி- கௌளை- இரத்னாம்பரி.

### இரவு மணி 8 முதல் 10 வரை

காம்போதி- ஷண்முகப்பிரியா- தோடி- நடபைரவி- ஹரிகாம்போதி- கமாஸ்- அமிர்த வஸந்தம்- ஸ்ரீரஞ்சனி

### இரவு 10 முதல் 12 வரை

சிம்மேந்திரமத்யமம்- சாருகேசி- கீர்வாணி- ரீதிகௌளை- ஆனந்த பைரவி- நீலம்பரி- யதுகுலகாம்போதி- கார்த்தியாயனி- அம்ஸ நாதம்.

### நள்ளிரவு 12 மணி முதல் 2 மணி வரை

அடாளு- கேதாரகௌளை- வேகடை- சாமா- வராளி- தர்மவாதி- பூஷவளி.

### 2 மணி முதல் அதிகாலை 4 மணி வரை

ஹேமவதி- கர்னாடக தேவகாந்தாரி- ரசாளி- பாகேஸ்வரி- மோகனம்- அருணக்கிரியா.

### உற்சவ காலங்களில்

ஏர்படி உத்ஸவ காலங்களில் பத்து தினங்கள் சுவாமி வீதியுலா நடைபெறும். காலை விழாவில் கோயில் ஆஸ்தான கலைஞர்கள் வாசிப்பார்கள்.

### இரவு புறப்பாட்டிற்கு ஏர்படி மேளம்

இரவு வீதியுலாவிற்குச் சிறப்பு நாதஸ்வர கச்சேரி பத்து தினங்களுக்கும் ஒரே குழுவினரோ, இரண்டு பகுதியாக, ஐந்து தினங்களுக்கு ஒரு செட்டோ, ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும். முக்கிய திருவிழாக்களில் இரண்டு குழுவினர் சந்தித்து வாசிக்கும்படியாகவும் அதிகமாகச் செட்டு ஏற்பாடு செய்வது வழக்கம்.

### மல்லாரி

சுவாமிக்கு மண்டகப்படி தீபாரதனை நடக்கும் எழுந்தருளும் சமயம். கெம்பீர நாட்டை தவில் அலாரிப்புடன் முழங்கிடும். பிறகு மல்லாரி.

### மல்லாரி என்பது கலைஞர்களின் கைவண்ணமே

ஆதியில் காளிதேவியுடன் தாண்டவம் புரிந்து சிவபெருமான் கால் சலங்கையுடன் ஆகாயத்தில் உயரக்கிளம்பி ஆகாயமாளவி இறங்கும்போது அவரது புஜம் துடைபாதம் நிலத்தில் விழுந்தபோது தா. தீ, தொம், நம், என்ற ஜதி பிறந்தது. அது ஜாதிவர்ணங்களினால் மி ருதங்காதி வாத்யங்களுக்குப் பிரதானமாகவும் சக்தி, சிவம் பொருந்திய இரண்டு கைகளினாலும் தீம் தீம் திமி தாம் தாம் என்று அடிக்கும்போது உண்டாகிய தொனியானது ஸப்தஸ்வரங்களினுடைய நாதம் என்றும் சொல்லப்பெறும். இதன் காரணமாகத் தான் தோல்கருவியாகிய தவில் வாத்தியத்தில் தவுல் சொல் “குந்தகு குந்தகு திருத குந்தகு” என்பதாக அலாரிப்பு வாசிக்கச் செய்து பிறகு கெம்பீர நாட்டை நிறமும் மல்லாரியும் துவங்கப்படுகிறது.

### மல்லாரியென்பது என்ன?

பஞ்சமுக பரமனின் பாதசலங்கையில் ஒலித்து, பவனிவரும் நாட்டை கௌளை ஆரபி வராளி ஸ்ரீ ராகம் இணைந்து அலாரிப்புடனே தாளம் தவிலுடன் தழுவிக் குழலில் நடனம் செய்யும். மல்லாரியென்று சொல்லும் காவியக்கலையிதுவே.

பரமனாரின் பாத சலங்கையிலிருந்து தோற்றுவிக்கப்பட்டவையே அனைத்தும் என்பதான கருத்துடன் இந்த ஸாஹித்யம் செய்யும்படி எனக்கு அருள் கிட்டியது. இதற்கு உவமையாக திருவாசகத்திலிருந்து ஒரு வாசகம் தருகிறேன். குயிற்பத்து.

**கீதமினிய குயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்**
**பாதமிரண்டும் வினவில் பாதாள மேழினுக்கப்பால்**
**சோதிமணிமுடி சொல்லிற் சொல்லிறந்து நின்ற தன்மை**
**ஆதிகுண மொன்றுமில்லான் அந்தமில்லான் வரக்கூவாய்.**

பாதங்கள் வினவிடும் சொற்கள் ஏழுபாதாளங்களுக்கு அப்பாலும் பேசிடுவதாகவும், மற்ற எந்தச் சொற்களும் உயிரற்றதாகவும் மாணிக்கவாசகர் சொல்லிடும் பாதங்கள் இரண்டும் வினவிடும் சொற்கட்டுகளையே, தாளக்கட்டுப்பாட்டுடன் மல்லாரியாக அமைத்து சுரக்கோர்வை ஆகியவைகளுடன் அவாளவா திறமைக்கேற்ப மல்லாரி உருப்பெற்று முழங்கி வழங்கிடப்படுகின்றது.

கெம்பீரநாட்டை நிறத்தில்தான் மல்லாரி வாசிக்கப்படவேண்டும். ரிஷபம் பிடித்துப் பாடப்படும் சலநாட்டையில் மல்லாரி வாசிக்கக் கூடாது. இறைவனுக்குக் கட்டியம் கூறியிடுவதான கருத்துடன் அமைத்துள்ளதுதான் மல்லாரி. மல்லாரியில் லயவேலைப்பாடுகள் முடிந்து, பிறகு அன்னிய ராகமாக (அதாவது ராகமாலிகை) கனபஞ்ச இராகங்கள், நாட்டைக்குப் பிறகு கௌளை, ஆரபி, வராளி, ஸ்ரீராகம் இந்த ஐந்து ராகங்களும் தேரடிவரை வாசிக்கலாம். இவ்வகைப் பஞ்சரங்களின் சிறப்புகள் கீழே தரப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| பவனி வருங்கால் | நாட்டை |
| பக்திப் பெருக்கால் | கௌளை |
| பரம்ஜோதியே | ஆரபி |
| பந்தத்தை மறக்க | வராளி |
| பரமனில்பாதி | ஸ்ரீ |

சுவாமி புறப்பட்டுக் கோபுரவாயிலில் வந்தவுடன் கோபுரதெரிசன தீபாரதனை செய்யப்படும். அது சமயம் கெட்டி மேளம் வாசிக்கப்படும்.

"கெட்டிமேளம்" அரஹாரா அரஹாரா என்று இறைஞ்சி முழங்கிடுவ தான பொருள். அங்கு முப்பத்து முக்கோடி தேவர்கள், நாற்பத்து எண்ணாயிரம்கோடி ரிஷிகள், அஷ்டவசுக்கள், கின்னரர், கிம்புருடர், சித்த வித்யாதரர், ஏகாதஸருத்ராள், துவாத சாதித்தர், ஆகியோ ரெல்லாம் வந்து அருள்பாலிப்பதாகிய மெய்யுணர வேண்டும், சகலவாத்யம் சாதுஜா சங்கமம்!

தேரடி வந்து வாஹனங்களில் எழுந்தருளிய பிறகு தலைமை (நிறம்) இராகம் வாசித்திடும் ஸம்ப்ரதாயம்.

## காலம் கண்டு இராகம் வாசித்தல்

கலைஞர்களின் அப்போதைய மனோபாவத்துக்கேற்ப தலைமை இராகம் (நிறம்) எடுத்துக்கொள்ளப்படும். தெற்குக்கோபுர வாசல் வந்தவுடன் பல்லவி-ரக்தி ஆகியவை வாசித்து லயவின்யாசங்கள் செய்யப்படும். அதன் பிறகு கிருதிகள் மற்றும். ரஸிகப்பெருமக்கள் அவாவைப்பூர்த்தி செய்வதாகியன வாசிக்கப்படும்.

வீதிவலம் வந்து கீழ வாசலில் திருஷ்டி சுத்தும்போது தேவாரம் முதலிய திருமுறைப்பாடல்கள், வாசிக்கவேண்டும். சுவாமி கருவறைக்கு வரும்போது எச்சரிக்கை பதம் ஜாவளி ஆகியவை வாசித்து நிறைவு செய்யப்படும். ஐந்தாம் திருவிழாவன்று தெருவடைச்சான் என்னும் ஓலை சப்பரக்காட்சி, பஞ்சமூர்த்திகளும் புறப்பட்டுக் கோபுர தெரிசனம்வரை வாசித்திட வேண்டும்.

## எட்டாந்திருவிழா

பிக்ஷாடனர் புவியிலுள்ளோர்களின் பாவங்களைப் போக்கிடுவ தான பொருள்படிப் பகவான் பிச்ஷாடனராக வீதிவலம் வரும் காட்சி. அன்று உடற்கூறு வாசித்திட வேண்டும். நாத நாமக்கிரியா நிறத்திலமைந்த சந்தம். நாதனுடைய நாமக்கிரியைகளைப் போற்றிப்புகழ்வதாக இந்த உடற்கூறு அமைகின்றது. மூன்றுமணி நேரத்துக்கும் அதிகமாகவே இதே உடற்கூறும் லய வின்யாசங்களும் செய்து வந்து தங்கரதத்தில் பரமேஸ்வரன் எழுந்தருளும் வரை வாசித்திட வேண்டும்.

## ஒன்பதாம் திருவிழா

காலை சுவாமி ரதத்துக்குப் புறப்படுதல், ரதயாத்ராதானம் தேர் மல்லாரி (பஞ்சாட்ச்சரம்) ஐந்து அட்ச்சரங்களைக் கொண்டதாகிய கெண்ட நடையில் வாசிக்கப்படும். தேரில் எழுந்தருளும்வரை, இதையே தான் வாசித்திடல் வேண்டும். மாறுதல் செய்யக்கூடாது. மூன்று மணி

நேரம் ஆகிவிடும். வீதியில் உத்ஸவமேளம் வாசிப்பது இல்லை. இரவு 7 மணியளவுக்குத் தேர் நிலையடி வந்த பிறகு ஆயிரங்கால் மண்டபம் வரை முத்துத் தாண்டவர் பதங்கள் வாசித்து அழைத்து வரவேண்டும்.

## பத்தாம் திருவிழா

அதிகாலை தீர்த்தமல்லாரியுடன் திருமஞ்சனம் எடுத்துவரப்பட்டு அபிஷேகம் அலங்காராதிகளுக்குப் பிறகு தளிகை மல்லாரியுடன் நிவேதனங்கள் கொண்டு வரப் பட்டுத் தீபாராதனை, பிறகு தெரிசனம் ஞானகான சித்சபா பிரசேஸக் காட்சி.

## ஐவகை மல்லாரிகள்

1. தீர்த்தமல்லாரி – திருமஞ்சனம் எடுத்துவரும்போது
2. தளிகை மல்லாரி – நிவேதனம் எடுத்துவரும்போது
3. கும்பமல்லாரி – பூர்ண கும்பம் கொடுக்கப்படும்போது
4. தேர் மல்லாரி – சுவாமி தேர்க்குப்புறப்படும்போது
5. புறப்பாட்டு மல்லாரி – சுவாமி புறப்படும்போது

## விடையாற்றி

விடையாற்றி முத்துப்பல்லக்கில் பஞ்ச மூர்த்திகளும் வீதியுலா. அன்று உஸேனி நிறம்தான் ஆலாபனைக்கு முக்கியமாக எடுத்துக்கொண்டு பல்லவி ஆகியவை. வழக்கப்படி சுவாமி கருவறைக்கு வந்து சேர்ந்த பிறகு லாலி ஊஞ்சல், மங்களம் வாசித்து நிறைவு செய்யப்படும்.

## தில்லை கோவிந்தராஜ பெருமாள் ஆலயத்தில்

நவராத்திரி ஒன்பது நாள்களும், கோயில் உள்ளே பிராகாரம் மட்டும் ஸ்ரீ தாயார் புறப்பாடு இவ்விழாவில் பெருமாள் சந்நதிக்கு நேராக வந்து நிறுத்தி, மாலை மாற்று வைபவம் நடைபெறும். சுமார் ஒரு மணி நேரம் மாலை மாற்றுப் பாடல்கள் சங்கராபரணம், சுருட்டி, ரீதிக்கௌளை, ஆனந்த பைரவி, உஸேனி, மத்யமாவதி, ஆகிய நிறங்களிலமைந்து ஸ்ரீ தியாகராஜ சுவாமிகள் உத்ஸவசம்பிரதாயப் பாடல்கள் வாசிக்கப்படும், தாயார் சந்நிதிக்கு வந்தவுடன் திருவந்திகாப்பு (வைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் பெயர்) திருஷ்டி சுத்து நடைபெறும்.

தேவாரம் மற்றும் சில நிறங்கள் வாசித்து எச்சரிக்கை வாசித்துக் கருவறை சேர்த்திடல் வேண்டும். உத்ஸவம் மறுநாள் உண்டு என்றால் மல்லாரியை ஒரு சுற்றுக் காண்பித்து நிறுத்துவது வழக்கம். பூர்த்தியன்று மங்களம் வாசித்துப் பூர்த்தி செய்திட வேண்டும்.

இந்த வழிமுறைகள் யாவும் குருகுல வாசத்தின் மூலமாகவும் அனுபவ வாயிலாகவுமே பெறமுடியும். இந்தக் கட்டுரையை நான் எழுதிட அடிப்படை எங்கள் மூதாதையர்கள் என் தகப்பனார் ஆண்டாங்கோயில் வீராசாமி பிள்ளை அவர்களும் என் தமையனார், ஆண்டாங்கோயில் ஏ. வி. கருப்பையா பிள்ளை அவர்களும் மிகவும் பிரபலமான, அடிப்படையுடையவர்களான நாதஸ்வர வித்வான்கள் அவர்கள் விட்டுச்சென்ற கையெழுத்துப் பிரதிகளாகிய இசைக்குறிப்புகளைப் பார்த்தும் எனது மைத்துனரும் மாமனாருமாகிய நாதஸ்வர வித்வான் கலைமாமணி சிதம்பரம் ஸ்ரீ ராதாகிருஷ்ண பிள்ளை அவர்களிடம் 15 வயது முதல் கூட வாசித்த அனுபவமும் மற்றும் இசை இலக்கிய இலக்கண நூல்களைப் பார்த்தும் கடவுளனுக்ரஹத் துடன் சங்கீதம் ஒரு நுண்கலை மட்டுமல்ல இசை வழிபாட்டிற்கு உறுதுணையானது என்பதினைப் பணிவுடன் ஆன்றோர்கள் தாள் பணிந்து ஸமர்ப்பிக்கிறேன்.



# தவில் புதுமை

ப. கோலப்பன்

'**தி**ல்லானா மோகனாம்பாள்' படத்தில் ஒரு வசனம் வரும். சவடால் வைத்தியாக நடிக்கும் நாகேஷைப் பார்த்து தவில்வித்தவான் முத்துராக்கு-வாக நடிக்கும் டி. எஸ். பாலையா சொல்வார்: "இந்த நரம்புப் பயலை செமத்தியாக வார் பிடிக்கணும்."

தவிலில் வார் பிடிப்பது என்பது சாதாரண காரியம் அல்ல. சரியாக சுதி சேரும் வரை வார் பிடித்து முடிப்பதற்குள் மூன்று தனி ஆவார்த்தனம் முடித்தது போல வியர்வையில் தெப்பக்கட்டையாக நனைந்து விடுவார் தவில்காரர். அப்படி நன்றாக வார் பிடித்தாலும் கச்சேரி நடக்கும் போதோ, மல்லாரி வாசிக்கும் போதோ, பாதிக் கச்சேரியிலோ வார்கள் தளர்ந்து போய் சத்தம் இல்லாமல் போய் விடும். மீண்டும் வார் பிடிப்பதற்கு மணிக்கணக்கில் ஆகும். கச்சேரி முடிவதற்குள் அதைச் செய்து முடிப்பது சாதாரண விஷயமல்ல. பெரிய வித்வான்களையே இது படாயாப் படுத்திவிடும். ஆனால் இன்றைய நிலையே வேறு. தோல் வார்களின் இடத்தை இரும்புப் பட்டைகள் எடுத்துக் கொண்டு விட்டன. கையில் ஒரு ஸ்பேனர் இருந்தால் போதும், தவிலின் நடுவில் காணப்படும் போல்ட்டுகளை அட்ஜெஸ்ட் செய்வதன் மூலம் வாத்தியத்தின் ஒலியை மாற்றியமைக்க முடியும். தவில்காரர்களின் தோளில் இருந்த பெரும்சுமையை இறக்கி வைத்த பெருமை பொறையார் வேணுகோபாலப் பிள்ளையைச் சேரும். இன்று எண்பது வயதை நெருங்கிக் கொண்டிருக்கும் வேணுகோபால் தன்னை தவில் பொறியாளர் என்று அழைத்துக் கொள்கிறார். வேணு மிக நன்றாகப் பாடுவார். பாடுகிறார். சில கீர்த்தனைகளைச் செய்திருக்கி றார். ஆளைப் பார்த்தால் இவரா என்று சொல்லத் தோன்றும். அந்த அளவுக்கு வயதான ஒல்லியான தோற்றம். ஆனால் சங்கீதத்தைப் பற்றிப்பேச ஆரம்பித்தால் கண்களில் தனி வெளிச்சம் மின்னுகிறது. தனக்கு வழங்கப்பட்ட கலைமாமணி உள்ளிட்ட விருதுகளை வாங்க மறுத்து திருப்பி அனுப்பிய அபூர்வப் பிறவி அவர்.

இன்றும் பொருளாதாரத்தில் பெரிய நிலை எதையும் அவர் எட்டி விடவில்லை. அவருடைய பிள்ளைகள் யாரும் கூட அவருடைய தொழிலுக்கு வரவில்லை. "இது நான் செய்த தவறு. இன்று நாகஸ்வரம், தவிலுக்கு மறுபடியும் ஒரு நல்ல காலம் பிறந்திருக்கிறது. என் பிள்ளைகளும் அதை நன்றாகச் செய்திருக்கலாம்" என்றார் வேணு. தவிலில் வேணு செய்த புரட்சியை அவர் வாயாலேயே கேட்போமே!

ஆடல்வல்லான் நடராஜபெருமான் குடியிருக்கும் சிதம்பரம் கோயிலில் ஆனி திருமஞ்சன உற்சவம். ஆஸ்தான நாகஸ்வர வித்வான் ராதாகிருஷ்ணபிள்ளை மல்லாரி காதை நிறைக்கிறது. மல்லாரியின் அத்தனை அம்சங்களையும் அமிர்தமாய் வர்ஷித்துக் கொண்டிருக்கிறார் பிள்ளை, அவருடைய குழுவில் தவில் வசித்தவர்கள் நானும் திருவெழுந்தூர் (திருஇந்தளூர்) ராமதாசும். திடீரென எனக்கு ஜுரம். ஆளைத் தூக்கியடிக்கும் குளிரும் சேர்ந்து கொண்டது. ஆனால் நான் தவிலைத் தோளில் மாட்டி விட்டால் வாசித்து முடிக்கும் வரை அதைக் கீழே இறக்குவதில்லை. மல்லாரி முடிந்ததும் தவிழைக் கழற்றி விட்டுக் கீழே சாய்ந்ததும் எனக்கு நினைவு தப்பி விட்டது. மறு நாள் காலையில் எழுந்த பிறகுதான் குளிர் ஜுரத்தின் காரணம் புரிந்தது. எனக்கு உலகமே ஒரு நிமிடம் இருண்டு விட்டது. எனக்கு விரை வீக்கம் ஏற்பட்டிருக்கிறது. தவிலுக்கு வார் பிடிக்க ஆனை பலம் வேண்டும். ஆனால் விரை வீக்கம் வந்து விட்ட பிறகு அந்தப் பணியைச் செய்வது என்பது இயலாத காரியம். (கிராமப் புறங்களில் விரை வீக்கத்துக்கு அறுவைச் சிகிச்சை பிரபலமாகாத காலம் அது.) ஆகவே எதிர்காலம் சூனியமாகத் தெரிந்தது எனக்கு.

கச்சேரி இல்லாத ஒருநாள் மாயவரத்துக்கு சினிமா பார்க்கச் சென்றேன். ஜி. என். பாலசுப்பிரமணியமும் எம். எஸ். சுப்புலட்சுமியும் நடித்த 'சகுந்தலை' படம் அப்போது மாதக்கணக்கில் ஓடிக்கொண் டிருக்கிறது. அந்தக் காலத்தில் பொதுமக்களைக் கவருவதற்காக டூரிங் டாக்கீஸ் வாசலில் பேண்டு வாத்தியக் கச்சேரி நடந்து கொண்டிருக்கும்.

டிரம்ஸ் வாசித்தவன் சொற்களைப் பிரமாதமாக வாசித்துக் கொண்டிருந்தான். என்னடா டிரம்ஸ் வாசிப்பவன் இப்படி வெளுத்துக் கட்டுகிறானே என்று அதைக் கேட்பதற்காக அருகில் சென்றேன். அப்போது டிரம்ஸில் காணப்பட்ட நட்டுகளும் போல்டுகளும் என் கவனத்தை ஈர்த்தன. ஒரு பொறி தட்டியது. இந்த நட்டு, போல்ட் சமாசாரத்தைத் தவிலில் பயன்படுத்திப் பார்த்தால் என்ன?

ஊர் திரும்பியதும் எப்போதும் அதே நினைப்பு. ஒரு நாள் திருப்பூரில் டெக்ஸ்டைல்ஸ் கம்பெனி முதலாளி வீட்டுக் கல்யாணத்தில் வாசிப்பதற்காகச் சென்றிருந்தேன். அங்கே டெக்ஸ்டைல் பண்டில்

களைக் காட்டுவதற்காக இரும்பினால் செய்த பட்டைகள் இருப்பதைப் பார்த்தேன். தவிலில் தோல் வாருக்குப் பதிலாக இந்த இரும்புப்பட்டை களைப் பயன்படுத்திப் பார்க்கத் தோன்றியது. கல்யாண வீட்டாரிடம் கேட்டு அந்த இரும்புப் பட்டைகளை வாங்கிக் கொண்டு திருவாரூருக் குத் திரும்பினேன்.

திருவாரூரில் 'மீனாட்சி பவுண்டரீஸ்' நடத்தி வந்தவர் என்னுடைய நண்பர். அவருடைய பட்டறைக்குச் சென்று இந்த வார்களில் துளை போட்டு, நட்டு போல்டுகளைச் சேர்த்துத் தோல்வார்களுடன் இணைத்து தவிலின் நடுப்பக்கத்தில் வைத்து முறுக்கினேன். மிகவும் மெல்லியதாக இருந்ததால் ஒரு அளவுக்கு மேல் டைட் செய்ததும் தோள் வார்கள் பிய்ந்து போயின. மனந்தளராமல் தொடர்ந்து முயற்சித்தேன். தோல் வார்களைத் தவிர்த்து விட்டு வெறும் இரும்புப் பட்டைகளை மட்டும் பயன்படுத்திப் பார்த்தேன். அதுவும் சரிபட்டு வரவில்லை. பின்னர் பட்டைகளின் கனத்தை அதிகப்படுத்தி முயற்சி செய்தேன். பட்டை உடையவில்லை. ஆனால் தவிலின் சத்தம் ஏதோ மாதிரி இருந்தது.

இதே வேலையாக உட்கார்ந்து செய்து கொண்டிருந்தேன். தவில் குத்தியின் (பலா மரத்தில் செய்யப்பட்டிருக்கும்) நட்டுகள் இணைக்கும் இடத்தைச் சரியாக அளந்து, வலந்தலையையும், தொப்பியையும் தனித்தனியே குத்தியில் இணைத்த போது நான் எதிர்பார்த்த வெற்றி கிடைத்து விட்டது. ஆனால் இந்தச் சமாசாரத்தை யாரிடமும் கூறவில்லை. அதற்கு ஒரு நேரம் வரவேண்டும் அல்லவா?

அதற்கான நேரம் சுவாமிமலையில் வந்தது. அங்கே வாசிக்கச் சென்ற போது, ஸ்பெஷல் தவில் வாசிப்பதற்காக வந்திருந்தார் நாச்சியார் கோயில் ராகவபிள்ளை. நாங்கள் இருவரும் சேர்ந்து வாசிக்கும் போது ராகவபிள்ளையின் தவில் வார்கள் தளர்ந்து போய் சத்தம் கிளம்ப வில்லை. நான் வாசிக்கும் போது என்னுடைய தவிலை உற்று உற்றுப் பார்க்கிறார் ராகவபிள்ளை. ஆனால் நட்டு போல்டுகளை முகச் சீலை வைத்து மறைத்திருப்பதால் எதுவும் வெளியே தெரியவில்லை. எப்பேர்ப்பட்ட தவில் மேதை அவர். அவருடைய தவிலில் சத்தம் வரவில்லை. நான் வெளுத்து வாங்கிக் கொண்டிருக்கிறேன்.

மறுநாள் காலையில் அவர் ஆற்றங்கரைப் பக்கமாகப் போகும் போது என்னையும் அழைத்துக் கொண்டு போனார். அதன் நோக்கம் என்னவென்று எனக்கு விளங்கியது. என்னை, "பொறையாராரே! (அப்படித் தான் அவர் என்னை அழைப்பார்) உங்க தவில் இப்படி கேட்கிறதே... என்ன சமாச்சாரம்?" என்றார். "ஜாகைக்கு வாருங்கள் சொல்கிறேன்" என்றேன். எனக்கு உள்ளூர பயம் உண்டு. மகாவித்வானான அவர். "என்னப்பா சம்பிரதாயவிரோதமா இரும்பு

நட்டு போல்டுகளைப் போட்டு வைத்திருக்கிறாயே" என்று எதிர்மறை யாகச் சொல்லி விடக்கூடாது அல்லவா. இருப்பினும் ஜாகைக்குச் சென்று முகச்சீலையை விலக்கி விட்டு ரகசியத்தை வெளிப்படுத்தினேன். அசந்து போய் விட்டார். "அடடா...! நன்றாகச் செய்திருக்கிறாயே!" என்று வாழ்த்தினார். ஆனால் என்னுடைய துரதிருஷ்டம். என்னுடைய கண்டுபிடிப்புக்காக நாச்சியார்கோவிலில் எனக்குப் பாராட்டு விழா நடந்த போது அவர் உயிருடன் இல்லை. அது எனக்குப் பெரிய வருத்தம்.

என் கண்டுபிடிப்புக்காகத் திருச்சியில் பாராட்டு விழா நடத்தினார் வலையபட்டி சுப்பிரமணியம். மற்றபடி யாரும் பெரிய அளவில் எதுவும் செய்து விடவில்லை.

சில சமயம் எனக்கே 'நாம் ஏன் இந்த மாற்றத்தைச் செய்தோம்' என்று தோன்றுகிறது. எப்பேர்பட்டவர்கள் வாசித்தாலும் தவில் என்பது பக்கவாத்தியம்தான். நாகஸ்வரத்தோடு ஒட்டி வாசிக்க வேண்டும். ஆனால் இன்று தவில் வாசிப்பது காதைப் பிளக்கிறது. நாகஸ்வர சத்தம் கேட்பதே இல்லை. நாகஸ்வரத்துக்குத் தவிலா? தவிலுக்கு நாகஸ்வரமா என்பது தெரியவில்லை. என்ன செய்வது."

வருத்தத்துடன் அங்கலாய்க்கிறார் தவில் என்ஜினியர் பொறையார் வேணுகோபாலப்பிள்ளை.

*நன்றி : தினமணிக்கதிர், 12.12.2004*



# நாட்டியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

*கலைமாமணி முனைவர்* **மா. சு. சரளா,**
*காரைக்குடி*

**உ**ள்ளத்தில் எழுகின்ற உணர்ச்சிகளை ஒழுங்குபடுத்திக் கொண்டு, கண்ணின் மூலமாக, கைவழியாக உடலின் மெய்ப்பாட்டுடன் வெளிப்படுத்துவதே ஆடற்கலையாகும். அக்கலை, உலகில் பன்னெடுங்காலமாகப் பயின்று வருவதாகும். அதன் தோற்றத்தையும், வளர்ச்சியையும் ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## நாட்டியத்தின் தோற்றம்

"பழங்கால மனிதன் தன்னுடைய உணர்வுகளை உளவியல் கோட்பாட்டின்படி மன நிறைவுகளை வெளியிட்டான். இந்தத் தொடக்கால மனிதன் தன் மனக்கிளர்ச்சியையும், ஆசையையும், உணர்ச்சியையும், அவனுடைய எண்ணத்தையும் தன் விருப்பத்திற் கேற்ப மனத்தளவில் வெளிப்படுத்த முடியவில்லை. அதனால் தன் எண்ணங்களை உடலசைவுகள் மூலம் வெளிப்படுத்துவது ஒன்றே வழியாக இருந்தது. இம்மாதிரி மனிதனுடைய உடலசைவுகள் மூலமாக உலகத்தில் முதன் முதலாக ஆடற்கலை தோன்றியது. ஆதிமனிதன் அவனுடைய அடிப்படையான உணர்ச்சி வெளிப்பாட்டின் அரிப்பினால், தன்னுடைய நன்றி உணர்வுகளை, மன நிறைவுகளை, கையொலிகள் எழுப்புவதன் மூலமாகவும், சிரிப்பதின் மூலமாகவும், உடலை விசித்திரமாக முன்னும், பின்னும் அசைப்பதின் வாயிலாகவும் வெளிப்படுத்தினான். அவனே மனித இன வரலாற்றின் முதல் நாட்டியக்காரனாவான். இக்கருத்தை ஜெர்மன் நாட்டு உளவியல், உடற்கூற்றின் வல்லுநரான வில்ஹெம் உண்ட் என்பவர் ஒப்புக் கொள்கிறார் "விலங்குகள் தம்முடைய மகிழ்ச்சியையும், அன்பையும் உள்ளத் தூண்டல்களையும், தம் எஜமானர் முன்பு உடலசைவுகளின் மூலமாக நடனமாடி வெளிப்படுத்துகின்றன. இது நாட்டியத்தைத் தவிர வேறில்லை. இது ஒவ்வொரு உயிரிலும் அமைந்துகிடக்கிறது. இதுவே

உலகம் முழுவதற்கும் உள்ள பொதுவான உளவியல் கோட்பாடாகும்'' என்று நடனத்தின் தோற்றம் குறித்து நாட்டியம் என்ற நூல் கூறுகிறது.

பிரஜோஷ் பானர்ஜி இக்கலையின் தோற்றத்தைப் பற்றி, ''நாட்டியக்கலையானது ஆற்றல் வாய்ந்த கலையாகும். இக்கலை காலந்தோறும் வளர்ந்து மாற்றம் பெற்று அமைந்து பேசும் மொழி இல்லாத ஆரம்ப காலத்தில், ஆதி மனிதனின் உணர்ச்சிகளின் வெளிப்பாடாக நடனம் இருந்தது. தெளிவில்லாத, பொருளற்ற ஒலிகளுடனே அவனுடைய செயல்கள், அவனது எண்ணத்தையும், உணர்வுகளையும் வெளிப்படுத்தின. இவ்வாறாக நடனம் பிறப்பெடுத்தது'' என்று கூறுகிறார்.

அடுத்து ரஞ்சன் என்பவர் நடனத்தின் தோற்றம் குறித்துப் பின்வருமாறு கூறுகிறார்:

''ஒவ்வொரு விதமான நிலையில் இருக்கும் பொழுது மனிதனுக்கு வெளிப்படையான சேஷ்டைகள் செய்வது இயற்கை என்று ஏற்கெனவே கண்டிருக்கிறோம். சந்தோஷம் மிகுந்ததும் மனிதன் கூச்சலிட்டான். குதித்துக் கூத்தாடினான். கைகளைக் கூத்துக்குச் சரியாகக் கொட்டினான். அவன் குதித்தது கூத்தாக மாறியது. அவன் கூச்சலிட்டது இசையாகவும், அவன் கைகளைக் கொட்டியது தாளமாகவும் மாறியது. இசை, கூத்து, தாளம் இம்மூன்றையும் மனிதன் அவனறியாமலேயே கண்டுபிடித்துவிட்டான்.''

இதனைத் தொடர்ந்து நடனத்தின் தோற்றம் குறித்து, 'இயற்கை நாட்டியம்' என்று நூலில் அ. மா. பரிமாணம்.

''மனிதன் உள்ளத்தில் தோன்றும் உணர்வுகளை ஒலிகளாலும், உடலுறுப்புகளின் அசைவுகளாலும் வெளிப்படுத்தினான். ஒலிகள் இசையோடும் அசைவுகள் தாளக்கட்டோடு கூடிய ஒழுங்கோடும் பொருந்திய அளவில் அவ்வியக்கம் உணர்ச்சியும், இன்பமும் பயக்கும் நடனமாக நாட்டியமாக அமைகிறது'' என்று கூறுகிறார்.

''மனம் என்னும் அபூர்வ இயந்திரத்தில் உண்டாகும் சிறு உணர்ச்சி உடலில் உள்ள அவ்வளவு அவயவங்களையும் ஆட்டி வைக்கும் சக்தி படைத்தது. ஒவ்வொரு ஆட்டத்திலும் ஒவ்வொரு அசைவிலும் ஒவ்வொரு பாவம் இருக்கிறது. அது இயற்கை. இதிலிருந்து பிறந்தது தான் நாட்டியம். அசைவுகளின் தொகுப்புத் தான் நாட்டியம்'' என நடனத்தின் தோற்றம் குறித்து கொத்தமங்கலம் சுப்பு கூறுகிறார்.

''மனிதன் வேளாண்மையைச் செய்வதற்காக ஆற்றங்கரைகளில் குடியேறினான். அங்குத் தனக்கு வேண்டியதை உற்பத்தி செய்யும் முறையை வளர்த்துக் கொண்டான். வேலையில்லாத ஓய்வு நேரத்தில்

தன்னைச் சுற்றியுள்ளதைப் பற்றிய ஆராயத் தொடங்கினான். சமுதாயத் தேவைகளுக்காக இயற்கையையும், சுற்றுப்புறத்தையும் பயன்படுத்திக் கொண்ட மனிதன், மறுபுறத்தில் தன் உள உணர்வுகளின் தேவைகளுக்கான ஆடல், பாடல், கூத்து போன்ற அழகிய கலைகளையும் ஆக்கிக் கொண்டான் என்று கார்த்திகா காணேசர் 'காலந்தோறும் நாட்டிக் கலை' என்ற நூலில் குறுப்பிடுகிறார்.

''இந்துக்களின் நாட்டியக்கலை, தொடக்காலத்தில், சமயத் தொடர்பாக இருந்ததாகக் கருதப்படுகிறது. வேதகாலத்தில் இன்றியமையாத சமயச் சடங்குகளுடனும், அது இருந்திருக்கிறது. தெய்வீகத் தோற்றம் அதற்கு அளிப்பதில் வியப்பில்லை. படைப்புக் கடவுளான பிரமனால் இது உண்டாக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது'' என்று ஈ கிருஷ்ணய்யர் 'பரத நாட்டியமும் தமிழ் நாட்டின் பிற நடனங்களும்' என்ற நூலில் கூறுகிறார்.

வழுவூர் இராமையா பிள்ளை, உலகத்தமிழ் மாநாடு மலரில் (1968)

''நம் நாட்டுச் சாத்திரங்கள் ஈசன் தாண்டவ நிருத்யம் ஆடி, இவ்வுலகத்தைக் காக்கின்றான் என்று கூறுகின்றன. இக்கலையை ஈசன் உமையாம்பிகைக்கும் கற்பித்து, சக்தி வடிவினளான அன்னை அழகுற ஆடி நிற்பதைக்கண்டு, களிப்புற்று இக்கலையைக் கற்பார் அனைவருக்கும் நல்ல வாழ்வு அளித்துவருகிறார் என்றும், இக்கலையைப் பற்றி கௌரிபாரதம் ஆதிபாரதம் எனும் பெயருடைய நான்கு இலட்சம் கிரந்தங்களைக் கொண்ட நூலொன்றைப் பராசக்தி எழுதியருளினாளென்றும் சாத்திரங்கள் கூறுகின்றன,'' என எழுதுகிறார்.

''பகவான் அனைத்து வேதங்களையும் மனத்தில் நினைத்துக் கொண்டு நான்கு வேதங்களிலிருந்தும் உண்டாகக்கூடிய நாட்டிய வேதத்தைச் செய்தார். நாட்டியத்தின் உரையை ரிக் வேதத்திலிருந்தும், சங்கீதத்தைச் சாம வேதத்திலிருந்தும், அபிநயங்களை யஜுர் வேதத்திலிருந்தும் ரஸ பாவங்களை அதர்வண வேதத்திலிருந்தும் எடுத்துக் கொண்டு சிருஷ்டி செய்தார். இவ்வாறு வேதங்களோடும், உபவேதங்களோடும் சம்பந்தப்பட்டதும், அனைத்துக் கருத்துக் களையும் தெரிவிக்கக் கூடியதுமான நாட்டிய வேதம் அனைத்தும் அறிந்த பிரம்ம தேவனால் சிருஷ்டிக்கப்பட்டது'' என்று நாட்டிய சாஸ்திரம் கூறுகிறது.

''பிரமன் வேதத்தினுள் ஆராய்ந்து விதிகளை உருவாக்கும் காலத்தில் இருக்குவேதத்திலிருந்து நாட்டியமும், மென்மையான யசூர் வேதத்திலிருந்து அருமையாக விளங்கும் அபிநயமும், பெருமை பெற்ற சாமவேதத்திலிருந்து கீதமும், அதர்வண வேதத்திலிருந்து ரஸமும் (இவை அவற்றில் உள்ளபடியை அறிந்து) எடுத்து ஒரு சாஸ்திரத்தை

உண்டாக்கி 32 லட்சம் கொண்ட ஒரு நூலாக அதனைச் செய்தருளி னார்... பிரமன் இயற்றிய அச்சாஸ்திரத்தை நந்திகேஸ்வரர் பார்த்து நாலாயிரம் கிரந்தத்தில் ஒரு நூலைத் தான் இயற்றியருள, அதனைப் பரத முனிவர் அறிந்து அரன் முன்னிலையில் நடிக்க இதனைப் பெண்பால் நடித்திடுவதாயின் நலமாகும்'' என்று அவர் நினைத்தனர். அதனை அறிந்து உமையவள் ஈஸ்வரனுக்கு இன்பம் உண்டாகும்படி அவர் முன் ஆடி அழகுபடுத்தினாள். இவ்வாறு உண்டான இரண்டு முறைகளையும் இவ்விருவரும் வாணாசுரன் மகளுக்கு உரைத்தனர். பிறகு சார்ங்க தேவர், அகஸ்தியர், பாட்டன், பிருங்கி, சாந்த நாதன் பிருஹஸ்பதி, சுங்கன், தத்திலன், அநுமன், கோகளன்... முதலியோர் நூல்களை ஆராய்ந்தும், தாமும் நூல்களை உண்டாக்கியும் நடத்தும் உலகோர்க்கு உரைத்திட்டார்கள்.'' என்று நந்திகேஸ்வரர் இயற்றிய 'அபிநய தர்ப்பணம்' முற்சேர்ப்பில் நாட்டியத்தின் தோற்றம் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

"நாட்டிய லக்ஷணத்தைப் பற்றி ஸம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, பாஷைகளில் எழுதப்பட்ட நூல்கள் பல உள. சங்கீத கிரந்தங்களில் நாட்டியத்தைப் பற்றிக் கூறும் தனி அத்யாயங்களும் உள. சிலப்பதிகாரத்திலும், இன்னும் பிற்காலத்தில் எழுதப்பட்ட காவியங்களிலும் நாட்டியத்தின் லக்ஷணத்தைப் பற்றியும் நாட்டிய அனுஷ்டான முறைகளைப் பற்றியும் பல விஷயங்கள் காணப்படு கின்றன. இவைகளினின்றும் தென்னிந்தியாவில் 2000 வருஷங்களுக்கு மேற்பட்டு நாட்டிய ஸம்பிரதாயம் வழுவாமல் வந்துள்ளது என்று திட்டமாக ஏற்படுகின்றது,'' என்று 'பரத சித்தாந்தம்' என்று நூலின் முன்னுரையில் பி. சாம்பமூர்த்தி குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு நாட்டியத்தின் தோற்றம் குறித்து அறிஞர்கள் கருத்துரைத்துள்ளனர் நூல்களும் அதனை விரித்துரைக்கின்றன.

பொதுவாக நாட்டியத்தின் தோற்றம் பற்றி ஆராயும் பொழுது, தொடக்க கால மனிதன் தன் எண்ணங்களையும், விருப்பு வெறுப்பு களையும் வெளியிட முதலில் சைகைகளையும் கையாண்டிருக்கலாம். அதே நேரத்தில் குரங்கினம் தாவிக் குதிப்பதையும் மயிலினம் நளினமாக ஆடுவதையும் சிம்மத்தின் நடையையும் யானையின் அசைவையும் கண்டான். மற்றும் செடி கொடிகள் காற்றில் ஆடுவதையும் புயற் காற்றின் சீற்றத்தையும் கடல் அலைகளின் கொந்தளிப்பையும் கண்ட அவன், அதன் பிரதிபலிப்புச் செய்கைகளை உற்று ஆராய்ந்தான். பின் படிப்படியாகக் கால மாறுதலினாலும், அறிவு வளர்ச்சியினாலும் உந்தப்பட்ட அவன் அச்செய்கைகளின் மூலம் தன் வாழ்விற்கு வேண்டியவைகளை அடைய ஆரம்பித்தான். மகிழ்ச்சி, துன்பம் போன்ற

வற்றைத் தன்னுடன் உறைபவர்களிடம் பகிர்ந்து கொள்ளும்போது பலவித உடல் அசைவுகளை அவன் தன்னையறியாமலேயே வெளிப்படுத்துவதை அறிந்தான். நாளடைவில் அவன் தன் உள்ளத்து உணர்வுகளை அறிவுக் கூர்மைக்கேற்ப முறைப்படுத்தி அதனை ஆடற் கலையாக உருவாக்கியிருக்கலாம்.

## நாட்டியத்தின் வளர்ச்சி

இந்தியாவின் பண்பட்ட நாட்டியத்தின் உண்மையான வரலாற்றைக் காவியங்களிலிருந்தும் புராணங்களிலிருந்தும் எழுத வேண்டும்[12] என்று கபிலா வாத்ஸ்யாயன் தன்னுடைய 'இலக்கியத்திலும் கலையிலும் பண்பட்ட இந்திய நடனம்' என்ற நூலில் கூறுவதைப் போலத் தமிழகத்தின் நாட்டியத்தை இலக்கியங்களிலிருந்தும், பிற சான்றிகளிலிருந்தும் எழுதத் தொடங்க வேண்டியிருக்கிறது.

ஆடற்கலை நன்கு போற்றி வளர்க்கப்பட்டதைப் பல தொல் பொருள் சின்னங்கள் விளக்குகின்றன. சிந்துவெளியில் கிடைத்துள்ள ஆடல் மகளுடைய சிலை நமக்குக் கிடைத்த தொன்மையான சான்றாகும். அந்த ஆடற் பெண்ணின் கைகள் அமைப்பும், அபிநயமும், கால்களின் நிலையும் அவளைக் கைதேர்ந்த ஆடல் மகள் என்பதை அறிவிக்கின்றன. இந்தச் சிலையைப் போன்ற வடிவமைப்பும், ஆடற் பாணியும் வாய்ந்த வடிவங்கள் முத்திரைகளில் அழகுறப் பொறிக்கப்பட்டுள்ளன. அவை நடனக்கலை சிந்துவெளி மக்களிடம் உயர்ந்த முறையில் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வளர்ச்சியுற்றிருந்ததைப் புலப்படுத்துகின்றன.

இந்தச் செய்தியை ஆறாவது உலகத் தமிழ் மாநாட்டு மலரில் க.த. திருநாவுக்கரசு அவர்களும், 'பரதநாட்டியம் - இந்தியப் பண்பாட்டுக்கலை' என்ற நூலில் சுனில் கோத்தாயும், 'இந்திய பண்பாட்டு நடனம்' என்ற நூலில் கபிலா வாத்ஸ்யாயனும், 'பரத நாட்டியத்தின் இசை' என்னும் நூலில் ஹிக்கின்ஸ் ஜான் போர்த்விக்கும், 'பரத நாட்டியமும் தமிழ் நாட்டின் பிற நடனங்களும்' என்ற நூலில் ஈ. கிருஷ்ணய்யரும் எடுத்துரைக்கின்றனர்.

## கி.மு. 2ஆம் நூற்றாண்டுக்கு முன்

தமிழில் இன்று கிடைத்துள்ள நூல்களில் மிகப் பழமையானதும், முதல் நூலாகவும் இருப்பது தொல்காப்பியம். அந்நூலில் நாட்டியம் நன்கு வளர்ந்த நிலை, "நாடக வழக்கு" "நாட்டியமரபு" என்ற தொடர்களினாலும் 'மெய்ப்பாட்டியல்' என்ற பகுதியினாலும் நன்கு விளங்குகிறது. மெய்ப்பாட்டியல் என ஒரு இயலே எழுதப்பட்டிருப்ப தால், அக்கால மக்கள் நாட்டியத்தை நன்கு உணர்ந்திருந்தனர்

என்பதற்கு இதுவே சான்றாக அமைகிறது. அந்நூலில் கழல் நிலை கூத்து, வெறியாடல், குரவை முதலிய நடனங்களைப் பற்றிக் கூறுவதால் அக்காலத்தில் நாட்டியம் ஆடப்பெற்று வந்திருக்கிறது என்பதை அறிய முடிகிறது.

## கி.மு. 2ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 1ஆம் நூற்றாண்டு வரை

சங்க இலக்கியங்களுள் பல இடங்களில் நாட்டியத்தைப் பற்றிய செய்திகள் காணக்கிடக்கின்றன. சிறுபாணாற்றுப் படையில் கலைக் குடும்பம் ஒன்று காட்டப்படுகிறது. அக்குடும்பத்தில் முக்கிய உறுப்பினரான விறலியின் தோற்றத்தை அடி முதல் முடி வரை விரித்துரைப்பதைக் காணமுடிகிறது. சங்ககாலப் பெண் புலவரான ஔவையார். தம்மை விறலியாகவே கூறிக்கொள்கிறார். புறநானூற்றில் புறத்திணையில் விறலியாற்றுப் படைத்துறையில் பல பாடல்கள் அமைந்துள்ளன. விறலியர் போலவும், கூத்தர் போலவும் மாறுவேடம் பூண்டு வந்து ஆடினால், பாடினால் தன் நாட்டையும் பாரி கொடுப்பான் என்று நாட்டியக் கலைஞர் குறித்து புற நானூற்றில் கபிலர் மொழிகிறார். அவர் மேலும் அகநானூற்றில் இயற்கையின் நடனத்தை அழகுற எடுத்துக்காட்டுகிறார். சங்ககாலச் சேர அரசனாகிய ஆட்டனத்தி ஆடற்கலையில் வல்லவன். அவனைப் பற்றிய பாடல்கள் குறுந்தொகை யிலும், அகநானூற்றிலும் காணக்கிடக்கின்றன. வைகையாறு செல்வது நாட்டியம் தெரியாத பெண் நடந்து செல்வதைப்போல இருக்கிறது எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது. நலங்கிள்ளி என்ற மன்னன். நாட்டியம் கற்ற உறையூர் முதுகண்ணன் சாத்தனாரைப் பாதுகாத்ததாகக் கூறப்படுகிறது. அகநானூற்றில் உள்ளிவிழாவில் இடையில் மணியைக் கட்டி ஆடினர் என்று செய்தி கூறப்படுகிறது. இவ்வாறு சங்க இலக்கியங்கள், அக்காலத்தில் நாட்டியம் நடைமுறையில் இருந்த செய்தியைப் பல இடங்களில் எடுத்துக்காட்டுகின்றன.

## கி.பி. 2ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 5ஆம் நூற்றாண்டு வரை

தமிழ்நாட்டில் நாட்டியக்கலையை விளக்கமாக எடுத்துரைக்கும் நூல்களுள் காலத்தால் முதன்மையானது சிலப்பதிகாரம். அடியார்க்கு நல்லார் அந்நூலிற்கு உரை எழுதுகையில் ஆடல்வகைகளைப் பற்றி விரித்துரைக்கும் நூல்களைக் குறிப்பிடுகிறார். 'சிகண்டியின் இசை நுணுக்கம்,' யாமளேந்திரரின் 'இந்திர காளியம்,' அறிவனாரின் 'பஞ்சமரபு' ஆதிவாயிலாரின் 'பரத சேனாபதீயம்,' மதிவாணரின் 'நாடகத்தமிழ்நூல்' ஆகியன அவர் எடுத்துக்காட்டும் நூல்களாகும். மணிமேகலையில் பேடி ஆடல் நிகழ்ந்தது குறித்தும் நடனக்

கலைஞர்கள் அனைத்துக்கலைகளிலும் தேர்ச்சி பெற்றிருந்தனர் என்ற செய்தியும் கூறப்படுகின்றன. கொங்குநாட்டில் ஈரோட்டிலிருந்து காங்கேயம் செல்லும் பாதையில் அரச்சலூர் என்ற சிற்றூர் இருக்கிறது. ஊரின் எல்லையில் நாகமலை என்ற மலை ஒன்று உள்ளது. அங்குப் பண்டைய எழுத்துக்களுள்ள இயற்கைக் குகைத்தளம் இருக்கிறது. அத்தரையில் அருகருகே பண்டைய தமிழ்க் கல்வெட்டுக்கள் மூன்று உள்ளன. முதல் கல்வெட்டில்,

| | | | | |
|---|---|---|---|---|
| த | தை | தா | தை | த |
| தை | தா | தே | தா | தை |
| தா | தே | தை | தே | தா |
| தை | தா | தே | தா | தை |
| த | தை | தா | தை | த |

என்றுள்ளது.

இரண்டாவது கல்வெட்டில்,

| | | | | |
|---|---|---|---|---|
| கை | த | தை | த | கை |
| த | தை | (த) | தை | த |
| தை | த | தை | த | தை |
| த | தை | (த) | தை | த |
| (கை | த | தை | த | கை) |

என்றுள்ளது. இவை இசைத்துறையிலும், கூத்துத்துறையிலும் பாடவல்ல எழுத்துக்களை நினைவுறுத்துகின்றன. இதனைப் பற்றிக் கல்வெட்டறிஞர். இரா. நாகசாமி கருத்துத் தெரிவித்துள்ளார்.

இவ்விரண்டிற்கும் அண்மையிலுள்ள மூன்றாம் கல்வெட்டு மிகவும் முக்கியமானது. இதைத் திரு. தி. நா. ராமச்சந்திரன், பேராசிரியர் மகாலிங்கம், திரு. ஐ. மகாதேவன், மத்திய அரசின் கல்வெட்டு ஆய்வுத் துறையினர் எனப் பலர் படித்துள்ளனர். திரு. தி. நா. ராமச்சந்திரன் அவர்கள் இதை "எழுத்தும் புணர்த்தான் மணிய வண்ணக்கன் ஆதன் சாத்தன் என்று படித்துள்ளார். . . . . . ஆதன் சாத்தன்" என்பவர் கூத்தாசிரியர். வர்ணகம் பாடவல்ல இசையாசான் என்றும், அவர் ஊர் மணியகாரராக இருந்திருக்க வேண்டும் என்றும், திரு. ராமச்சந்திரன் கருத்துத் தெரிவிக்கிறார். அரச்சலூர்க் கல்வெட்டு சிலப்பதிகாரம் எழுதப்பட்ட காலத்தில் தோன்றியது என்பது ஒரு சிறப்பாகும்.

பரத முனிவர் எழுதிய நாட்டிய சாத்திரத்தில் தென்னிந்திய நாட்டியத்தைப் பற்றியும், இசையைப் பற்றியும் குறிப்பிடுகிறார்.

"தக்ஷிணாத்யஸ் த்வத் பஹுஹாத் தந்தித்த
வாத்ய கைசிகிப்ராயஸ் சதுர மதுர வலதி தங்க பிராயாங்கா"

இவ்வடிகள், 'தென்னிந்திய மக்கள் பல விதமான நடனங்களிலும், பாடல்களிலும், இசைக்கருவிகளிலும் விசேஷ ஆர்வம் காட்டுகிறார்கள். அக்கலையில் அழகும் மதுரமும் முக்கிய அம்சங்களாக விளங்கு கின்றன. இலாவகமான கைசிகி விருத்தியும் அழகான முத்திரைகளும் மெருகுடன் பிரகாசிக்கின்றன. அப்படி லலித கலைகள் உலாவும் நாடானது வடக்கே விந்திய பர்வதத்தாலும் ஏனைய மூன்று திக்குகளில் ஸமுத்திரத்தாலும் சூழப்பட்டுள்ளது' என்று கருத்துப்பட அமைந் திருக்கின்றன.

சங்கம் மருவிய காலத்தில் பரதரின் நாட்டிய சாத்திரம் தென்னாட்டில் நாட்டியம் நன்கு ஆடப்பெற்றதை எடுத்துரைப்பதி லிருந்தும் அரச்சலூர்க் கல்வெட்டிலிருந்தும் அக்காலத்தில் நாட்டியம் வளர்ந்து வந்திருக்கிறது என்பதை அறியலாம். சங்கம் மருவிய அக்காலத்திலேயே தென்னாட்டில் வாழ்ந்த பரதமுனிவர் இந்நாட்டியக் கலையை வடமொழியில் எழுதினார் என்று ஓர் கருத்தும் அறிஞர்களிடையே பேசப்படுகிறது.

## கி.பி. 6ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 9ஆம் நூற்றாண்டு வரை

பல்லவர்கள் ஆட்சிக் காலத்தில் புதுக்கோட்டைக்கு அண்மையில் உள்ள சித்தன்னவாசலில் குகைக் கோயில் அமைக்கப்பட்டுள்ளது. அக்குகைக் கோயிலில் உள்ள தூண்களில் பெண்கள் சிலர் நடனமாடுவதைக் காட்டியிருக்கிறார்கள். மாமல்லபுரத்தில் நடனமாடும் நிலையில் பல சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. காஞ்சியில் உள்ள கைலாயநாதர் ஆலயத்தில் பல அழகிய நடனச் சிற்பங்கள் காணப்படுகின்றன. அக்காலத்தில் வாழ்ந்த நாயன்மார்கள் தங்களுடைய தேவாரத்திலும் ஆழ்வார்கள் தங்களுடைய திவ்யப் பிரபந்தத்திலும் நடன மாதர்களைப் பற்றியும், நடன நிகழ்ச்சிகளைப் பற்றியும், குறித்துள்ளார்கள்.

திவ்யப் பிரபந்தப் பாடல்கள் அனைத்தையும் அரையர் என்போர் பாடி, அபிநயம் புரிந்து ஆடுவர். இவை நாட்டியத்தின் மூலம் இறை வழிபாடு நடந்தமையைக் காட்டும். இந்நூலின் பல பாடல்களும் அகத்துறைப் பாடல்களாக உள்ளன. இவற்றை ஆடல் மகளிர் கோயில்களில் பாடி ஆடும்போதுதான் இவற்றின் பொருள் பொருத்தமாக அமைகிறது.

சீவக சிந்தாமணியில் ஆடல் குறித்துப் பல செய்திகள் பேசப்படுகின்றன. அதில் அனங்கமாவீணை என்ற பெண் நாட்டியமாடியது எடுத்துரைக்கப்படுகிறது.

## கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரை

சோழருடைய ஆட்சிக்காலத்தில் இசையிலும், கூத்திலும் வல்லுநரான பல பெண்கள் கோயிற் பணிகளில் ஈடுபட்டிருந்தனர். கல்வெட்டுகளில் இவர்கள் தேவரடியார்கள் என அழைக்கப் பட்டுள்ளனர். அவர்களுக்குத் தலைக்கோலிகள், பதியிலார், தளிச்சேரிப் பெண்டுகள், கோயிற்பிணாக்கள் என்ற பெயர்களும் வழங்கிவந்தன. முதலாம் இராசராசன் நானூறு ஆடற்பெண்டிர்களைத் தஞ்சைப் பெருவுடையார் கோயில் திருத்தொண்டுக்காக அமர்த்தினான் என்றும், அவர்கள் அனைவருக்கும் தனித்தனி வீதிகள் வகுத்து, அவற்றில் வீடுகள் அமைத்துத் தந்தான் என்றும் தஞ்சாவூர்க் கோயில் கல்வெட்டு கூறுகிறது. இவர்களைப் போலவே நட்டுவனார்களுக்கும் நிலங்கள் வழங்கப்பட்டன. ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பா சில கோயில்களில் திருவிழாக் காலங்களில் பாடப்பட்டு இப்பெண்களால் நாடகங்களாக நடிக்கப்பெற்றன. திருவொற்றியூரில் திருவாதிரை விழாவின் போது திருவெம்பாவை ஓதப்பட்டு வந்தது. இரு பத்திரண்டு பதியிலார் நடனம் ஆடினர். ஒருவர் நட்டுவாங்கம் செய்தார். பதினாறு தேவரடியார்கள் தேவாரப் பதிகங்களை அகமார்க்க முறையில் பாடினார்கள். இவர்கள் பல வகையான கூத்துக்கள் நிகழ்த்தி வந்தனர். கூத்துக்கள் நடைபெறுவதற்குக் கோயில்களில் நாடக சாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. கூத்தாடி முதிர்ந்த பெண்களுக்கும், பின்பாட்டுப் பாடிய பெண்களுக்கும், நாட்டியத்துக்குப் பதம் பாடிய பெண்களுக்கும் தோரிய மடந்தையர் என்று பெயர்.

ஆடல் மகளிர் நக்கன் என்ற சிறப்புப் பெயருடன் குறிக்கப்பட்டிருக்கின்றனர். முதலாம் இராசராசனின் பஞ்சநதீஸ்வரர் கோயில் கல்வெட்டு ஒன்று, 'நக்கன் வெண்ணாவல்' என்ற தில்லை யழகு தலைக்கோலியை அறிமுகப்படுத்துகிறது. திருவையாற்றில் உள்ள பஞ்சநதீஸ்வரர் கல்வெட்டு ஒன்று இக்கோயிலில், 'ஐயாறன் கலியுகச் சுந்தரத் தலைக்கோலி' என்று ஓர் ஆடல்மகள் இருந்ததையும், அவ்வம்மை ஆடல்பாடல்களில் வல்லவரான முப்பது மங்கையருக்குத் தலைவியாக இருந்து ஆடல் நிகழ்ச்சிகளை நடத்தியதையும் எடுத்துரைக்கிறது.

உத்தரமேரூர் 'சுந்தரவரதப் பெருமாள்' கோயிலில் உள்ள மூன்றாம் குலோத்துங்கனின் முப்பத்தெட்டாம் ஆட்சி ஆண்டுக்

கல்வெட்டும் மூன்றாம் இராசராசனின் மூன்றாம் ஆண்டுக் கல்வெட்டும் 'ஆயிரத்து இருநூற்றுவன் மாணிக்கம்' என்றும் ஆடல் மங்கை கோயிலுக்குச் செய்த திருப்பணிகளைப் போற்றி இந்நங்கைக்கும், இவரது வழியினருக்கும் நாள்தோறும் இறைவனுக்கிடும் படையலில் ஒரு குருணி சோறு வழங்கவும், தேரோட்டத்தின் போது சில சலுகைகள் காட்டவும், கோயிலார் அனுமதியுடன் ஊரவை எடுத்த முடிவைத் தெரிவிக்கின்றன.

மூன்றாம் இராசராசன், கோயிலில் உள்ள இராசராசன் திருமண்டபத்தில் அமர்ந்து, 'உறவாக்கின தலைக்கோலி' என்னும் ஆடல் மகள் பாடிய அகமார்க்கம் என்னும் பாடல் வகையைக் கேட்டு மகிழ்ந்தான். இதைத் திருவொற்றியூர் 'ஆதிபுரீசுவரர்' திருக்கோயிலில் உள்ள மூன்றாம் இராசராசனின் பத்தொன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு கூறுகிறது.

திருக்கடவூர் திருக்கோயிலில், 'கலா விநோத நிருத்தப் பேரையன்' என்னும் படத்தை உடைய 'பராசிவன் பொன்னன்' தலைக்கோல் ஆசானாக இருந்தார். அவருடைய ஆடற்கலையின் சேவையைப் பாராட்டி அவருக்கு நட்டுவாங்கத்திற்காக நிலம் வழங்கப்பட்டது.

சோழர் காலத்தில் காடவச் சிற்றரசர்களான முதலாம் கோப் பெருஞ்சிங்கனும் அவனது புதல்வனான இரண்டாம் கோப்பெருஞ் சிங்கனும் ஆடற்கலையில் மிகுந்த புலமையும் ஈடுபாடும் கொண்டிருந்தனர். 'பரதம் வல்லான்,' 'பரதம் வல்லபெருமான்' முதலிய விருதுப் பெயர்களைப் பெற்றிருந்தனர். அவர்கள் ஆட்சியின் கீழிருந்த தில்லைக்கோயிலின் தெற்கு, கிழக்குக் கோபுரங்களைத் திருப்பணி செய்தபொழுது அவற்றின் உட்புற வாசல்களில் பரத நாட்டிக் கரணங்களைப் பெயருடன் செதுக்கி வைத்தனர். மேலும் தில்லைக் கோயிலில் ஓர் நாட்டியசாலை இருந்ததை அவர்கள் கல்வெட்டுக் களிலிருந்து அறிகிறோம். கம்பராமாயணத்தில் ஆடல் இலக்கணம் குறித்தும், அரங்கு குறித்தும்,

"கைவழி நயனம் செல்ல, கண்வழி மனமும் செல்ல
ஐயநுண் இடையர் ஆடும் ஆடக அரங்கு காணீர்"

என்ற அடிகள் பேசுகின்றன.

ஜெயங்கொண்டார் எழுதிய கலிங்கத்துப்பரணியில் 'களம் பாடியது' என்ற பகுதியில் பேய்கள் மகிழ்ச்சியாகக் கூத்தாடியதைப் பற்றி விரித்துரைக்கப் படுகிறது.

இவ்வாறு சோழர்காலத்தில் நாட்டியம் சிறப்புற்றுத் தழைத்தோங்கி இருந்த நிலையைக் கல்வெட்டுக்களும், தமிழ் இலக்கியங்களும் தெரிவிக்கின்றன.

## கி.பி. 13ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 18ஆம் நூற்றாண்டு வரை

விஜய நகர நாயக்கர் காலத்தில் குமார கம்பணன் என்ற அரசகுமாரன் மதுரையை இசுலாமியர் ஆட்சியிலிருந்து கைப்பற்றிய பின் அவ்வூர்க் கோயிலில் பல தேவரடியார்களை மீண்டும் பணிக்கமர்த்தியதை அக்காலக் கல்வெட்டுகளிலிருந்து அறிகிறோம். பிற்காலப் பாண்டியர்கள் காலத்தில் நாட்டியவளர்ச்சி குறித்து உறுதியான தகவல்கள் தெரியவில்லை.

கோவை, கலம்பகம், பரணி, உலா, தூது, பிள்ளைத்தமிழ், ஊசல், சிந்து, நொண்டி ஆகிய இலக்கிய வகைகள் இந்த நூற்றாண்டுகளுக்கு இடையே தோன்றின. இவ்விலக்கிய வகைகள் நாட்டியமாக ஆட எழுதப்பட்டவை எனலாம். 16ஆம் நூற்றாண்டில் தஞ்சையை ஆண்டுவந்த அச்சுதப்ப நாயக்க மன்னர் நாட்டியத்தில் திறமையுடைய நூற்றுக்கணக்கான அந்தணர் குடும்பங்களை மெலட்டூர் முதலிய கிராமங்களில் குடியேறச் செய்து நாடகக்கலைக்கு ஆதரவு அளித்தார்.

குறவஞ்சி என்பது நாட்டியம் ஆடுவதற்காகவே எழுதப்பட்ட நூலாகும். இக்குறவஞ்சி ஆண்டுதோறும் குற்றாலநாதர் ஆலயத்தில் ஆடப்பட்டு வந்திருக்கிறது. அதுபோலவே சரபேந்திரபூபாலக் குறவஞ்சியும் தஞ்சைப் பெரியகோயிலில் ஆண்டுதோறும் ஆடப்பெற்று வந்திருக்கிறது.

பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஓலைச்சுவடி ஒன்றில் 'பரதவித நாட்டியம் பயில்கின்ற பல மாதர்' என்ற சொற்றொடர் வருகிறது என்று இரா. நா. சாமி 'வரலாற்றில் பரதநாட்டியம்' என்ற நூலில் குறிப்பிடுகிறார். மன்னர் சரபோஜி தம்முடைய மராத்திய மொழியில் 'கொரவாசே சஹித்யசே ஜின்னாஸ்' என்ற நாட்டியத் தொகுப்பை எழுதியுள்ளார்.

தாயும் மகளுமான பெண்மக்கள் இருவரைப் பொன்னமராவதிக் கோயிலில் தேவர் அடியார்களாக அமர்த்தி அவர்க்கு வீடுகளும், நிலங்களும் வழங்கினார் என்று கல்வெட்டுச் செய்தி ஒன்று கூறுகிறது. திருமெய்யம் வட்டத்தில் இராங்கியம் என்ற ஊரில் உமையம்மை என்ற பெண்ணொருத்தியைத் தேவர் அடியாராக ஏற்றுக்கொண்டு நிலங்களையும், வீட்டையும் வழங்கினர்.[43] தேவர் அடியார்க்கு

சிவன்கோயில்களில் பாதங்களில் சூலக்குறி சூடுபோடும் வழக்கம் இருந்தது.

16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நாட்டியத்தைப் பற்றி விளக்கும் பரதசித்தாந்தம் என்ற நூல் இயற்றப்பட்டிருக்கிறது. இவ்வாறு இந்நூற்றாண்டுகளில் நாட்டியக் கலையானது நசிந்து போகாமல் அதற்காக எழுதப்பட்ட இலக்கியங்களால் வளர்ந்து வந்திருக்கிறது. கோயில் கல்வெட்டுகள் நடனம் காப்பாற்றப்பட்டு வளர்ந்து வந்ததை தெரிவிக்கின்றன.

## கி.பி. 19ஆம் நூற்றாண்டு

இந்நூற்றாண்டில், நாட்டியமானது, தாஸி ஆட்டம், சின்ன மேளம், சதிர் என்ற பெயர்களாலே வழங்கி ஆடப்பட்டு வந்திருக்கின்றது. பி. ஆர். இராஜமய்யர் எழுதிய 'கமலாம்பாள் சரித்திரத்தில்' நாட்டியம் சதிர் என்றே குறிப்பிடப்படுகிறது. சுப்பிரமணிய பாரதியாரும் இதைக் கூத்து என்றே கூறுகிறார். இக்கலையைக் குறுநில மன்னர்களும், பாளையத் தலைவர்களும், ஜமீன்தார்களும் வளர்த்து வந்திருக் கின்றன.

## கி.பி. 20ஆம் நூற்றாண்டு

இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் நாட்டியமானது சதிர் என்றே அழைக்கப்பட்டு வந்திருக்கிறது. அச்சதிரைத் திருச்செந்தூர் சண்முக வடிவு, கோயம்புத்தூர் தாயி, திருவிடைமருதூர் பவானி, விறாலி மலை வசந்தா, மோகனாம்பாள், தஞ்சாவூர் கமலாம்பாள் முதலியோர் ஆடி வளர்த்து வந்திருக்கின்றனர். இவர்களுள் கோயம்புத்தூர் தாயி, திருவிடைமருதூர் பவானி ஆகியோரின் ஆடற்குரிய பாடல்கள் இசைத் தட்டில் பதிவு செய்யப்பட்டிருக்கின்றன.

சென்னையில் 1929ஆம் ஆண்டும், 1947ஆம் ஆண்டும் நிறைவேற்றப்பட்ட தேவதாசி ஒழிப்புச் சட்டங்களின்படி கோயில்களில் தேவதாசிகள் நாட்டியமாடும் முறை அகற்றப்பட்டதிலிருந்து ஆடற் கலைக்கு ஆதரவு குறையலாயிற்று. அதன் பிறகு சமூகச் சீர்த்திருத்த அடிப்படையில் இதற்கு தகுந்த இடத்தை அளிக்கும் நல்லெண்ணத் தோடு இக்கலை 'பரத நாட்டியம்' என்ற சொல்லால் வழங்கப்பட்டு வருகிறது.

ஈ. கிருஷ்ணய்யர் ருக்மணி அருண்டேல், வே. இராகவன் முதலியோரின் பெருமுயற்சியின் காரணமாகப் பரத நாட்டியம் புது மெருகு பெற்று வளரலாயிற்று. மைலாப்பூர் கௌரி அம்மாள், பாலசரஸ்வதி, பந்தநல்லூர் ஜெயலெட்சுமி, மீனாட்சிசுந்தரம் பிள்ளை,

கிட்டப்பா பிள்ளை போன்றோர்களும் இக்கலை வளர அருந் தொண்டாற்றினர். தொடர்ந்து வழுவூர் இராமையா பிள்ளை, தண்டபாணி பிள்ளை, வைத்தீஸ்வரன் கோயில் முத்துசுவாமி பிள்ளை, திருக்கோகர்ணம் கல்யாணசுந்தரம் பிள்ளை, இராஜரத்தினம் பிள்ளை, பந்தநல்லூர் சொக்கலிங்கம் பிள்ளை, குமாரி கமலா, வைஜயந்திமாலா ஆகியோரும் இக்கலைக்கு மெருகேற்றினர்.

இக்கலையைச் சாம்ராஜ் என்பவர் 'வழுவூர் நாட்டியப்பள்ளி' வாயிலாகவும், சுதாராணி ரகுபதி என்பவர் 'பரதாலயா' என்ற நாட்டியப் பள்ளி மூலமாகவும், தனஞ்செயன் – சாந்தா தம்பதியினர் 'பரதாஞ்சலி' என்னும் ஆடற்பள்ளி வாயிலாகவும், கே. ஜே. சரஸா 'சரஸாலயா' என்ற நாட்டியப்பள்ளி மூலமாகவும்,· பத்மா சுப்பிரமணியன் 'நிருத்யோதயா' என்னும் நடனப்பள்ளி வாயிலாகவும், சித்ரா விஸ்வேஸ்வரன் 'சிதம்பரம்' என்ற நாட்டியப்பள்ளி மூலமாகவும் வளர்த்து வருகின்றனர்.

இந்த நூற்றாண்டில் நாட்டியத்தைப் பற்றி விளக்கும் அபிநயதர்ப்பணம், நாட்டிய சாஸ்திர சங்கிரகம் ஆகிய நூல்கள் வடமொழியிலிருந்து தமிழ் மொழியில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. பரதசேனாபதீபம், மகாபரத சூடாமணி முதலிய தமிழ் நூல்கள் இக் காலத்தில் அச்சேறியிருக்கின்றன. நாட்டியத்திற்கென்று கருத்தரங்குகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. மேலும் தமிழக அரசின் இசைக் கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் ஆகியவையும் இக்கலையை இன்றும் வளர்ந்துவருகின்றன.

## தொகுப்புரை

மனிதனின் உடலசைவுகள் மூலமாக உலகத்தில் முதலில் நாட்டியக் கலை தோன்றியதாகக் கருதப்படுகிறது. ஆதி மனிதனின் உணர்ச்சிகளின் வெளிப்பாடாக நடனம் இருப்பதாக எண்ணப்படுகிறது. மனிதன் இயற்கையின் செயல்களைக் கண்டறிந்து அவற்றின் அடிப்படையாக நாட்டியத்தைப் படைத்திருக்கக் கூடும்.

இருக்கு வேதத்திலிருந்து நாட்டியத்தின் உரையையும், யசூர் வேதத்திலிருந்து அபிநயத்தையும், சாம வேதத்திலிருந்து இசையையும், அதர்வண வேதத்திலிருந்து மெய்ப்பாட்டையும் எடுத்துப் பிரமன் நாட்டியத்தைப் படைத்ததாக இந்துசமயம் கருதுகிறது.

இலக்கியத்திலிருந்தும், புராணத்திலிருந்தும், பிற சான்றுகளி லிருந்தும் நாட்டியத்தின் வரலாற்றை எழுதத் தொடங்க வேண்டியிருக்கி றது. ஆடற்கலை போற்றி வளர்க்கப்பட்டதைத் தொல்பொருள் சின்னங்கள் விளக்குகின்றன. தொல்காப்பியக் காலத்தில் நாட்டியம்

ஆடப்பட்டது குறித்து அறிய முடிகிறது. கி. மு. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. முதல் நூற்றாண்டு வரை உள்ள சங்க - இலக்கியங்கள் நாட்டியம் இருந்ததை எடுத்துக்காட்டுகின்றன. கி. பி. இரண்டாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டுக்குள் இடைப்பட்ட காலத்தில் எழுந்த சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்கள் வாயிலாகவும், அரச்சலூர்க் கல்வெட்டுக்கள் மூலமாகவும் நாட்டியம் நன்கு வளர்ந்திருந்ததைக் காணமுடிகிறது.

தென்னிந்திய மக்கள் நாட்டியத்தில் தேர்ச்சி பெற்றிருந்ததாகப் பரதரின் பரதநாட்டிய சாஸ்திரம் கூறுகிறது. கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் சித்தன்ன வாசலில் உள்ள நடன மாதர் ஓவியங்களும், பல்லவர் காலச் சிற்பங் களும் ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடல்களும், நாட்டியத்தைப் பற்றிப் பார்க்க உதவுகின்றன. கி.பி. பத்து முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்குள் இடைப்பட்ட காலத்தில் ஆண்ட சோழருடைய ஆட்சிக் காலத்தில் நாட்டியத்திலும், இசையிலும் வல்ல பல பெண்கள் கோயில் பணிகளில் அமர்த்தப்பட்டிருந்தனர். அக்காலக் கல்வெட்டுக் களில் இவர்கள் தேவரடியார்கள் எனக் குறிக்கப் பட்டுள்ளனர். இவர்களுக்குத் தானங்கள் வழங்கப்பட்டன. கோயில்களில் நாடக சாலைகள் இருந்தன. இக்காலத்தில் எழுந்த கம்பராமாயணம், கலிங்கத்துப் பரணி முதலிய நூல்களில் ஆடல் பற்றிப் பேசப்படுகிறது. தில்லைக் கோயிலில் பரத நாட்டியக் கரணங்கள் பெயருடன் செதுக்கப்பட்டுள்ளன. கி.பி. பதின்மூன்று முதல் கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டு வரையிலான காலத்தில் சிற்றிலக்கியங்கள் பல தோன்றி நாட்டியத்தை வளர்த்ததாகத் தெரிகிறது. சரபோஜி மன்னர் அக் காலத்தில் நாட்டியத் தொகுப்பை எழுதியிருக்கிறார். அக்காலத்தில் உள்ள கல்வெட்டுக்கள், இலக்கியங்கள் நடனம் காப்பாற்றப்பட்டு வந்ததைக் கூறுகின்றன.

நாட்டியமானது தாசி ஆட்டம், சின்ன மேளம், சதிர் போன்ற பெயர்களால் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வழங்கி ஆடப்பட்டு வந்திருக்கிறது. இக்கலையைக் கோயில்களும், பாளையத் தலைவர்களும், ஜமீன்தார்களும் வளர்த்து வந்திருக்கின்றனர்.

நாட்டியக்கலை இடைக்காலத்தில் ஒரு சமயம் சார்ந்த கலையாகவும், ஆடல் வல்லானாகிய சிவனுக்கு அர்ப்பணிக்கப்பட்ட ஒரு கலையாகவும் இருந்தமையால்தான் கோயிலில் ஆடிய நாட்டிய மகளரின் பாதங்களில் சூலக்குறியிட்டனர். இதன் கருத்து என்ன? இச்சூலக்குறியைப் பாதத்தில் இட்டதிற்கான காரணம் என்ன? நாட்டியத் தில் தாளமே முதன்மையானது. இத்தாளத்தை வெளிப் படுத்தும் உறுப்பு

பாதம். இப்பாதங்கள் சிவனுக்காகவே அர்ப்பணிக்கப் பட்டவை என்பதை வெளிப்படுத்துவதற்காகவே பாதங்களில் சிவனின் சூலக் குறியை இட்டனர் என்று கருத வேண்டியுள்ளது. வைணவர்கள் தோள்களில் சங்குசக்ர முத்திரையிட்டுக் கொள்வதை இதனோடு ஒப்பிட்டு நோக்கினால் இச்சூலக்குறியீடு ஒரு புனிதமான குறியீடு என்பது நமக்குத் தெரிகிறது.

இச்சூலக்குறியீடு வேறொரு கருத்தையும் விளக்கி நிற்கின்றது. சூலக்குறி என்பது ஒரு நீண்ட தண்டும் தன் தலையில் மூன்று பிளவுமாக அமைந்திருப்பது என்பதை அறிவோம். அடிப்படையில் ஒன்றானது, மூன்றாகப் பிளவுபட்டு நிற்கின்றது என்றும், மூன்றாகவும் பிளவுபட்டு நின்றாலும் அடிப்படையில் அது ஒன்றானது என்றும் இதற்கு நாம் பொருள் கொள்ளலாம்.

பரத நாட்டியம் என்பது பாவம், இராகம், தாளம் (பரதம்) என்ற மூன்றின் இணைவே என்பர் நாட்டிய ஆய்வாளர்கள். பாவம், இராகம், தாளம் என்பன முத்தலைச் சூலம் போல விளங்கினாலும் உண்மையில் அவை நாட்டியம் என்ற அடிப்படைத் தண்டின் மூன்று பிரிவுகளே என்ற பொருளைத் தந்து நிற்றலின் இச்சூலக்குறியீடு இம்மகளிர் நாட்டியக் கலைக்கென்றே அர்ப்பணிக்கப்பட்டவர்கள் என்பதை உலகுக்குத் தெரிவிக்க அம்மகளிர் தம் பாதங்களில் இடப்பட்டது என ஒரு கருத்தும் கொள்ளுமாறு அமைந்துள்ளது. எனினும் தேவரடியார் (கடவுளின் அடிமை), தாசி (தாசன் என்பதன் பெண் பால்; அடிமை என்று பொருள்படுவது) என்று சொல் வழக்குகளும் கோயிலைச் சார்ந்து அம்மகளிர்க்கு வாழ்விடம் கொடுக்கப்பட்டமையும், கோயிலின் சார்பில் மானியம் வழங்கப்பட்டமையும், அம்மகளிர் நாட்டியக் கலைக்காக அர்ப்பணிக்கப்பட்டவர்கள் என்பதைவிட இறைவன் திருமுன் ஆட அர்ப்பணிக்கப்பட்டவர்கள் என்பதே சாலவும் பொருந்துவதாக உள்ளது.

இந்நாட்டிய மரபு நெடுங்கால வரலாற்றையுடையது. இக்கால நெடுமையில் பல ஏற்றங்களையும், பல இறக்கங்களையும் சந்தித் துள்ளது. மக்களின் வாழ்க்கையை மையமாகக் கொண்ட இந்நாட்டியக் கலை ஒரு சமயக்கலையாக உருமாற்றம் பெற்றதுமுண்டும் என்றாலும் அது தன்னுடைய வரலாற்றுத் தொடர்ச்சியை இழந்து விடவில்லை என்பதைச் செய்யாற்றுக் கோயிலில் இன்றும் நிகழும் ஒரு நிகழ்ச்சி எடுத்துக்காட்டிக் கொண்டிருக்கிறது. அந்நிகழ்ச்சி யாது? செய்யாறு சிவன் கோயிலில் பூசைக் காலங்களில் இன்றும் அபிநயித்து வழிபாடு செய்யப்படுகிறது என்ற செய்தியே அது. நாட்டிய வரலாறு தேய்ந்தாலும் மாய்ந்தாலும் முற்றிலும் தன் தொடர்பை இழந்துவிடவில்லை என்பதை இந்நிகழ்ச்சி எடுத்துக்காட்டுகிறது.

ஆடற்கலையின் தோற்றம் உழைக்கும் மக்களின் முற்றங்களிலே தான் நிகழ்ந்தது. காலம் செல்லச் செல்ல அக்கலை மென்மையும், நுண்மையும் அமையப் பெற்று நுண்கலை என்ற தகுதியைப் பெற்றது. பின்னர் அது வேத்தியலாகவும், பொதுவியலாகவும் வீறு கொண்டு எழுந்து மன்னர்கள் அவையையும், மக்கள் மன்றங்களையும் அலங்கரித்தது. அகத்தையும், புறத்தையும் மையப்பொருளாகக் கொண்டு விளங்கியது.

இக்கலை சமய மறுமலர்ச்சிக் காலத்திலும் அதன் பின்னரும் கோயிலின் நெடிய சுவர்களுக்குள் கொண்டு செல்லப்பட்டுச் சமயவண்ணம் பூசப்பட்டது. அதுமட்டுமல்லாமல் ஒவ்வொரு சமயத்தின் வடிவத்தையும் அது தாங்கித் தீரவேண்டிய நெருக்கடிக்கு ஆளாகியது. இதன் விளைவு என்ன ஆயிற்று? சைவ, வைணவ இந்து மார்க்கங்களின் கூட்டுக் கலவையாக இக்கலையின் மையப்பொருள் உருக்கொண்டது. வரலாற்றில் ஏற்பட்ட சில விளைவுகளாலும், சாதிப் பிளவுகளின் வீரிய வளர்ச்சியினாலும் ஒரு காலக் கட்டத்தில் இக்கலை ஒரு சாதியின் தலையில் சுமத்தப்பட்டது. எல்லோரும் கூடி ஆடிய கலையாகப் பிறப்பெடுத்து நடனம் ஒரு சாதியினரே ஆட வேண்டிய கலையாகக் குறுக்கப்பட்டுவிட்டது. இதைக் காலத்தின் அவலம் என்றுதான் சொல்ல வேண்டும். இதனால் தமிழர்களில் ஒரு பகுதியினராக உள்ள இந்துக்களின் கலையே இது என்று கருத்தும் உருவாகியது. கிறித்துவ, இஸ்லாமிய மக்கள் இதனைப் புறக்கணிக்கும் நிலையும் மலர்ந்தது.

இத்தகைய நெருக்கடியிலிருந்து ஆடற்கலையை மீட்டெடுத்து இந்நாட்டின் தேசியக்கலை இது என்ற தகுதியை வழங்கியது தமிழ்நாட்டு அரசின் தேவதாசி ஒழிப்புச் சட்டம்தான். இந்து சமயக் கோயில்களிலிருந்து இக்கலை வெளியேறியதும் உயர்குடிப் பெண்களும் இக்கலையைக் கற்று ஆட முன்வந்தனர். கிறித்துவ, இஸ்லாமியப் பெண்களும், இக்கலையைப் பற்றிக் கொள்ள முன் வந்துள்ளனர். சிறந்த கிறித்தவ அமைப்பாகிய கலைக்காவிரி ஆடற்கலையை வளர்க்கக் கணிசமான பங்களிப்பைச் செய்து வருகிறது. பெரும் அளவில் இல்லை என்றாலும் இஸ்லாமியச் சிறுமியர் இன்று நடனம் கற்றுக் கொள்கின்றனர். இவையெல்லாம் ஆடற்கலை ஒரு பிரிவினர்க்குரியது என்ற எல்லைகளை உடைத்துக் கொண்டு அனைவருக்கும் உரிய தேசியக்கலை என்ற வீறார்ந்த நிலை நோக்கி விரிவுற்று வருவதை இன்று நாம் கண்டு மகிழவும் போற்றவும் முடிகிறது.

*நன்றி : ஆசிரியருக்கு*

# கலைச்சொல் விளக்கம்

அறிஞர் ஆ. ஆனந்தராசன்

## அசத்து

சைவ சித்தாந்தத்தில் அசத்து என்பதற்கு நிலையில்லாதது, மாறுதல் அடைவது என்பது பொருள். இப்பொருள் தரும் தமிழ்ச் சொல் பொய் என்பது.

முப்பொருள்களுள் பதியாகிய கடவுட் பொருள் என்றும் மாறுதல் அடையாத செம்பொருள் ஆகும். பசுவாகிய உயிர் பாசத்தோடு கூடி அறிவு மனத்தும் தோன்றியும் மாறுதல் அடைவதாய், அசத்து என்று சொல்லும்படியாக இருப்பினும், முத்திநிலையில் பதியைச் சேர்ந்த பின் அத்தகைய மாற்றம் இன்றி ஒரு நிலையாய் நிற்றலால் உயிரை அசத்து எனக் கூறுதல் இல்லை. இனிப் பாசப் பொருள்களே மாறுதல் அடைவனவாய் நிற்றலின் அவையே அசத்து எனப்படுகின்றன. அசத்து அறிவற்ற சடமாயும் இருக்கும். இம்முறையில் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றும் அசத்து ஆகும். மாயையின் காரியமாகிய உலகமும் உலகப் பொருள்களும் அசத்து ஆதல் வெளிப்படை.

## அசுத்த மாயை

பார்க்க: மாயை

## அத்துவா

மாயையின் காரியங்கள் ஆறு பகுதியாய் நின்று உயிர்களோடு தொடர்பு கொள்கின்றன. அவை மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்பன. மந்திரம் முதலிய மூன்றும் சொல்லுலகம் (பார்க்க: வாக்கு) எனப்படும். புவனம், தத்துவம், கலை என்னும் மூன்றும் பொருளுலகம் எனப்படும். சொல்லும் பொருளுமாகிய இவற்றாலேயே நமக்கு வினைகள் உண்டாகின்றன. இந்த ஆறின் இயல்பையும் நன்கு உணர்ந்து, இவை நமக்கு வேறானவை எனக் கண்டு தெளிந்து, முறையே ஒவ்வொன்றாக நீக்கிச் சென்றால் இறைவனை அடையலாம்.

அத்துவா என்னும் சொல்லுக்குப் படிவழி என்பது பொருள். இந்த ஆறும் இறைவனை அடைதற்குப் படிவழி போன்று இருத்தலால் அத்துவாக்கள் எனப்படுகின்றன.

## அத்துவிதம் / அத்வைதம்

சைவ சித்தாந்தத்தில் அத்துவிதம் என்பது இறைவனுக்கும் உலகுக்கும் உள்ள தொடர்பை, உறவு நிலையைக் குறிப்பதாகும். இங்கு உலகு என்பது அறிவுள்ள உயிர்களையும் அறிவற்ற ஏனைப் பொருள்களையும் குறிக்கும்.

இறைவன் உலகத்தோடு கலந்து, தான் வேறு காணப்படாமல் உலகமாகவே இருக்கிறான். உயிர் எவ்வாறு உடலிற் கலந்து வேறாய் நில்லாமல் உடலே தான் என்னும்படி நிற்கிறதோ அவ்வாறே இறைவனும் உலகமே தான் எண்ணும்படி கலந்து நிற்கின்றான். இந்நிலை கலப்பினால் ஒன்றாதல் எனப்படும்.

இறைவன் உலகமே என்னும்படி அதனோடு ஒன்றாயிருப்பினும், பொருள் தன்மையால் அவன் வேறானவனே. அவன் உலகத்தோடு ஒன்றுபட்டு நின்றாலும் அவன் என்றும் அவனே; உலகம் என்றும் உலகமே. பொருள் தன்மையால் அவன் என்றும் வேறாகவே நிற்பான். சூரிய ஒளியையும் கண்ணொளியையும் இதற்கு எடுத்துக்காட்டாகச் சொல்வர். சூரிய ஒளியோடு கண்ணொளி கலந்து நின்றே எதனையும் காணவல்லது. இவ்விரண்டு ஒளிகளும் கலந்து நின்றாலும் இவை ஒன்றாகி விடுவதில்லை. அக்கலப்பு நிலையிலும், சூரிய ஒளி காட்டுகின்ற ஒளியாய் வேறாகியே நிற்கும்; கண்ணொளி காணும் ஒளியாய் வேறாகியே நிற்கும். அது போல இறைவன் உயிர்களோடு கலப்பினால் ஒன்றாகி நிற்கும் அந்நிலையிலும் வேறாகி நின்று அறிவிக்கின்றான்; உயிர்கள் வேறாய் நின்று அறிகின்றன. இவ்வுறவு நிலை வேறாதல் எனப்படும்.

ஒன்றாதல், வேறாதல் ஆகிய இவற்றோடு உடனாதல் என்னும் உறவு நிலையையும் சைவ சித்தாந்தம் சிறப்பாக வலியுறுத்துகிறது. இதனை விளக்குதற்குக் கண்ணொளியையும் உயிரினது அறிவையும் உவமையாகக் கூறுவர். கண் ஒரு பொருளைக் காணும்போது, உள்நிற்கின்ற உயிரினது அறிவும் அக்கண்ணொளியோடு உடன் நின்று அதனை அறிகின்றது. உயிரறிவு உடன் இருந்து காணவில்லையெனில் கண் எப்பொருளையும் காணமாட்டாது. அது போல இறைவன் வேறாக இருந்து அறிவிப்பதோடு உடனாகவும் இருந்து உயிர்கள் அறிவனவற்றையெல்லாம் தானும் அறிகின்றான். அவ்வாறு அவன் உடன்நின்று அறியவில்லை என்றால் உயிர்களுக்கு அறிவோ அனுபவமோ நிகழாதாம். எனவே உயிர்களின் பொருட்டு இறைவனும்

உடனிருந்து காணுகின்றான்; அறிகின்றான். இவ்வுறவு நிலை உடனாதல் எனப்படும்.

மேற்கூறிய ஒன்றாதல், வேறாதல், உடனாதல் ஆகிய மூன்றும் சேர்ந்ததே அத்துவித நிலையாகும். இதனால் இறைவன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று அவற்றைச் செயற்படுத்துவான் என்பது புலனாகும்.

பிரிப்பின்மை, வேறன்மை, அந்நியமின்மை, அநந்தியம் என்பவை அத்துவித நிலையைக் குறிக்க வழங்கும் வேறு சொற்களாகும்.

## அபர முத்தி

பத முத்திக்கு மேலாய் உள்ளது அபரமுத்தியாகும். பத முத்தியாவது காலம், நியதி முதலிய வித்தியா தத்துவங்களில் உள்ள உலகங்களை அடைந்து சாலோகம் முதலியவற்றைப் பெறுதல்; வித்தியா தத்துவங்களுக்கு மேலே இருப்பவை சுத்த வித்தை; ஈசுவர் முதலிய ஐந்து சிவதத்துவங்கள். சிவ தத்துவங்களில் பல உலகங்கள் உள்ளன. அவையே சிவலோகம் எனப்படுவன. ஞானத்தின் வகைகளாகிய கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்பவற்றை உடையோர் (நிட்டை நிலை கூடாதவர்) மேற்கூறிய சிவலோகங்களை அடைந்து முறையே சாலோகம், சாமீபம், சாரூபம் ஆகியவற்றைப் பெறுதல் அபரமுத்தி எனப்படும்.

அபர முத்தியைப் பெற்றோர் பெரும்பாலும் நிலவுலகிற்கு மீள வருதல் இல்லை. அங்கு நின்றே முடிவான பரமுத்தியைப் பெறுவர். ஒரொரு கால் அவர்கள் நிலவுலகிற்கு வர நேரினும் இயல்பிலேயே அவர்கள் அதிதீவிர ஞானமும் பக்தியும் உடையவராயிருப்பர். அவர்களுக்கு ஞானாசிரியரின் உபதேசம் வேண்டுவதில்லை. அப்பிறவியிலேயே சிவபெருமானது அருளைப் பெற்று, அவனோடு இரண்டறக் கலத்தலாகிய பரமுக்தியைப் பெறுவார். பெரிய புராணத்துள் பேசப்பெறும் நாயன்மார்கள் அனைவரும் இத்தகையோரே என்று கூறுவர்.

## அருட் சக்தி

பார்க்க: ஐந்தொழில்.

## அவத்தை

அவத்தை என்பதற்கு நிலை என்பது பொருள். உயிர்கள் கேவலம், சகலம், சுத்தம் என்னும் மூன்று நிலைகளை உடையனவாகும். அவை காரண அவத்தைகள் எனப்படும்.

## கேவல நிலை

உயிரின் முதலாவது நிலை இது. இந்நிலையில் அறிவுப் பொருளாகிய உயிர் அறிவென்பது சிறிதும் இன்றிக் கிடக்கும். தானொரு பொருள் எனத் தன்னிருப்பையும் கூட உயிர் உணர்வதில்லை. இதனை இருள் நிலை என்பர். ஆணவ மலம் என்பதாகிய அழுக்கு இயற்கையாகவே உயிரைப் பற்றியிருப்பதனால் அதனால் மூடப்பெற்ற உயிருக்கு இத்தகைய முழு அறியாமை நிலை உண்டாயிற்று. மாயையின் காரியங்களாகிய உடல், மனம் முதலிய கருவிகளைப் பெறாமல், அக்கருவிகளைக் கொண்டு வினைகளைச் செய்தலும் அவற்றின் பயன்களை நுகர்தலும் என்பது இல்லாமல், சுருக்கமாகச் சொன்னால் மாயை கன்மம் ஆகியவற்றோடு கூடாமல் உயிர் ஆணவத்தோடு மட்டும் கூடித் தனிமையில் கிடக்கின்ற நிலையாதலின் இத்தனி நிலை கேவல நிலை எனப்பட்டது. கேவலம் என்பதற்குத் தனிமை என்பது பொருள்.

## சகல நிலை

கேவல நிலையில் முழு மூடமாய், ஆணவ இருளில் அழுந்திக் கிடந்த உயிர்களுக்கு இறைவன் மாயையிலிருந்து உடம்பும், உடம்பில் உள்ள கண் முதலிய புறக்கருவிகளும், மனம் முதலிய உட்கருவிகளும், உயிர் அனுபவித்தற்குரிய நுகர்ச்சிப் பொருள்களும் ஆகிய நான்கையும் படைத்துக் கொடுக்கின்றான். இவற்றை முறையே தனு, கரணம், புவனம், போகம் என்பர்.

மாயையின் காரியங்களாகிய இவை உயிரின் அறிவையும் செயலையும் விளக்கம் செய்யக்கூடியவை. இவற்றின் துணையினால் உயிர்கள் ஆணவமல மறைப்புச் சிறிது நீங்கப்பெற்று, அதற்கேற்பச் சிறிதளவு அறிவும் செயலும் விளங்கி உலக வாழ்க்கையை மேற்கொள்ளும்.

வாழுங்காலத்தில் நல்வினை தீவினைகளைச் செய்தும், முன்செய்த வினைகளுக்கேற்ப வரும் இன்ப துன்பங்களை நுகர்ந்தும், மாறி மாறி இறந்தும் பிறந்தும் உழலும்.

மாயை, கன்மங்களோடு கூடிய இந்நிலையே சகல நிலை எனப்படும். சகலம் என்பதற்குக் கலையோடு கூடியிருத்தல் என்பது பொருள். கலை = மாயை.

ஒன்றும் தெரியாத கேவல நிலை இரவு என்றும், சிறிதளவில் அறிவு விளங்கப்பெறும் சகல நிலை பகல் என்றும் கூறப்படும்.

## சுத்த நிலை

உயிர் கேவலம், சகலம் ஆகிய இரண்டும் நீங்கி, இறைவனைச் சார்ந்து, என்றும் ஒரு நிலையாய் நிற்பது சுத்த நிலை எனப்படும். ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும் மலங்களும் அறவே நீங்கிய நிலையாதலின் இது சுத்தம் எனப்பட்டது. சுத்த நிலையை இரவு பகலற்ற இடம் என்பர். இந்நிலையில் உயிர் மாறாத சிவானந்தத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும்.

## ஐந்தவத்தை

உயிர்கள் உடம்போடு கூடிவாழும் நிலையில் நாள்தோறும் ஐந்து அவத்தைகளை அடையும். அவை சாக்கிரம், சொப்பனம், கழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன. அவற்றைத் தமிழில் முறையே நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்பு அடங்கல் (மூச்சு அடங்கியிருத்தல்) எனக் குறிப்பர். இவ்வைந்து நிலைகளும் காரிய அவத்தைகள் எனப்படும்.

சாக்கிரம் முதலிய நிலைகளில் அறிவு படிப்படியே குறைந்து வரும். அம்முறையில் உயிர் சிறப்பாக நிற்கும் இடமும் ஐந்தாகும். சாக்கிரமாகிய விழிப்பு நிலையில் உயிர் புருவ நடுவில் நிற்கும்; சொப்பனமாகிய கனவு நிலையில் கழுத்தில் நிற்கும்; சுழுத்தியாகிய உறக்கத்தின் போது நெஞ்சில் நிற்கும். துரியமாகிய பேருறக்கத்தின் போது உந்தியில் நிற்கும்; துரியாதீதமாகிய உயிர்ப்படங்கலில் மூலாதாரத்தில் ஒடுங்கி நிற்கும். இங்கு உயிர் அறியாமையில் அழுந்தியிருக்கும்.

இவ்வாறு உயிர் புருவ நடுவிலிருந்து முறையே இறங்கிவருதல் கீழாலவத்தை எனப்படும். பின் அம்முறையே மேலேறி வருதல் மேலாலவத்தை எனப்படும்.

உயிர் புருவ நடுவிலிருந்து கீழிறங்கி இறுதியாக மூலாதரத்திற் செல்வது, அரசன் தான் அரசு வீற்றிருந்த அத்தாணி மண்டபத்தை விட்டு நீங்கிப் பல இடங்களைக் கடந்து தன் அந்தப்புரத்தை அடைவது போன்றது என்று சொல்லப்படும்.

## ஆகாமியம்

பார்க்க: வினை

## ஆணவம்

உயிரைப் பற்றியிருக்கும் மும்மலங்களுள் முதலாவதாயும், ஏனைய கன்ம மலமும் மாயா மலமும் உயிரைச் சேர்தற்குக்

காரணமாயும் இருப்பது ஆணவமேயாகும். இது செம்பிற் களிம்பு போலவும், நெல்லிற்கு உரம் போலவும் உயிர்களுக்கு இயற்கைக் குற்றமாக அமைந்துள்ளது.

ஏனைய மலங்களுக்கு மூலம் ஆதலின் ஆணவத்தை மூல மலம் என்பர்; இயற்கைக் குற்றமாதல் பற்றிச் சகச மலம் எனப்படும்; அறிவை மறைத்து அறியாமையைச் செய்தல் பற்றி இருள் மலம் எனவும் வழங்கப்படும். மேலும், மலம் என்றாலே அஃது ஆணவ மலத்தையே சிறப்பாகக் குறிக்கும். விரிந்ததாகிய உயிரின் அறிவை மறைத்துச் சிற்றறிவாய் அணுத்தன்மையாய்ச் செய்தல் பற்றியே ஆணவம் என்ற காரணப் பெயர் அமைந்தது.

ஆணவம் ஒன்றேயன்றிப் பல இல்லை. ஆயினும் அதன் சத்திகள் எண்ணிறந்தன. அதனால் எண்ணிறந்த உயிர்களைப் பிணித்து நிற்கிறது. இரவுப் போதில் இருள் ஒன்றே எல்லோருடைய கண்களையும் மறைந்து நிற்றலைப் போன்றது இது.

கண்ணை மறைக்கின்ற புற இருளை நம்மால் உணர முடிகிறது. ஆனால் அறிவை மறைக்கின்ற ஆணவ மலத்தை அஃது உள்ள பொழுது ஒருவராலும் அறிய முடியாது. அது நீங்கி அறிவு வந்த பின்னரே "நாம் இது காறும் அறியாமை வயப்பட்டிருந்தோம்" என்ற உண்மை தெரிய வரும். இவ்வாறு ஆணவ மலம் ஒருவருக்கும் புலனாகாத பொருளாய் உள்ளது.

பிற சமயங்களுள் ஒன்றேனும் ஆணவ மலம் உண்டென்று கொள்வதில்லை. அம்மதங்கள் மாயை கன்மங்களே உயிர்களுக்கு அறியாமையைச் செய்கின்றன என்று கூறுகின்றன. இவ்வகையில் சைவ சித்தாந்தம் வேறுபட்டு நிற்கிறது. ஆணவத்தை நீக்குதற்கே மாயை கன்மங்களை இறைவன் உயிர்களுக்குக் கூட்டினான் என்பதும், ஆணவம் இருள் எனில் மாயை ஒளி போன்றது என்பதும், மாயை கன்மங்கள் உயிர்களுக்கு விளக்கத்தைத் தருவன என்பதும் சைவ சித்தாந்தக் கருத்தாகும்.

ஆணவ மல மறைப்பு உயிர்களிடத்தில் ஒரே வகையாய் இருப்பதில்லை. உயிர்தோறும் அது வேறுபட்டே இருக்கும் அம்மறைப்பு நிலையைப் பொதுவாக மூவகைப்படுத்துவர். அவை பருமை, நுண்மை, மிகு நுண்மை என்பன. ஆணவ மலப் பிணிப்புப் பருமையாய், தடிப்பாய் உள்ள உயிர்கள் சகலர் எனப்படுவர்; நுண்மையாய் உள்ள உயிர்கள் பிரளயாகலர் எனப்படுவர்; மிகு நுண்மையாய் உள்ள உயிர்கள் விஞ்ஞானகலர் எனப்படுவர். மல மறைப்பின் வேறுபாட்டிற்கு ஏற்பவே மற்ற மாயை கன்மங்களின் பிணிப்பும் அமையும்.

## ஆன்மா

பார்க்க: உயிர்.

## இருவினை ஒப்பு

நல்வினையின் பயனாக இன்பம் வரும்போது அதனை விரும்புதலும், தீவினையின் பயனாகத் துன்பம் வருங்கால் அதனை வெறுத்தலும் செய்யாமல், உணர்ச்சி வேறுபடாமல் அவ்விரண்டையும் ஒன்று போல நினைத்துப் பற்றின்றி நிற்கும் மனப்பான்மையே இருவினையொப்பு என்பது. "ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்" என்று பெரியபுராணம் கூறுவது இந்நிலையேயாம்.

இருவினை ஒப்பு சரியை முலில் சிவபுண்ணியத்தாலேயே உண்டாகும். அவ்வினையொப்பு முற்ற நிகழ்ந்த போதே இறைவன் குருவாய் வந்து ஞானத்தை அருள்வான்.

## உயிர்

உயிர் என்பது அறிவுடைய பொருள். அறிவுடைப் பொருளைச் சித்து என்ற சொல்லால் குறிப்பர். ஆகவே உயிர் சித்துப் பொருள் ஆகும்.

உடம்பு தோறும் உள்ள உயிர் ஒவ்வொன்றும் தனித்தனி உயிரே ஆகும். உயிர்கள் எண்ணற்றவை.

இந்த எண்ணிறந்த உயிர்களை இறைவன் உண்டாக்கவில்லை. இறைவனைப் போலவே உயிர்களும் என்றும் உள்ளனவேயாம். அவற்றிற்குத் தோற்றமும் இல்லை; அழிவும் இல்லை. தோற்றமில்லாத பொருளை 'அநாதி' என்பர். எனவே, இறைவனும், அநாதி; உயிர்களும் அநாதி.

இவ்வாறு சொல்வதால் உயிர்கள் இறைவனோடு சரி நிகராகி நிற்கும் எனக் கருதிடல் ஆகாது. சித்து என்னும் வகையில் இரண்டும் ஓரினமாயினும் அவற்றின் அறிவுநிலையில் எத்துணையோ வேறுபாடு உளது. இறைவனது அறிவு முற்றறிவு; உயிர்களின் அறிவோ சிற்றறிவு. இறைவன் தானே அறிபவன். உயிர்கள் அறிவித்தாலே அறியும் தன்மை உடையவை. இறைவன் ஒரு காலத்தில் எல்லாவற்றையும் அறிபவன். உயிர்கள் ஒரு காலத்தில் ஒரு பொருளை மட்டுமே அறிவன. அவ்வாறு ஒவ்வொன்றாக அறிந்தவற்றை மறந்தும் மீள நினைந்தும் வருவன. இறைவன் எதனையும் தோய்வின்றி அறிவன். உயிர்கள் தாம் அறிந்தவற்றில் தோய்ந்து அவற்றின் தன்மையைப் பெற்று நிற்கும். இவ்வியல்பைச் "சார்ந்ததன் வண்ணம் ஆதல்" என்பர். இந்தத்

தன்மையினால் இறைவன் என்றும் தலைவனாய் இருக்க, உயிர்கள் என்றும் அவன் வழிப்பட்டு அடிமையாய் நிற்றற்கு உரியவை என்பது புலனாகும். பசு, ஆன்மா, சீவன், அணு, ஆவி ஆகிய சொற்கள் உயிரைக் குறிக்க நூல்களில் வழங்குகின்றன. பசு என்ற சொல் பாசத்தால் கட்டப்பட்டது என்ற பொருளைத் தந்து, உயிர் இயற்கையாகவே ஆணவ மலத்தால் கட்டப்பட்டுக் கிடக்கின்ற நிலையைக் குறிப்பதாய் உள்ளது. ஆன்மா என்ற சொல்லுக்கு வியாபகம் (விரிவு) என்பது பொருள். உயிர் எல்லையற்று நிற்கும் வியாபகப் பொருள், ஆயினும் இறைவனது நிறைவில் அடங்கி நிற்பது. உயிரின் வியாபகம் தோன்றாதபடி அதனை ஆணவ மலமாகிய மாசு மறைத்து நிற்கிறது. பெரிய நீர்நிலையில் நீர்ப் பரப்பு சிறிதும் தோன்றாதவாறு பாசி மூடிக்கொண்டிருக்கின்ற நிலை போன்றது இது. இறைவன் கொடுத்த உடம்பு, அறிகருவிகள் முதலியவற்றால் ஆணவ மறைப்புச் சிறிது விலகி உயிரின் வியாபகம் சிறிது புலனாகும். பாசி படர்ந்த குளத்தில் கல்லை விட்டெறிந்தால் கல் விழுந்த இடத்தில் பாசி சிறிது விலகி நீர் சிறிது புலப்படுவது போன்றது இது. இவ்வாறு உடம்பு அளவில் உயிரின் அறிவு, செயல்கள் சிறிதே விளங்கப் பெற்ற அணுவைப்போலத் தோன்றுகிறது. இந்நிலை பற்றியே உயிர், அணு என்று கூறப்படுகிறது. உயிர் அணுத்தன்மையடைந்து நிற்றல் ஆணவ மலத்தால் வந்த செயற்கை எனவும், எங்குமாய் நிற்கும் விரிந்த அறிவு நிலையே அதற்கு இயற்கை எனவும் அறிதல் வேண்டும்.

கேவல நிலையில் ஆணவ இருளில் அழுந்தி அறிவின்றிக் கிடந்த உயிர், இறைவனருளால் உடம்போடு கூடிய சகல நிலைக்கு வந்து, சிற்றறிவும் சிறு தொழிலும் உடையதாய்ப் பிறப்பு இறப்புக்களில் உழன்று, பின் பக்குவம் வந்த காலத்தில் இறைவனே ஞானாசிரியராய் நின்று உணர்த்த, உண்மை ஞானத்தைப் பெற்றுப் பாசத் தொடர்பும் மறைப்பும் நீங்கிப் பேரறிவுடையதாகித் தனது இயற்கை நிலையான வியாபகத்தை எய்தி, இறைவனோடு இரண்டறக் கலந்து நின்று பேராத, மாறாத, பேரின்பத்தை நுகரும்.

## மூவகை உயிர்கள்

உயிர்கள் எண்ணற்றவையாயினும் பாசப் பிணிப்புப் பற்றி அவற்றை மூவகைப்படுத்திச் சித்தாந்தம் கூறும். அவை விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்பன.

மும்மலங்களுள் ஆணவ மலம் ஒன்றை மட்டும் உடைய உயிர்கள் விஞ்ஞானகலர். ஆணவத்தோடு கன்மத்தையும் உடைய உயிர்கள் பிரளயாகலர். ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களையும் உடைய உயிர்கள் சகலர்.

விஞ்ஞானகலர் முதலிய பெயர்கள் காரணம் பற்றி அமைந்தனவாகும். விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்பவற்றில் உள்ள அகலர் என்பதற்குக் கலை இல்லாதவர் என்பது பொருள். சகலர் என்பதற்குக் கலையோடு கூடியவர் என்பது பொருள். கலை என்பது மாயையைக் குறிக்கும். மயக்கும் தன்மையை உடைய மாயையோடு கூடியவர் சகலர் எனப்பட்டனர். அத்தகைய மாயையோடு கூடாமையால் மயக்கம் இல்லாதவர் என்ற பொருளில் ஏனைய இருவகையினரும் அகலர் எனப்பட்டனர்.

விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்ற பெயர்களே அவர்கள் முதலில் சகலராயிருந்து பின்னர் பக்குவ முதிர்ச்சியால் மயக்கத்தைச் செய்யும் மாயையின் தொடர்பு நீங்கினவர் என்பதைக் காட்டும். விஞ்ஞானகலர் என்பதற்கு மேலான ஞானத்தால் கலை நீங்கப்பெற்றவர் என்பது பொருள். பிரளயாகலர் என்பதற்கு எல்லாம் ஒடுங்குகின்ற பிரளயகாலத்தில் கலை நீங்கப்பெற்றவர் என்பது பொருள். இவ்வாறு, சகலராய் இருந்து செயற்கையால் அந்நிலைக்கு உயர்ந்தோரும் உண்டு. இயற்கையிலேயே விஞ்ஞானகலர், பிரளயாகலர் என இருப்போரும் உண்டு என்பது அறிதற்குரியது.

## ஐந்தொழில்

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்பவை இறைவன் செய்யும் ஐந்தொழில்களாகும்.

இறைவன் மாயை என்ற மூலப் பொருளிலிருந்து உயிர்கள் தங்குதற்குரிய உடம்பையும், அறிதற்குரிய மனம் முதலில் கருவிகளையும், போக்குவரவு செய்தற்குரிய உலகையும், நுகர்தற்குரிய உலகப் பொருள்களையும் உண்டாக்கிக் கொடுக்கின்றான். இதுவே படைத்தல் தொழிலாகும்.

அந்தந்த உயிர்களுக்குப் படைத்தளித்த உடம்பு முதலியவற்றைக் குறிப்பிட்ட காலம் வரும் வரையில் நிலை நிறுத்துதல் காத்தல் என்னும் தொழிலாகும்.

காத்தவற்றைத் தத்தம் கால எல்லையில் உயிர்களினின்றும் பிரித்து மீண்டும் அவற்றை மாயையில் ஒடுக்குதல் அழித்தல் தொழிலாகும்.

மேற்கூறிய முத்தொழில்களையும் இறைவன் சடமாகிய பொருள்களிடத்தில் செய்கின்றான் என்பது நோக்குதற்குரியது.

இனிச் சித்தாகிய உயிர்களிடத்தில் இறைவன் செய்கின்றவை மறைத்தலும், அருளலும் ஆகிய ஏனைய இரு தொழில்களாகும்.

அவற்றுள் மறைத்தல் என்பது இறைவன் தன்னை அறிய விடாது உயிர்களின் அறிவை மறைத்தல். உண்மையில் மறைப்பது ஆணவ மலந்தான். அதனை இறைவன் தனது சத்தியால் தூண்டிச் செயற்படுத்தி உயிரறிவை மறைக்கும்படி செய்கிறான். அவன் ஏன் அவ்வாறு செய்கிறான் எனில், ஆணவ மலம் செயற்படச் செயற்படத்தான் அதன் சக்தி படிப்படியாகத் தேய்ந்து மெலிவடையும். அதன் சத்தி மெலியுங்காலத்தில் உயிரறிவு மறைப்பு நீங்கி விளக்கம் பெற்று இறைவனை உணரும் தகுதியைப் பெறும். இப்பயன் கருதியே ஆணவ மலத்தைச் செயற்படுத்தி அதன் வழியாக மறைத்தலைச் செய்விக்கின்றான். எனவே மறைத்தலும் உயிர்களுக்கு நன்மையேயாகிறது. இவ்வாறு பாசத்தின் வழிநின்று அதனைச் செயற்படுத்தி மறைத்தலைச் செய்விக்கும் இறைவனது சக்தி திரோதான சத்தி எனப்படும். திரோதனம் = மறைத்தல்.

இனி, ஆணவ மலத்தில் சக்தி மெலிவடைந்த உயிர்களுக்கு இறைவன் தன்னியல்பையும், உயிரியல்பையும், பாசத்தின் இயல்பையும் காட்டிப் பகையாகிய பாசத்தினின்றும் நீங்கி உறவாகிய தன்மையடைந்து இன்புறச் செய்கின்றான். இதுவே அருளல் என்னும் தொழிலாகும். அருளலைச் செய்யும் இறைவனது சக்தி அருட்சத்தி எனப்படும்.

இறைவனது ஒரு சத்தியே மறைத்தலைச் செய்யுங் காலத்தில் திரோதான சக்தி என்றும், அருளலைச் செய்யுங் காலத்தில் அருட்சத்தி என்றும் பெயர் பெற்று நிற்கும் என்பது அறியத் தகும்.

ஏனைய சமயங்கள் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களை மட்டும் கூறும். சைவ சமயம் ஒன்றே இறைவன் செய்யும் தொழில்களை ஐந்தாகக் கூறுகின்றது.

## கன்மம்

பார்க்க: வினை

## கிரியை

பார்க்க: சிவபுண்ணியம்

## கேவலம்

பார்க்க: அவத்தை

## சகலம்

பார்க்க: அவத்தை

## சகலர்

பார்க்க: உயிர்

## சஞ்சிதம்

பார்க்க: வினை

## சதசத்து

பசுவாகிய உயிர் பதியாகிய கடவுளைப் போலச் சத்து பொருள் ஆகாது; பாசப் பொருள் போல அசத்துப் பொருளும் ஆகாது. உயிர் சார்ந்ததன் வண்ணமாம் தன்மையை உடையது ஆதலால், அசத்தைச் சார்ந்த பொழுது அசத்தின் தன்மையைப் பெற்று அசத்தாகவே நிற்கும். பிறப்பு நிலையில் அசத்தாகிய உடம்பைச் சார்ந்திருக்கின்ற உயிர் உடம்பின் தன்மையே தன் தன்மையாய்- உடம்பே தானாய்- நிற்றலைக் காணலாம். இனி அசத்தை விடுத்துச் சத்தாகிய சிவத்தைச் சார்ந்தபொழுது சிவத்தின் தன்மையே தன் தன்மையாய், சிவமே எனும்படி நிற்கும்.

இவ்வாறு சத்தும் ஆகாமல், அசத்தும் ஆகாமல், சத்தைச் சார்ந்த போது சத்தாயும், அசத்தைச் சார்ந்த போது அசத்தாயும் நிற்கும் இயல்பினால் பசுவாகிய உயிர் சதசத்து எனப்படுகிறது.

## சக்தி

இறைவன் எண்ணற்ற உயிர்களிடத்திலும் ஏனைய உலகப் பொருள்களிடத்திலும் பிரிப்பின்றிக் கலந்து நிற்கிறான். ஒருவனாகிய இறைவன் எல்லாப் பொருள்களிடத்திலும் கலந்து நிற்பது எவ்வாறு இயலும் எனில், சூரியன் ஒன்றேயாயினும் அதன் ஒளி எங்கும் பரவி நிற்பதைப் போல இறைவன் ஒருவனேயாயினும் அவனது சக்தி எல்லாப் பொருளிடத்திலும் ஒருங்கே விரவி நிற்கிறது. நெடுந்தொலைவில் உள்ள சூரியன் தன் ஒளிக் கதிரினால் உலகத்தோடு தொடர்புற்று நிற்பதைப் போலச் சிவமாகிய முதற்பொருள் எல்லாவற்றையும் கடந்து நிற்பதாயினும், தனது சக்தியினால் அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்து உலகத்தோடு தொடர்பு கொண்டு விளங்குகிறது.

இதனால், சூரியனும் அதன் ஒளியும் போல இறைவன் தானும் தன் சக்தியும் என இரு தன்மைப்பட்டு இயைந்து நிற்கிறான் என்னும் உண்மை புலனாகும்.

சிவமும் சக்தியும் இருவேறு பொருள்கள் அல்ல. சூரியனது தன்மையே ஒளியாதல் போலச் சிவத்தினது குணமே சக்தி. அக்குணத்தையுடைய குணிப்பொருள் சிவம். மலர் குணி; மணம்

குணம். அதுபோலச் சிவமும் சக்தியும் குணியும் குணமுமாகத் தம்முள் இயைந்து நிற்கும். குணத்தைப் பிரிந்து குணியும், குணியைப் பிரிந்து குணமும் தனித்து நில்லா. அவ்வாறே சக்தியின்றிச் சிவமில்லை; சிவமின்றிச் சக்தியில்லை. எனவே, சக்தி பெரிதா, சிவம் பெரிதா என்ற கேள்விக்கு இங்கு இடமேயில்லை என அறிதல் வேண்டும்.

குணியும் குணமும் வேறல்லவாயினும், குணி செலுத்தியபடிதான் குணம் செல்லும். இதனால் சிவத்தின் வழியிலேயே அவனது சக்தி செயற்படும் என்பது விளங்கும். இது பற்றியே சிவத்தைக் கணவன் என்றும், சத்தியை மனைவி என்றும் கூறும் வழக்கு உண்டாயிற்று. ஒரு பாதி ஆணாகவும் மற்றொரு பாதி பெண்ணாகவும் அமைந்த இறைவனது திருவுருவத்தின் உட்பொருள் இறைவன் ஒருவனே சிவமும் சக்தியும் என இருதிறப்பட்டு இயைந்து நிற்கிறான் என்பதைக் காட்டுதலேயாகும்.

உயிர்களையும் பிறபொருள்களையும் நோக்காது தன் நிலையில் நிற்பதே இறைவனது உண்மை நிலை. இதுவே கடந்த நிலை எனப்படும். இந்நிலையில் அவன் சொரூப சிவன் எனவும் பரம சிவன் எனவும் சொல்லப்படுவான். அவனது சக்தி பராசக்தி எனப்படும்.

உயிர்களை நோக்கி ஐந்தொழில் செய்யுங்காலத்தில் அவன் தடத்த சிவன் எனப்படுவான். அவனது சக்தி ஆதி சக்தி என்னும் பெயர்பெறும். இது திரோதான சத்தி என்றும் சொல்லப்பெறும். இந்த ஆதி சத்தியே இச்சா சத்தி, ஞான சத்தி, கிரியா சத்தி என மூன்றாகவும் இன்னும் எண்ணிறந்த சத்திகளாகவும் விரிந்து செயற்படும். உயிர்களுக்கு நன்மை செய்ய விரும்பும் கருணையே இச்சா சக்தி; அவ்வாறு விரும்பி அதற்கு ஏற்பச் செய்ய வேண்டுவனவற்றையெல்லாம் அறிவது ஞானசக்தி; அறிந்தவாறே செய்வது கிரியா சக்தி.

இறைவனது கருணையாகிய இச்சாசக்தி எல்லா உயிர்களிடத்திலும் வேறுபாடின்றி ஒரு தன்மையாய்ச் செயற்படும். ஞானசத்தியும் கிரியா சத்தியும் ஒரு தன்மையாய்ச் செயற்படாமல், நலம் விளையும் முறையில் அந்தந்த உயிர்களின் பக்குவ நிலைக்கேற்ப வெவ்வேறாய் அறிந்து அதற்கேற்ப வெவ்வேறாய்ச் செயற்படும். இதுபற்றியே, எவ்வுயிரிடத்தும் பொதுவாக நிற்கும் இச்சா சக்தியை விடுத்து, இவ்விரு சக்திகளையே இறைவனது இரண்டு திருவடிகளாகச் சிறப்பித்துச் சொல்வர். ஞானசக்தி இறைவனது வலது திருவடியாகவும், கிரியா சக்தி இடது திருவடியாகவும் சொல்லப்பெறும்.

## சத்தி நிபாதம்

இறைவனது திரோதான சக்தி மாயையையும் கன்மத்தையும் கூட்டி, உயிரைப் பிணித்துள்ள ஆணவ மலத்தின் சக்தி சிறிது சிறிதாகத் தேயும்படி செய்யும். ஆணவத்தின் சத்தி மெலிய மெலிய, அதற்கேற்றவாறு அதன் மறைப்பு நீங்கி உயிரின் அறிவு விளங்கி வரும். அறிவு விளங்க விளங்க, இதுகாறும் அவ்வறிவில் மறைந்து நின்று மும்மலங்களைச் செயற்படுத்தி அவ்வுயிரை மாயா காரியங்களாகிய உலகப் பொருள்களின் மீது பற்றுக் கொள்ளும்படி செய்த அத்திரோ தான சத்தியே அத்தன்மை மாறி அருட்சத்தியாய் உயிரினிடத்தில் சிறிது சிறிதாய்ப் பதியும். அருட்சத்தி பதியப் பதிய அவ்வுயிர் உலக மயக்கம் நீங்கி, மாயா காரியங்களின் இழிவையும் பிறவித் துன்பத்தையும் உணரும். அங்ஙனம் உணர உணர, அவற்றினின்றும் நீங்குதற்குரிய முயற்சியில் மனம் செல்லும்.

ஆணவ மலம் நீங்குதற்குரிய தகுதியை அடைதற் பொருட்டு அதன் பக்கமாய் நின்று உயிரை மறைத்து வந்த திரோதான சத்தி அம்மறைப்புத் தன்மை நீங்கி அருட்சத்தியாய் உயிரிடத்தில் பதிதலே சத்தி நிபாதம் எனப்படும்.

நிபாதம் என்பதற்கு வீழ்தல் என்பது பொருள். ஓர் அவைக் களத்தில் கல் வந்து வீழ்ந்தால் அங்குள்ளோர் அதிர்ச்சியடைந்து அஞ்சி அகல்வர். அதுபோல, அருட்சத்தி பதியுமானால் உலகச் சூழலில் நின்ற உயிருக்கு அதிர்ச்சியுண்டாகி, உலக மயக்கத்திலிருந்து நீங்க முயலும். இக்கருத்துப் பற்றியே, சத்தி வீழ்தல் எனப்பொருள்படும் சத்தி நிபாதம் என்னும் குறியீட்டினால் இந்நிலையைக் குறித்தனர்.

சத்தி நிபாதம் அவ்வவ்வுயிர்களிடத்தில் பலவேறு வகையாக நிகழுமாயினும், அது பொதுவாக நான்கு வகையாகக் கூறப்படும். அவை மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என்பன. மிக மெல்ல நிகழ்தல், மெல்ல நிகழ்தல், விரைய நிகழ்தல், மிக விரைய நிகழ்தல் என இவற்றைச் சொல்லலாம். மந்ததரம் முதலிய நால்வகைச் சத்தி நிபாதத்தால் முறையே சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவற்றை உயிர்கள் மேற்கொள்ளும்.

## சத்து

இந்தியத் தத்துவங்கள் சத்து என்பதற்கு 'உள்ளது' என்றே பொருள் கொள்ளுகின்றன. ஆனால் சைவ சித்தாந்தம் என்றும் மாறுதல் அடையாமல் உள்ளதே சத்து என்னும் வரையறையைக் கூறுகிறது.

பசுவாகிய உயிர் பாசத்தோடு கூடி அதன் அறிவு மறைத்தும் தோன்றியும் வருதலால் சத்திற்குரிய இலக்கணம் உயிருக்குப் பொருந்தாததாகின்றது. அவ்வாறே பாசப் பொருள்களும் நிலை மாற்றத்தை உடையன ஆதலால் அவற்றிற்கும் இவ்விலக்கணம் பொருந்தாது. பதியாகிய கடவுட் பொருள் ஒன்றே என்றும் மாறுதல் இன்றி ஒருபடித்தாய் நிற்கும் செம்பொருள் ஆதலின் அதுவே சத்து எனப்படுதற்கு உரியது.

சத்து என்னும் வடமொழிச் சொல்லுக்கு இனிமையான தமிழ்ச் சொல் மெய் என்பது.

### சரியை

பார்க்க: சிவபுண்ணியம்.

### சற்காரிய வாதம்

சற்காரிய வாதம் என்பது 'உள்ளதே தோன்றும், இல்லது தோன்றாது' என்னும் கொள்கையாகும். சத் = உள்ளது; காரியம் = தோன்றுவது.

உள்ளது தோன்றும் என்பதன் பொருள், முன்பு சூக்கும நிலையில் நுட்பமாய் விளங்காது நின்ற பொருள் பின் தூல நிலையில் பருமையாய்ப் புலப்படும்படி தோன்றி நிற்கும் என்பதாகும். எள்ளில் எண்ணெய் முன்பே நுட்பமாய் அடங்கியிருக்கிறது; எள்ளை ஆட்டும் பொழுது அது பருமையாய் விளங்கித் தோன்றுகிறது.

முன்பே சூக்குமமாய் இல்லாத பொருள் பின் எக்காலத்திலும் எவ்வகையிலும் விளங்கித் தோன்றாது. முயலின் தலையிலும் பசுக் கன்றின் தலையிலும் அவை பிறந்த போது கொம்பு இல்லை. ஆயினும் பசுக்கன்றின் தலையில் முன்பே கொம்பு சூக்குமமாய் இருந்தது. முயலின் தலையில் அஃது அவ்வாறு இல்லை. அதனாலேயே பசுக்கன்றின் தலையில் பின்னர் கொம்பு தோன்றுகிறது. முயலுக்குக் கொம்பு என்றும் தோன்றுவதில்லை. இதனால், இல்லாதது எக்காலத்தும் தோன்றுவதில்லை, உள்ளதுதான் தோன்றும் என்பது புலனாகும்.

உள்பொருள்களுக்கு இரண்டு நிலைகள் உண்டு என்பதை அறியலாம். ஒன்று, நுட்பமாய் புலப்படாமல் அடங்கியிருத்தல். இது காரண நிலை எனப்படும். மற்றது பருமையாய் விளங்கித் தோன்றுதல். இது காரிய நிலை எனப்படும். ஒரு பொருள் காரண நிலையிலிருந்து காரிய நிலைக்கு வருதலே தோற்றம் எனப்படும். பின், காரிய நிலையிலிருந்து மீளக் காரண நிலையை அடைதலே அழிவு எனப்படும். எனவே பொருள் என்பது எக்காலத்தும் உள்ளதேயாகும். புலப்படாத

அருவ நிலையிலிருந்து புலப்படும் உருவ நிலைக்கு வரும்போது தோன்றியது என்று கூறுகிறோம். அவ்வளவே. இதுவே சற்காரிய வாதம் எனப்படுவது. சைவ சித்தாந்தம் இதன் அடிப்படையில்தான் அமைந்துள்ளது.

## சார்ந்ததன் வண்ணமாதல்

உயிரின் இயல்பு சார்ந்ததன் வண்ணம் ஆதல். அஃதாவது, தான் எந்தப் பொருளைச் சார்கிறதோ அந்தப் பொருளின் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு நிற்றல்.

பளிங்கு தன்னை அடுத்துள்ள பொருளின் நிறமே தன் நிறமாகக் கொண்டு நிற்கும். கண், இருளில் நிற்கின்ற காலத்தில் இருளைச் சார்ந்து இருளாய் நிற்கும். ஒளி வந்த காலத்தில் ஒளியைப் பொருந்தி ஒளியாய் நிற்கும். இத்தகைய பளிங்கும் கண்ணும் போன்றது உயிர். அது கட்டு நிலையில் பாசத்தைச் சார்ந்து, தான் வேறு காணப்படாமல் பாசமேயாக நிற்கும். பாசப் பொருளாகிய உடம்பைச் சார்ந்த உயிர் தான் சிறிதும் புலப்படாமல் அவ்வுடம்பாகவே நிற்கின்ற நிலையைக் காணலாம். அவ்வாறே உயிர் முத்தி நிலையில் பதியைச் சார்ந்த பொழுது தான் வேறு காணப்படாமல் பதியேயாய் நிற்கும்.

இவ்விரு நிலைகளில், பகையாகிய பாசத்தோடு கூடிய பாசமாய் நிற்றல் உயிருக்குச் செயற்கை என்பதையும், உறவாகிய சிவத்தோடு கூடி நிற்றலே உயிருக்கு இயற்கை என்பதையும் அறிதல் வேண்டும்.

## சித்தாந்த முத்தி

உயிர் எதை எதைச் சார்கிறதோ அதன் அதன் தன்மையையே தன் தன்மையாகக் கொண்டு, தான் வேறு தோன்றாமல் நிற்கும். இவ்வாறு அது அதுவேயாய் நிற்றல் உயிரின் இயல்பாகும்.

இவ்வியல்புக்கேற்பப் பெத்த நிலையில் பாசத்தை சார்ந்த உயிர் பாசமேயாய் நிற்கும். அப்பொழுது பதியாகிய சிவம் உடனிருந்தும் அதன் இருப்பை உயிர் உணராமையால், அந்நிலையில் பதி இல்லாததாய் நிற்கும். இனி முத்தி நிலையில் சிவத்தைச் சார்ந்த உயிர் சிவமே தானாய் நிற்கும். அப்பொழுது பாசம் இருந்தும் அதன் மறைப்பு சிவமேயான உயிரிடத்தில் செல்லாமையினால் நெருப்பின் முன் இருள் போல அது தன் ஆற்றல் மடங்கி இல்லாததாய் நிற்கும். எனவே, முக்தியிலும் பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களும் உள்ளன என்பதே சைவ சித்தாந்த முடிபாகும்.

முத்தியில் உயிர் சிவத்தையடைதல் புதிதாய் நிகழ்வது போலத் தோன்றினாலும் உண்மையில் அவ்வுறவு புதிதாய் வந்தது அன்று. உயிர்

என்றுமே சிவத்தோடுதான் உள்ளது. குருடன் சூரிய ஒளியிலேயே நின்றாலும் அவ்வொளியை அவன் அறிவதில்லை. குருடு நீங்கிப் பார்வை பெற்ற போது சூரிய ஒளி அவனுக்குப் புதிதாகவே தோன்றும். உண்மையில் அவ்வொளி முன்னரே இருத்தல் போலச் சிவமும் உயிரோடு என்றுமே இருக்கிறது. பாசத்தின் மறைப்பினால் உயிர் அதனை உணராதிருந்தது. பாசம் நீங்கிய போது அதற்குச் சிவப்பேறு புதிது போலத் தோன்றுகிறது. அவ்வளவே.

'முத்தியில் உயிர் என்பது இல்லாதொழியும், சிவம் ஒன்றே நிற்கும்' என்பது ஒரு சாரார் கொள்கை. 'முத்தியில் உயிரும் சிவமும் தனித்தனியே வேறாய் நிற்கும்' என்பது பிறிதொரு சாரார் கொள்கை. இவ்விரு கருத்துக்களையும் சைவ சித்தாந்தம் ஏற்பதில்லை. முத்தியில் உயிர் என்பதே இல்லையாயின், இத்துணைக் காலம் அரிதின் முயன்று அரும்பாடுபட்டு மேற்கொண்ட சாதனங்களால் என்ன பயன்! அனைத்து முயற்சியும் பயனற்றதாய் அன்றோ போகின்றது! இனி, முத்தியில் உயிர் வேறாய் நிற்குமானால், 'யான் இதனை அறிகின்றேன்' என அது தன்னை அறிந்து நிற்கும். அவ்வாறு தன்னை அறியும் பொழுது அது சிவத்தை மறக்கும். ஒன்றை அறியும்போது மற்றொன்றை அறியாதிருத்தலே உயிரியல்பு. அவ்வாறு சிவத்தை மறக்குமானால் சிவானந்தம் எவ்வாறு உண்டாகும்? சிவானந்தம் இல்லாத அந்நிலையை முத்தி நிலை என்பது எவ்வாறு அமையும்? ஆகவே மேற்கூறிய கொள்கைகள் பொருந்தாதனவாம்.

முத்தி நிலையில் உயிர், உயிரினது அறிவு, சிவம் ஆகிய மூன்றும் உள்ளன. வேறு வகையாகக் கூறினால், அறிபவன், அறிவு, அறியப்படும் பொருள் ஆகிய மூன்றும் உள்ளன.

இவை மூன்றும் முறையே ஞாதுரு, ஞானம், ஞேயம் என வடமொழியிற் சொல்லப்படும் இம்மூன்றையும் 'திரிபுடி' என்பர். இம்மூன்றும் உள்ளனவாயினும் உயிர் அறிவதாகிய தன்னையும், தனது அறிவையும் அறியாது, சிவம் ஒன்றையே அறிந்து நிற்கும் நிலையே சித்தாந்த சைவம் கூறும் முத்தியாகும்.

சிவத்தோடு இரண்டறக் கலத்தல் என்பதற்குப் பொருள், அறிபவனாகிய உயிரும் அறியப்படும் பொருளாகிய சிவமும் வேறாய் நிற்றல் இன்றி, உயிர் யான் என்று தன்னையும், எனது என்று தனது அறிவையும் உணர்தல் இன்றித் தன்னையிழந்து சிவத்தோடு ஒன்றி அதுவாகி நிற்றல் என்பதாகும்.

சிவனது திருவருள் திருவடியாகச் சொல்லப் பெறும். முக்தியாவது திருவருள் வியாபகத்தில் உயிர் அடங்கி நிற்கும் நிலையாதலின் அதனை 'அடி சேர் முத்தி' என்பர்.

இம்முத்தி நிலை குளிர்ந்த நிழல்போல் அமைந்து உயிரின் பிறவி வெப்பத்தை நீக்கிப் பேரின்பத்தை அளித்தலால், இறைவனது திருவடி நிழல் என்று கூறுவது மரபாயிற்று.

## சித்தாந்தம்

சித்தாந்தம் என்பதற்கு முடிந்த முடிபு என்பது பொருள். ஒரு பொருளைப் பற்றி முதலில் ஆராயாமல் கொண்ட முடிபு நிலைத்த முடிபாகாது. நன்றாக ஆராய்ந்து பார்த்துப் பின்பு கொண்ட முடிபே நிலைத்து நிற்கும் முடிபாக விளங்கும். அதுவே முடிந்த முடிபு எனப்படும்.

ஒவ்வொரு சமயமும் தத்தம் கொள்கையே முடிந்த முடிபு எனக் கூறுகின்றது. இவ்வகையில் பௌத்த சித்தாந்தம், சமண சித்தாந்தம், வைணவ சித்தாந்தம் எனப் பல உள்ளன, ஆயினும், சித்தாந்தம் என்று சொன்னாலே அஃது ஏனைய சித்தாந்தங்களைக் குறிக்காமல் சைவ சித்தாந்தம் ஒன்றையே இன்று சுட்டி நிற்பதைக் காணலாம். இஃது ஒன்றே சைவ சித்தாந்தமே உண்மைச் சித்தாந்தம் என்பதைத் தெள்ளெனக் காட்டும்.

## சித்து:

பார்க்க: உயிர்.

## சிவ புண்ணியம்

சிவபெருமான் ஒருவனையே முதற்கடவுளாகக் கொண்டு, அவனை நோக்கிச் செய்யும் வழிபாடும் தொண்டும் சிவ புண்ணியம் எனப் பெயர் பெறும்.

சத்தி நிபாதம் நிகழ்ந்த பொழுதே உயிர் சிவபுண்ணியங்களைச் செய்ய முற்படும். சிவபுண்ணியமாகிய சத்தி நிபாதச் செயல்களை மூன்று வகையுள் அடக்கிக் கூறுவர். அவை சரியை, கிரியை, யோகம் என்பன.

சைவ நெறியில், சரியை, கிரியை, யோகம் என்னும் சிவ புண்ணியமே 'தவம்' எனப்படும். வீட்டைத் துறந்து காட்டிற் சென்று, உணவை வெறுத்தும் உடலை ஒறுத்தும் செய்யும் கடுமையான தவங்களும் சிவபெருமானை உணர்ந்து செய்யாத பொழுது தவம் ஆகா; வீட்டில் மனைவி மக்களோடு கூடியிருந்து மனையறம்

நடத்தினாலும், சிவ பெருமானையே நினைந்து சரியை முதலியவற்றைச் செய்யின் அவையே தவங்கள் ஆகும்.

## சரியை

சரியை என்பது சிவபெருமானது உருவத் திருமேனியை நோக்கிப் புறத் தொழில் அளவில் செய்யும் வழிபாடு ஆகும்.

திருக்கோயிலிற் சென்று அலகிடுதல், மெழுகிடுதல், விளக்கேற்று தல், மாலை தொடுத்துக் கொடுத்தல், உருவத் திருமேனியாகிய மகேசுவர மூர்த்தங்கள், விநாயகர் முதலிய பரிவார மூர்த்திகள் இவர்களுள் ஒருவரை நியமமாக வழிபடுதல், சிவனடியார்களை வழிபடுதல் முதலியன சரியை ஆகும்.

சிவனடியார் வழிபாடு சைவ நெறியில் சிறப்பிடம் பெற்றுள்ளது. அடியவர்கள் சிவனெனவே வணங்குதற்கு உரியர். சிவனடியார்களின் நாட்களைக் கொண்டாடுதல் மகேசுவர பூசை எனப்படும். சைவ சமய ஆசாரியரும், சந்தான ஆசாரியரும், பெரிய புராண நாயன்மாரும், பிறரும் முத்தியடைந்த நாட்களில் அவரை நினைந்து சிறப்பு வழிபாடு நிகழ்த்தி, அடியவர்களையும் எளியவர்களையும் அமுது செய்வித்தல் மகேசுவர பூசையாகும்.

## கிரியை

கிரியை என்பது சிவபெருமானுடைய அருவுருத் திருமேனியாகிய சிவ லிங்கத்தை நோக்கி அகத் தொழில், புறத் தொழில் இரண்டினாலும் செய்யும் வழிபாடு ஆகும்.

இலிங்க மூர்த்தியை எழுந்தருள்வித்து, தூபம் தீபம், திருமஞ்சனம், நறுமலர், திருவமுது போன்ற பூசைப் பொருள்களைத் திரட்டிக் கொண்டு, பூத சுத்தி முதலிய ஐந்து சுத்திகளைச் செய்து, உரிய ஆசனத்தில் அமர்ந்து, மெய்யன்போடு அர்ச்சனை செய்து தியானித்து வழிபடுதலாகிய இஃது ஆன்மார்த்த பூசை எனப்படும்.

## யோகம்

யோகமாவது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு நிலைகளில் படிப்படியாக நிற்றல் ஆகும். அஃதாவது, உலகப் பொருள்களில் செல்லும் ஐம்புலன்களையும் ஒடுக்கி, உள்ளும் புறமும் செல்லும் மூச்சுக் காற்றினைத் தடுத்து நிறுத்தி, மனத்தை ஒருநிலைப்படுத்திப் பரம்பொருளை ஒளிவடிவமாகத் தியானித்தல் எனச் சுருங்கச் சொல்லலாம்.

அட்டாங்க யோகம் எனப்படும் இஃது இந்து சமயத்திற்குப் பொது; சைவத்திற்கும் உரியது.

மேற்கூறிய சரியை முதலிய சிவபுண்ணியங்களைப் படிமுறையில் செய்து வரின் இருவினையொப்பு உண்டாகி முறையே பெருகிவரும். யோகத்தின் முதிர்ச்சியில் இருவினை ஒப்பும் முற்ற நிகழும். அந்நிலையிலேயே சிவபெருமான் ஞானாசிரியராக வந்து ஞானத்தை நல்குவான்.

## சிவம்

சிவம் என்னும் சொல் மங்கலம் என்னும் பொருள் உடையது. மங்கலம் என்பது நன்மை. எனவே, சிவமுதற் பொருள் நன்மையே வடிவானது; எல்லா நன்மைகளையும் குறைவற உடையது என்பது புலனாகும்.

மங்கலத்திற்கு மாறானது அமங்கலம். அஃதாவது தீமை. தீமையான ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களே ஆகும். ஆணவம் அறியாமையைச் செய்வதனாலும், கன்மம் பிறவித் துன்பத்தைத் தருவதனாலும், மாயை அசுத்தமாய் நின்று மயக்கத்தைச் செய்வதனாலும் தீயன எனப்பட்டன. இம் மும் மலங்களுக்குட்பட்டு வருந்துவன உயிர்களே. இறைவன் மலத்தொடு சிறிதும் தொடர்பின்றி நிற்பவன் ஆதலின் 'நின்மலன்' எனப்படுகிறான்.

மலத்தொடர்பினால் வருவதே பிறவி. உயிர்கள் பிறவிக் கடலில் வீழ்ந்து கிடப்பன. மலத் தொடர்பு இன்மையால் இறைவனுக்கு எக்காரணம் பற்றியும் பிறவி இல்லை. இது பற்றியே சிவபெருமான் 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்று போற்றப்படுகிறான். கடவுளைப் பிறப்பில்லாதவன் என்று போற்றும் நிலை சைவ சமயத்திற்கே உரியது.

சிவன் என்னும் சொல்லின் பொருளை உணர்த்துவாராய், ஞானசம்பந்தர் 'நன்றுடையானை தீயதில்லானை' என்று கூறியருளி னார். 'சிவன் எனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்' என்று தெளிவுறுத்தினார் திருநாவுக்கரசர்.

## சீவன் முத்தி

பரமுத்தியாகிய பேரின்ப நிலையை இவ்வுலகில் இவ்வுடம்போடு கூடியுள்ள போதே பெற்றிருத்தல் சீவன் முத்தி எனப்படும்.

சீவன் முத்தியை அடைந்தோர் உலக நினைவின்றி எப்பொழுதும் இறைவனிடத்திலேயே அழுந்தியிருப்பர். இந்நிலையே நிட்டை நிலை என்பது. இந்நிலையில் பகல் இரவு முதலிய கால வேறுபாடுகளும் உலக

நிகழ்ச்சிகளும் புலனாகா. 'எனை நான் என்பதறியேன் பகல் இரவாவதும் அறியேன்' என்று மாணிக்கவாசகர் கூறியதும் இந்நிலையேயாம். இதன்கண் தோன்றும் சிவானந்தமாகிய ஞானக் கடலமுதை உண்டு திளைப்பர்.

சீவன் முத்தி நிலைக்கும் பரமுத்தி நிலைக்கும் இன்ப நுகர்ச்சியில் வேறுபாடு இல்லை. உடம்பு இருத்தலும் இல்லாமையும் ஆகிய அஃதொன்றே வேறுபாடு. எனவே பரமுத்தியில் உடம்பு நீங்கிப் பெறும் பேரின்பத்தைச் சீவன் முத்தர் உடம்பொடு கூடியே பெறுகின்றனர் எனலாம்.

பிராரத்த வினை காரணமாக இன்பம் வரினும் துன்பம் வரினும் சீவன் முத்தர் தாமரையிலையில் நீர் போலச் சிறிதும் பற்றின்றி ஒரு தன்மையராய் இருப்பர். இறைவன் திருவடியை எப்பொழுதும் பிரியாது நிற்றலால் அவர்க்கு எந்நாளும் இன்பமேயன்றித் துன்பமில்லை.

அவர்களது அறிவும் இச்சையும் செயலும் இறைவனிடத்தேயே அழுந்தியிருக்கும். அவை உலக முகப்பட்டுப் புறத்தே செல்லும் பொழுதெல்லாம் அவர்கள் திருக்கோயில்களுக்குச் சென்று வணங்குதல், மெய்யடியார்களோடு கூடி இறைவனது புகழைப் பேசி இன்புறுதல் ஆகியவற்றையே செய்வர்.

பிராரத்த வினை உள்ள அளவும் அவர்களுக்கு உடம்பு இருக்கும். உடம்பு நீங்கியவுடன் பரம சிவனோடு இரண்டறக் கலத்தலாகிய பரமுத்தியைப் பெறுவர்.

சீவன் முத்தரைத் தமிழில் 'அணைந்தோர்' என்பர்.

**சுத்தம்**

பார்க்க: அவத்தை

**சுத்த மாயை**

பார்க்க: மாயை

**ஞானம்**

ஞானம் என்பது பாசம், பசு, பதி என்னும் முப்பொருள்களின் இயல்பை உள்ளவாறு உணர்தல், தமிழில் இது மெய்யுணர்வு எனப்படும்.

ஞானம், நூல்களைக் கற்பதனால் மட்டும் உண்டாகாது. உலக ஆசிரியன்மார் உணர்த்துவதாலும் வாய்த்துவிடாது. இறைவனே குருவாக வந்து உணர்த்தும் போதுதான் முப்பொருள் இயல்பும்

உள்ளவாறு விளங்கித் தோன்றும். இறைவன் ஒருவனே ஞானத்தைத் தரவல்லவன் என்பது சைவ சித்தாந்த முடிபாகும்.

ஞானத்தில் நான்கு படி நிலைகள் உண்டு. அவை கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை என்பன. ஞான குருவின் உபதேசத்தைக் கேட்டலும், பின் அதனைச் சிந்தித்தலும், பின் அவ்வுபதேசப் பொருளைத் தெளிதலும், தெளிந்தவாறே நிட்டை கூடுதலும் என அவை நிகழும்.

ஞானாசிரியர் சிவமேயாதலின் அவர் பின்வருமாறு உணர்த்துவார்: "நீ இதுகாறும் ஐம்பொறி முதலியவற்றில் கட்டுண்டு அவற்றையே நான் எனக்கருதி நின்றாய். அலையெல்லாம் அறிவற்ற சடப் பொருள்கள். நீயோ எம்மைப் போன்ற சித்துப் பொருள். ஆதலால் அவற்றை விட்டொழித்து உன்னோடு என்றும் நீங்காது உனது அறிவை விளக்கி வருகின்ற எம்மையே உணர்ந்து நிற்பாயாக," என உபதேசிப்பார். அதனைக் கேட்டுப் பலகாலும் சிந்திக்கின்ற பொழுது தெளிவு உண்டாகும். அத் தெளிவுணர்வின் பயனாக உயிர்க்குயிராய் விளங்கும் சிவமுதற் பொருளை அனுபவமாகக் கண்டு அதனோடு ஒன்றி அழுந்தியிருத்தலே நிட்டை நிலையாகும்.

## ஞானாசிரியர்

என்றும் உள்நின்று உணர்த்திவரும் இறைவனே ஞானம் பெறவேண்டும் என்னும் வேட்கையுற்று உயிருக்கு அப்பருவம் அறிந்து குரு மூர்த்தியாய் வந்து உண்மை ஞானத்தை உணர்த்துவான் என்பது சைவசமயத்தின் சித்தாந்தம், முடிந்த முடிவு, ஆகும்.

இறைவன் குருவாய் வருவான் என்பதன் பொருள், மலமாசு தீர்ந்த முத்தான்மாவாய் உள்ளவரிடத்தில் இறைவன் அவரே தானாய் ஒன்றி நின்று உணர்த்துவான் என்பதேயாகும். உலையில் பழுக்கக் காய்ச்சிய இரும்பு தன் தன்மையிழந்து நெருப்பாய் நிற்றல் போல அம்முத்தர் சிவத்தைப் பொருந்திச் சீவன் என்னும் தன்மை நீங்கிச் சிவமாய் நிற்பார் என அறிதல் வேண்டும்.

பேய்பிடித்த ஒருவரது செயலெல்லாம் அவர் செயல் ஆகாது. பேயின் செயலேயாதல் போல, முத்தரிடத்தில் சிவன் ஒன்றி நின்று 'இவன் செயலெல்லாம் என் செயல்' எனக் கொண்டு நிற்பன் ஆதலால், ஞானத்தை உணர்த்துதலாகிய செயலும் அம்முத்தர் செயல் ஆகாது சிவன் செயலேயாகும் என்பதே உண்மையாகும்.

தன் தன்மை என்பதின்றிச் சிவமேயாய் நின்று ஞானத்தை உணர்த்தும் அம்முத்தரை நம்மவருளே ஒருவராகக் கருதாது சிவன் எனவே காணுதல் வேண்டும்.

## தத்துவங்கள்

மாயை என்னும் மூலப் பொருளிலிருந்து தோன்றும் காரியமே உலகமும் உலகப் பொருள்களும். இக்காரியங்கள் மாயையிலிருந்து நேரே தோன்றுவதில்லை. முதலில் தத்துவங்கள் என்னும் கூறுகள் மாயையிலிருந்து தோன்றும். பின்னர் அத்தத்துவங்களின் காரியமாக உலகமும் உலகப் பொருள்களும் தோன்றும்.

மாயை சுத்தமாயை என்றும், அசுத்த மாயை என்றும் இரு பகுதிப்பட்டு நிற்கும். இம்மாயைகளினின்றும் தோன்றும் தத்துவங்கள் வருமாறு:

சுத்தமாயையில் தோன்றும் தத்துவங்கள் சிவம், சக்தி, சாதாக்கியம், ஈசுரம், சுத்த வித்தை என்னும் ஐந்து ஆகும். இவை சுத்த மாயையின் காரியங்கள் ஆதலின் சுத்த வித்தை என்னும் ஐந்து ஆகும். இவை சுத்த மாயையின் காரியங்கள் ஆதலின் சுத்த தத்துவங்கள் எனப்படும். ஐந்தொழில் செய்யுங்கால் இறைவனாகிய சிவன் இவற்றை நேரே இடமாகக் கொண்டு நிற்பன் ஆதலின், அவனுக்கு இடமாகுதல் பற்றி இவை சிவ தத்துவங்கள் என்றும் கூறப்படும்.

அசுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள் ஏழு. அவை காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பன. இவற்றுள் மாயை இறுதியில் சொல்லப்பட்டதாயினும் அதுவே முதல் தத்துவம். மாயை என்பது அசுத்த மாயையின் ஒரு பகுதியே. அதிலிருந்தே காலம் முதலிய ஏனைய தத்துவங்கள் தோன்றும். உயிர்கள் வினைகளை ஈட்டுவதற்கும், வினைப் பயன்களை அனுபவித்துக் கழிப்பதற்கும் கருவியாய் இருப்பது காலம். அவரவர் வினைப் பயன் அவரவரைச் சென்று சேரும்படி செய்விப்பது நியதி. கலை என்ற தத்துவம் உயிரை மறைத்துள்ள ஆணவ மல மறைப்பைச் சிறிது நீக்கி அதன் கிரியா சக்தியை (செயலாற்றலை) விளக்குவதாம். வித்தை என்ற தத்துவம் உயிரின் ஞான சக்தியை (அறிவாற்றலை) விளக்கும். அராகம் என்ற தத்துவம் உயிரின் இச்சா சக்தியை (விழைவாற்றலை) விளக்கும். காலம் முதலாகச் சொல்லப்பட்ட இவ்வைந்து தத்துவங்களும் உயிரின் செயற்பாட்டிற்கு இன்றியமையாதனவாம். இவை என்றும் உயிரோடு ஒட்டியே இருத்தலின் ஐந்து சட்டைகள் என்னும் பொருளில் இவற்றைப் 'பஞ்ச கஞ்சுகம்' என்பர். இவற்றோடு கூடிய உயிர் உலகத்தை நுகர்தற்குத் தகுதி பெற்று நிற்கும். அந்நிலையில் அவ்வுயிர் புருடன்

எனப்படுகிறது. எனவே புருடன் என்பது ஏனையே தத்துவங்களைப் போல ஒன்றிலிருந்து தோன்றிய தனித் தத்துவம் அன்று என்பது விளங்கும்.

இத் தத்துவங்கள் ஏழும் வித்தியா தத்துவங்கள் என்னும் பெயரைப் பெறும்.

இவற்றுள் ஒன்றாகிய கலையிலிருந்து பிரகிருதி என்னும் தத்துவம் தோன்றும். பிரகிருதி மாயை என்றும் இதனைக் குறிப்பர். பிரகிருதி சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னும் முக்குண மயமாய் நிற்கும். அம் முக்குணங்களும் சிறிதும் வெளிப்படாமல் நுட்பமாய் அடங்கி நிற்கும். இந்நிலையிலுள்ள பிரகிருதியிலிருந்து இருபத்து நான்கு தத்துவங்கள் தோன்றும் அத்தத்துவங்களில் மேற்கூறிய முக்குணங்களும் வெளிப்பட்டு நிற்கும். ஆயின், ஒவ்வொரு குணம் மேலோங்கி நிற்க, மற்றையவை கீழ்ப்பட்டு நிற்கும். அவ்வாறு தோன்றுகிற தத்துவங்கள் (அந்தக்கரணங்கள்) நான்கும், ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்தும், தன்மாத்திரைகள் ஐந்தும், பூதங்கள் ஐந்தும் ஆகும். இவ்விருபத்து நான்கினையும் ஆன்ம தத்துவங்கள் என்பர்.

இவ்வாறு தோன்றும் தத்துவங்கள் முப்பத்தாறு. அவற்றுள் சுத்த மாயையின் காரியமாகிய சிவ தத்துவம் ஐந்தும் இறைவனுக்கு இடமாகி நின்று, தமக்குக் கீழ் உள்ள தத்துவங்களை இயக்கி நிற்கும். அசுத்த மாயையின் காரியமாகிய வித்தியா தத்துவம் ஏழும் உயிரை உலக போகத்தை நுகர்தற்குத் தகுதியுடையதாகச் செய்யும். பிரகிருதியின் காரியமாகிய ஆன்ம தத்துவம் இருபத்து நான்கும் உயிருக்கு நுகர்ச்சியைத் தரும்.

இத்தத்துவங்கள் யாவும் தாமே தோன்றுவனவும் அல்ல; தாமாகச் செயற்படுவனவும் அல்ல. சிவ சக்தி தோற்றுவிக்கவே இவை தோன்றும், சிவசக்தி உடனிருந்து செலுத்தவே இவை தொழிற்படும்.

இத்தத்துவங்களுள் சிவம் என்னும் தத்துவமே முதலில் தோன்றியதும், மற்ற எல்லாவற்றிற்கும் மேல் உள்ளதும் ஆகும். இத்தத்துவம் நாதம் என்றும் சொல்லப்படும். ஆகவே, முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்த நிலையை 'நாதாந்தம்' என நூல்கள் குறிப்பிடும்.

எல்லாவற்றிற்கும் முன்னர்த் தோன்றியது சிவம் எனப்படும் நாத தத்துவம் எனில், எல்லாவற்றிற்கும் பின்னர் தோன்றுவது பூதங்களுள் கடைசியாக உள்ள நிலம் என்னும் தத்துவமேயாகும். இது பற்றியே, தத்துவங்களின் தொகையைக் கூறும் பொழுது, நாதம் முதல் நிலம்

முடிய உள்ளவை என நூல்கள் கூறும். இவ்வாறு கூறுவது தோற்ற முறை பற்றியாம். ஒடுக்க முறை பற்றிக் கூறும் பொழுதும் நிலம் முதல் நாதம் முடிவானவை என்று கூறப்படும்.

மற்ற இந்திய தத்துவங்கள் பிரகிருதியிலிருந்து தோன்றும் இருபத்து நான்கு தத்துவங்களையே கொள்ளும். சைவ சமயம் ஒன்றே அவற்றிற்கு மேலே வித்தியா தத்துவங்கள் ஏழும், சிவ தத்துவங்கள் ஐந்தும் ஆகிய பன்னிரண்டு தத்துவங்களைச் சேர்த்து முப்பத்தாறு எனச் சிறப்பாகக் கொள்ளும்.

## தவம்

பார்க்க: சிவபுண்ணியம்.

## திருவைந்தெழுத்து

சிவமூல மந்திரமாகிய திருவைந்தெழுத்து, அனைத்து நூல்களின் முடிவாய் உள்ள மகாவாக்கியம் எனப்படும்.

சி வா ய ந ம என்னும் திருவெழுத்து ஐந்தும் முறையே சிவம், அருள், உயிர், திரோதான சக்தி, ஆணவ மலம் என்னும் பொருள்களைக் குறிப்பன.

நடுவண் உள்ள 'ய' ஆகிய உயிர் பின்னுள்ள 'ம' ஆகிய ஆவண மலத்துட்பட்டு அறியாமையில் அழுந்தியும், 'ந' ஆகிய இறைவனது திரோதான சக்தியால் செலுத்தப்பட்டு மாயை, கன்மங்களைப் பொருந்தி உலக போகத்தில் அழுந்தியும் நிற்கும். எனவே, 'நம' என்ற ஈரெழுத்துக்களும் முறையே சகலம், கேவலம் ஆகிய நிலைகளைக் குறிக்கின்றன என்பது விளங்கும். உயிர் 'நம' வில் அழுந்தியிருக்கும் நிலையே கட்டு நிலை.

'ய' ஆகிய உயிருக்கு முன்னுள்ள 'சி', 'வா' என்பவை தந்தையும் தாயுமாய் உள்ள சிவமும், அதனைப் பிரியாத திருவருளும் உயிர் உணர்வில் உடனாகக் கலந்திருப்பதை உணர்த்தும். உயிர் தனக்கு முன்னாகவுள்ள அம்மையப்பரைத் தன் அறிவின்கண் காண முற்படாமல், உலகத்தை மட்டுமே அறிந்து அனுபவித்து வருகிறது.

உயிர் நம வை விடுத்து, அறியாமையாகிய கேவலமும், சிற்றறிவாகிய சகலமும் அணுகாதவாறு, 'வா' ஆகிய திருவருளைச் சார்ந்து நிற்பதே சுத்த நிலையாகும். திருவருள் அவ்வுயிரைச் சிவத்திடம் சேர்ப்பிக்கும். சிவத்தில் அழுந்தி நிற்றலே இன்புறு நிலையாகும்.

'நகாரம்' முதலாக ஓதுவார்க்கு உலகப் பயன் கிடைக்கும் என்றும், உலகப் பயனில் நாட்டமின்றிப் பிறவி நீக்கத்தை வேண்டுவோர் 'சிகாரம்' முதலாக ஓதவேண்டும் என்றும் நூல்கள் கூறும்.

## திரோதான சக்தி

பார்க்க: ஐந்தொழில்

## தீக்கை

தீக்க (தீட்சை) என்பதற்கு அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைத் தருவது என்பது பொருள்.

தீக்கை, அதனைப் பெறுதற்கு உரியோரது சத்தி நிபாத நிலையை (பக்குவ நிலையை) நோக்கியே செய்யப்படும்.

## தீக்கையின் வகைகள்

அவரவரது தகுதி நிலைக்கேற்பத் தீக்கை பல வகையாய் நிகழும். அவை:

### நயன தீக்கை

ஞானாசிரியர் தமது கண்களைச் சிவனது கண்களாகப் பாவித்து அவற்றால் நோக்கி மாணவனைச் சிவமாந் தன்மை அடையச் செய்தலே நயன தீக்கையாகும்.

### பரிச தீக்கை

ஞானாசிரியர் தமது கையைச் சிவனது கையாகப் பாவித்து அதனால் மாணவனது தலையைத் தொட்டு அவனைச் சிவமாம் தன்மையை அடையச் செய்தலே பரிச தீக்கையாகும். ஆசிரியர் தமது பாதங்களைச் சிவனது பாதங்களாகப் பாவித்து அவற்றை மாணவனது தலைமேற் சூட்டுதலும் பரிச தீக்கையே ஆகும். இதனைத் திருவடி தீக்கை என்பர்.

### வாசக தீக்கை

ஞானாசிரியர் மகா வாக்கியங்களையும், திருவைந்தெழுத்து மந்திரத்தையும் அவற்றின் பொருளோடு மாணவனுக்கு உபதேசித்தலே வாசக தீக்கையாகும்.

### மானச தீக்கை

ஞானாசிரியர் யோக முறையினாலே தமது உடலினின்றும் மாணவனது இதயத்திற் புகுந்து, அவனது ஆன்ம சக்தியை வாங்கிக் கொணர்ந்து, தமது இதயத்தில் உள்ள சிவவொளியுடன் கலக்கச் செய்து அதனால் மாணவனது ஆன்மாவைச் சிவமாகச் செய்து, மீண்டும்

அவ்வான்ம சக்தியை முன்போல யோகமுறையில் மாணவனது இதயத்தில் சேர்த்தல் மானச தீக்கையாகும்.

### சாத்திர தீக்கை

ஞானாசிரியர் தாம் அறிவுறுத்திய உபதேச மொழிகளில் மாணவனுக்குத் தெளிவு பிறக்கும் பொருட்டு ஞான சத்திரங்களை உணர்த்திச் சிந்திக்கச் செய்தல் சாத்திர தீர்க்கையாகும்.

### யோக தீக்கை

ஞானாசிரியர், மாணாக்கன் ஆதார யோகம், நிராதார யோகம் ஆகியவற்றை மேற்கொள்ளுமாறு பயிற்றுதல் யோக தீக்கையாகும்.

### ஔத்திரி தீக்கை

ஞானாசிரியர், மாணாக்கனுக்கு உண்மை ஞானம் விளங்குவதற்குத் தடையாய் உள்ள சஞ்சித வினைகளை, ஓமகுண்டத்தில் எரி வளர்த்து ஆகுதி செய்யும் முறையாகிய அக்கினி காரியத்தால் போக்குதலே ஔத்திரி தீக்கையாகும்.

ஔத்திரி தீக்கையை ஆசிரியர் செய்யும் முறை இரண்டு. அவை கிரியாவதி, ஞானவதி என்பன.

அவற்றுள் கிரியாவதியாவது, குண்டம், மண்டலம் முதலியவற்றை வெளியிலே பலர் காணும்படி அமைத்துக் கொண்டு செய்வது. ஞானவதியாவது, அவற்றை வெளியே கொள்ளாமல், மனத்தால் செய்யப்படும் பாவனையினாலே அமைத்துக் கொண்டு செய்வது.

ஞானவதியாகவாயினும், கிரியாவதியாகவாயினும் செய்யப்படும் ஔத்திரி தீக்கை சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம் என நான்கு வகைப்படும்.

### சமய தீக்கை

அவற்றுள் முதலில் செய்யப்படுவது சமய தீக்கையாகும். இது சிறிய அளவில் செய்யப்படும். தீக்கை செய்யும் இடம் தீக்கைமண்டபம் எனப்படும். அவ்விடத்தில் சிவ வழிபாடுகளைச் செய்வித்து, சம்பாத ஓமம் என்னும் ஓமத்தைச் செய்து, அதன் பயனாக மாணாக்கனது ஆன்மாவைத் தூய்மைப் படுத்தி, சிவ மூல மந்திரத்தை (திருவைந்தெழுத்தை) உரிய முறையில் உபதேசித்து, நாள் தோறும் செய்தற்குரிய அனுட்டானங்களைச் செய்யும்படி பணித்து, சைவ சமய ஒழுக்கத்தை மேற்கொள்ளும்படி செய்வது சமய தீக்கையாகும்.

சமய தீக்கை பெற்றவன் 'சமயி' எனப்படுவான். சிவாகமங்களைக் கேட்டல், கோத்திர சாத்திர பாராயணம், சிவாலய தரிசனம், சிவாலயப் பணி முதலிய சரியைத் தொண்டுகளைச் செய்ய அவன் உரியவனாவான்.

## விசேடதீக்கை

சமய தீக்கைக்குப் பின்பு மாணவனைச் சிவ புத்திரனாகச் செய்யும் கிரியையே விசேட தீக்கையாகும். இத்தீக்கை பெற்றவன் 'புத்திரன்' எனப்படுகிறான்.

இவ்விசேட தீக்கையில் ஆன்மார்த்த சிவபூசை நியமம் ஆக்கப்படும். ஆன்மார்த்த பூசையே கிரியை என்னும் தொண்டாகும்.

கிரியையில் நின்ற மாணவன் பின்னர் யோகத்தில் விருப்பம் உடையனாயின், அதனைச் செய்யும் முறையும் ஆசிரியரால் உணர்த்தப்படும்.

## நிருவாண தீக்கை

சமயம், விசேடம் என்னும் தீக்கைகளைப் பெற்றுச் சரியை கிரியை யோகங்களில் நின்று, பக்குவ முதிர்ச்சி பெற்று, உலகப் பொருளில் வெறுப்பும் வீடு பேற்றில் விருப்பும் நிகழப் பெற்றோர்க்கு வீடு பேற்றிற்கு வழியாகிய ஞானத்தைத் தரும் முறையே நிருவாண தீக்கையாகும். இதனை ஞானதீக்கை எனவும் வழங்குவர்.

ஞானத்திற்குத் தடையாகிய சஞ்சித வினைகள் ஆறு அத்துவாக்களை இடமாகக் கொண்டிருக்கும். வீடு பேற்றை விரும்பும் மாணக்கனுக்கு ஆசிரியர் அக்கினி காரியத்தில் அந்த ஆறு அத்துவாக்களிலும் உள்ள சஞ்சித கன்மத்தைப் போக்குவர். இவ்வாறு வினை மாசு நீங்கித் தூய்மை பெற்ற நிலையில் ஆசிரியர் ஞானத்தை உணர்த்துவார். அம்மாணாக்கன் அவர் உணர்த்திய ஞானத்தை உணர்த்தியவாறே கொண்டு வீடு பேற்றினை அடைவான்.

அத்துவாக்களில் உள்ள சஞ்சித வினைகளைப் போக்கும் செயல் 'அத்துவ சக்தி' எனப்படும்.

## அபிடேகம்

இதனை ஆசாரிய அபிடேகம் என்பர். ஆசாரியர் ஆகும் தன்மையுடையோர்க்கே இது செய்யப்படும். இதனைப் பெற்றோர் பிறர்க்குத் தீக்கை செய்யும் உரிமை உடையராவர்.

இங்ஙனம் தீக்கைகள் பலவகையாய்ச் செய்யப்படுகின்றன. உண்மையில் தீக்கை பயன் தருதல், அதனைச் செய்விக்கும் ஆசிரியர்,

அதனைப் பெறும் மாணாக்கர் ஆகிய இருவரது தகுதியையும் பொறுத்தது ஆகும்.

### நிட்டை

பார்க்க: சீவன் முக்தி

### பசு

பார்க்க: உயிர்

## பசு ஞானம்

பாசமாகிய உலகப் பொருள்களின் வயப்பட்டு அவையே தானாக மயங்கி அறிந்து வரும் உயிர் திருவருள் உபதேசம் பெற்று, ஐம்பொறி முதலிய கருவிகளும் உலகப் பொருள்களும் ஆகிய அவை அறிவற்ற சடப் பொருள் என்பதையும், தானல்ல என்பதையும், தான் அவற்றிற்கெல்லாம் மேலாகிய சித்துப் பொருள் என்பதையும் உணரும். அவ்வாறு உணர்ந்து தன்னைக் கருவி கரணங்களின் வேறாகக் கண்டு நீங்கும்.

இயற்கையாக உயிர் விரிந்த அறிவுடையது. உடம்பும் ஐம்பொறி முதலிய கருவிகளும் அதன் வியாபக அறிவை விளங்க வொட்டாமல் தடுத்துச் சிற்றறிவைச் செய்து வந்தன. அவற்றை வேறாகக் கண்டு நீக்கியவுடன் உயிரின் வியாபக அறிவு விளங்கித் தோன்றும். அதனால் எல்லாவற்றையும் அறியும் நிலை உண்டாகும். இதனைக் கண்டு வியந்த உயிர் அந்நிலையில் தன்னையே பரம்பொருள் என மயங்கி அறியும். அப்பொழுதும் தனது வியாபக அறிவை விளக்கி நிற்பது முதல்வனது திருவருளே என்பதை உணர்வதில்லை.

இவ்வாறு பசுவாகிய தன்னையே பரம்பொருளாக மயங்கி அறியும் அறிவு பசு ஞானம் எனப்படும்.

## பத முத்தி

சரியை, கிரியை, யோகம் ஆகிய சிவ புண்ணியங்களைச் செய்தோர் இடைநிலைப் பயனாக அடைவது பதமுத்தியாகும். பதம் என்ற சொல் பதவி எனப் பொருள்படும். பத முத்திக்குரிய உலகங்கள் உள்ளன. அவ்வுலகங்களிற் சென்று சாலோகம், சாமீபம், சாரூபம் ஆகியவற்றைப் பெறுவர்.

### சாலோகம்

அவ்வுலகங்களில் எங்கும் தடையின்றி இயங்கும் உரிமையைப் பெறுதல் சாலோகம் எனப்படும். ஒரு மனையில் பணிபுரியும் பணியாளர்

அம்மனையினுள் எங்கு வேண்டினும் செல்லும் உரிமையைப் பெற்றிருத்தல் போன்றது இது. இது பற்றியே இப்பயனைத் தரும் சரியை வழிபாடு தாச மார்க்கம் என்று கூறப்படுகிறது. தமிழில் அடிமை நெறி எனப்படும்.

### சாமீபம்

அவ்வுலகங்களில் மேற்கூறிய பணியாளர் போல அகல நில்லாது மைந்தர் போல அங்குள்ள புவன பதிகளாகிய தலைவர்களோடு அருகிருக்கும் உரிமையைப் பெறுதல் சாமீபம் ஆகும். இதுபற்றியே இப்பயனைத் தரும் கிரியை வழிபாடு சற்புத்திர மார்க்கம் என்று கூறப்படுகிறது. தமிழில் மகன்மை நெறி எனப்படும்.

### சாரூபம்

அவ்வுலகங்களில் தோழர் போல அப்புவன பதிகளோடு ஒத்த உருவம், பெயர் முதலியன பெற்று அளவளாவி இருக்கும் உரிமையை உடையவராதல் சாரூபம் ஆகும். இது பற்றியே இப்பயனைத் தரும் யோக வழிபாடு சக மார்க்கம் என்று கூறப்படுகிறது. தமிழில் தோழமை நெறி எனப்படும்.

பத முத்தியை அடைந்தோர் மீண்டும் நிலவுலகிற் பிறந்து, ஞானம் பெறுதற்கு வாய்ப்பான நல்ல சூழலைப் பெற்று, தவத்தை முற்றச் செய்து, குருமூர்த்தியின் அருளால் ஞானத்தை அடைந்து பின் முடிவான பரமுத்தியினை எய்துவர்.

சரியை முதலியற்றிற்கு இடை நிலைப் பயன் பத முத்தியாயினும், உண்மைப் பயன் ஞானமே யாகும்.

### பதி

சைவ சமயம் இறைவனைச் சிவன் என்னும் சிறப்புப் பெயரால் வழங்கும்; ஆயினும் தத்துவ முறையில் கூறும்போது பதி என்றே குறிப்பிடும்.

பதி என்பற்குக் காப்பவன் என்பது பொருள். தன்னைச் சார்ந்தாரைக் காப்பவனே தலைவன் ஆவான். இறைவன் தன் கீழ் உள்ள உயிர்களுக்கு நலம் செய்து காப்பவன் ஆதலில் பதி எனப்பட்டான்.

பதிப்பொருள் ஒன்றே; பல இல்லை. சிவபெருமான் ஒருவனே பதி என்பதையும், ஏனைய தேவர்கள் அனைவரும் உயிர் இனத்தவராகிய பசுக்களே என்பதையும் அறிந்து பரம்பொருளையே வழிபடுதல் வேண்டும்.

பதியின் இயல்புகளாகச் சைவ சிந்தாந்தம் கூறுவன எண் குணங்கள் ஆகும். அவை தன் வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவிலா ஆற்றல் உடைமை, வரம்பிலா இன்பம் உடைமை என்பன.

## பதி ஞானம்

பதிப் பொருளினது அறிவு பதிஞானம் எனப்படும். பதி சிவமேயாதலின் அது சிவஞானம் என்றும் கூறப்படும்.

இறைவன் பாச ஞானத்தாலும், பசு ஞானத்தாலும் அறியப்படாதவன். கருவி காரணங்களால் வரும் அறிவு பாச ஞானமாகும். ஐம்பொறி முதலிய கருவிகள் எல்லாம் அழியும் பொருள்கள் ஆதலின் அவற்றைக் கொண்டு அழியும் பொருள்களை அறிய முடியுமே அன்றி, அறிவில்லாத பரம்பொருளை அறிய இயலாது. இனி, உயிரறிவாகிய பசுஞானமும் தானே தனித்து நின்று இறைவனை அறிய மாட்டாது. அதனால் அவன் பாச ஞானம், பசு ஞானம் ஆகியவற்றுக்கு அகப்பட்டான் என்பதே உண்மையாகும். இறைவனை மனம், வாக்குக்கு எட்டாதவன் என்று கூறும் பொழுது, மனம் என்பது பசு ஞானத்தையும், வாக்கு என்பது பாச ஞானத்தையும் குறித்து நிற்கும்.

பதியாகிய முதல்வனை அவனது அறிவாகிய பதி ஞானத்தைக் கொண்டே அறிதல் இயலும். பதி ஞானமே திருவருள் எனப்படுகிறது. ஆதலில் 'அவனருளே கண்ணாகக் காணுதல்' என்றும் 'அவனருளாலே அவன் தாள் வணங்குதல்' என்றும் பெரியோர்கள் அனுபவமாகக் கண்டு கூறியுள்ளார்கள்.

## பரமுத்தி

முடிவான ஞானத்தைப் பெற்று, நிட்டையில் மீளாது நிற்கும் நிலையுடையோர், உடல் கழன்று, சிவபெருமானோடு இரண்டறக் கலத்தலாகிய பேரின்ப நிலையைத் தலைப்படுவர். இதுவே முடிவான பரமுக்தியாகும். 'சாயுச்சம்' என்றும் இதனைக் கூறுவர்.

## பாச ஞானம்

உலகமும் உலகப் பொருள்களும் பாசமாகிய மாயையினின்றும் தோன்றியவை. எனவே அவை பாசப் பொருள்கள் எனப்படும். அவற்றை உயிர், கண் முதலிய புறக்கருவிகளையும், மனம் முதலிய அகக் கருவிகளையும் கொண்டு அறியும். அக்கருவிகளும் மாயையின் காரியங்களேயாகும். இவ்வாறு அறியப்படும் பொருள்களும் அறிதற் கருவிகளும் ஆகிய அனைத்தும் பாசமேயாதல் விளங்கும். இவை

சடமாயும் உயிருக்கு வேறாயும் உள்ளவை. ஆனால் உயிர் சித்தியாகிய தனது உண்மை நிலையை அறியாது, சடமாகிய இவற்றையே தானாக மயங்கியறியும், அவ்வறிவு பாச ஞானம் எனப்படும்.

பாசமாகிய கருவிகளைக் கொண்டு, பாசமாகிய பொருள்களை அறியும் அறிவு பாச ஞானம் ஆயிற்று.

## பாசம்

பாசம் என்ற சொல் கட்டுதலைச் செய்வது என்ற பொருளைத் தரும்.

குற்றவாளிகளின் கையிலும் காலிலும் மாட்டப்படும் விலங்கு அவர்களைச் செயற்படவொட்டாமற் செய்கிறது. அது போல உயிர்களைப் பிணித்து, அவற்றின் அறிவு, செயல்களைக் கட்டுப்படுத்தி நிற்பவை மூன்றாகும். அவை ஆணவம், கன்மம், மாயை என்பன. இம்மூன்றுமே பாசம் எனப்படும்.

பாசம் என்பதற்கு இணையான தமிழ்ச் சொல் தளை என்பது.

## பிரகிருதி

பார்க்க: தத்துவங்கள்

## பிரளயாகலர்

பார்க்க: உயிர்

## பிராரத்தம்

பார்க்க: வினை

## பெத்தம்

கேவலம், சகலம் ஆகிய இரண்டு நிலைகளிலும் ஆன்மா மலத்திற் கட்டுண்டு நிற்றலின், அந்நிலை பந்தம் எனப்படுகிறது. பந்தம் என்பதற்குக் கட்டு என்பது பொருள். பந்தம் என்ற வடசொல் பெந்தம் என்றாகிப் பின் பெத்தம் எனத் திரிந்து நின்றது.

## மல பரிபாகம்

உயிரை மூடி மறைத்திருக்கும் இருள் மலமாகிய ஆணவத்தை நீக்குதற் பொருட்டே இறைவனது திரோதான சத்தி மாயையையும், கன்மத்தையும் கூட்டுகிறது. அஃதாவது "உயிர் உலக வாழ்க்கையில் ஈடுபட்டு வினைகளைச் செய்து இன்ப துன்பங்களை நுகரும்படி செய்கிறது. திரோதான சத்தியால் தூண்டப்பெற்றுச் செயற்படும் ஆணவ மலம் உயிரறிவை விபரீத அறிவாகச் செய்து, கீழான உலகப் பொருள்களையே மேலான பொருளாக மதிக்கும்படி செய்கிறது.

இவ்வாறு எண்ணற்ற பிறவிகளில் ஆணவமலம் செயற்படுவதனால் அதன் சத்தி படிப்படியாக மெலிவடைகிறது. ஆணவ மலம் ஏனைய மாயை, கன்மங்களால் தேய்வடைந்து நீங்கும் நிலையை அடையும். இந்நிலையே மல பரிபாகம் எனப்படும். இது, கண்ணில் படர்ந்துள்ள படலம் பழுத்து மருத்துவரால் அறுத்து எறிதற்கேற்ற தகுதியை அடைந்து நிற்பது போன்றதாகும்.

## மாயேயம்

பார்க்க: மாயை

## மாயை

குடத்திற்குக் களிமண் மூலப் பொருளாவது போல இவ்வுலகிற்கு மூலப் பொருளாயிருப்பது மாயை என்னும் மிக நுண்ணிய பொருளாகும்.

அஃது அருவமாய் எங்கணும் விரிந்து பரந்து கிடப்பது. அதிலிருந்து தோன்றும் காரியமே உலகமும் உலகப் பொருள்களும்.

முதற் காரணமாகிய மாயை சுத்தமாயை என்றும் அசுத்த மாயை என்றும் இரு பகுதிப்பட்டு நிற்கும். சுத்த மாயை என்பது ஆணவம், கன்மம் ஆகியவற்றின் கலப்பில்லாமல் தூயதாய் நிற்கும் பகுதி. ஆணவம், கன்மம் ஆகியவற்றின் கலப்பினால் தூய்மையிழந்த பகுதி அசுத்த மாயையாகும்.

பொதுவாக, மாயை என்றாலே அஃது அசுத்த மாயைத்தான் குறிக்கும். சுத்தமாயையை விந்து என்ற சொல்லால் குறிப்பர்.

சுத்த மாயை தூயதாய், அசுத்த மாயையும் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு அதற்கு மேலாய் விரிந்து நிற்பது. அசுத்த மாயை சுத்தமாயையின் உள்ளே அடங்கி நிற்பது.

மாயையினின்றும் தோன்றும் காரியங்களை 'மாயேயம்' என்பர். அவை தனு, கரணம், புவனம், போகம் என்பன; தனு= உடம்பு; கரணம்= கருவி; புவனம்= உலகம்; போகம்= நுகர்ச்சிப் பொருள்.

## மும்மலம்

மலம் என்பது அழுக்கு. உயிரைப் பற்றியுள்ள அழுக்குகளாவன ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்றுமேயாம். அவையே மும்முலங்கள் எனப்படுகின்றன.

அவற்றுள், ஆணவ மலம் உயிர் என்று உண்டோ அன்றே அதனோடு இயற்கையாய் இயைந்து நிற்றலின் அதுவே முதல் தளையாகும். ஆடையிலுள்ள அழுக்கை நீக்குவதற்கு உவர் மண்

முதலில் பிற அழுக்குகளைச் சேர்ப்பது போல, ஆணவ மலமாகிய அழுக்கைப் போக்குவதற்கே கன்மம், மாயை என்ற இரண்டு அழுக்குகளைச் சேர்க்கிறான் இறைவன். கன்மமும், மாயையும் காரண நிலையில் என்றுமே இருப்பவையாயினும், காரிய நிலையில் அவை உயிரோடு வந்து பொருந்தியது இடையில் ஒரு காலத்திலேயாம். இதுபற்றியே அவை ஆகந்துக மலம் (ஒரு காலத்தில் வந்தது) எனப்படும்.

கன்ம மலம் உயிரறிவில் இன்ப துன்பங்களைத் தோற்றுவிக்கும். மாயா மலம், உயிர் இன்ப துன்பங்களை நுகருமாறு அவற்றுக்குச் சார்பாய் உள்ள தனு, கரண, புவன போகங்களைத் தந்து நிற்கும். ஆணவ மலம் உயிருக்கு 'நான்' எனும் முனைப்பையும், விருப்பு வெறுப்புக்களையும் உண்டாக்கி, இன்ப துன்பமாகிய போகத்தில் ஈடுபடுத்தும். இவ்வாறு மும்முலங்களும் தொடர்புற்று நிற்கும்.

ஆணவ மலம் உள்ளவரையில் ஏனைய இரு மலங்களும் நீங்காவாதலின், உயிர் பல வகைப் பிறப்புகளிற்பட்டு இன்ப துன்பங்களை அனுபவித்து வரும். ஆணவ மலம் நீங்கும் பொழுது ஏனைய மலங்களும் நீங்க, உயிர் பந்தத்தினின்றும் நீங்கி வீடு பேற்றினை அடையும்.

## மூவகைத் திருமேனிகள்

இறைவனுக்கு வடிவம் இல்லை. இதுவே அவனது உண்மை நிலை, ஆயினும் நூல்களில் அவனுக்குப் பலவகை வடிவங்கள் சொல்லப்படுகின்றன. அவன் தனக்கென்று வரையறுத்த ஒரு வடிவம் உடையவனாக இருந்தால், பலவகை உருவங்களைக் கொள்ளுதல் இயலாது அன்றோ? அவன் தனக்கென்று நியமித்த ஒரு வடிவம் இல்லாதவன் ஆதலால் எவ்வுருவத்தை வேண்டுகிறானோ அவ்வுருவத்தை வேண்டியவாறே கொள்வான் என்பது புலனாகும்.

வடிவம் இல்லாதவன் ஏன் வடிவம் கொள்ள வேண்டும் என்னும் வினாவுக்கு, உயிர்களின் பொருட்டே அவன் வடிவம் கொள்கிறான் என்பதே விடையாகும். உருவமற்ற நிலையை உயிர்களால் பற்ற முடியாது; மனத்தாலும் நினைக்க இயலாது. ஆகவே உயிர்கள் தன்னை உணர்ந்து உய்ய வேண்டும் என்னும் கருணையினாலேயே இறைவன் உருவங் கொள்ளுகின்றான்.

இறைவன் கொள்ளுகின்ற வடிவம், நம் உருவத்தைப் போல மாயையினால் ஆகியதன்று. சத்தியே அவனுக்கு வடிவமாய் அமையும்.

இறைவன் தனது சத்தியினால் கொள்ளும் வடிவம் மூன்று வகைப்படும். அவை உருவம், அருவம், அருவுருவம் என்பன. வடமொழியில் முறையே சகளம், நிட்களம், சகள நிட்களம் எனப்படும்.

உருவம் என்பது கண்ணுக்குப் புலப்படுவது. ஆயினும் கடவுளின் உருவம் நம் போன்றோர் கண்ணுக்குப் புலனாகாது. ஞானிகள் கண்ணுக்கே அது புலனாகும். அடியார்க்கு அருள்புரிய வரும் காலத்தில் இறைவன் கொள்வது இவ்வுருவத் திருமேனியேயாகும்.

அருவம் என்பது கண்ணுக்குப் புலனாகாதது; ஆயினும் வரம்புபட்டு நிற்பது.

அருவுருவம் என்பது ஒளிப்பிழம்பாய் நிற்பது; உயர்ந்தோர் காட்சிக்குப் புலனாவது; கை, கால் முதலிய உறுப்புகள் இல்லாதது. இலிங்க வடிவமே அருவுருவத் திருமேனியாகும்.

சத்தி என்பது அருளேயாதலின், இறைவனது திருமேனிகளும், அவற்றில் அமைந்த ஆடை, அணிகலன், படைக்கலம் முதலியனவும், அவன் எழுந்தருளியிருக்கும் இடமும் ஆகிய எல்லாம் அருளேயன்றி வேறில்லை.

## யோகம்

பார்க்க. சிவபுண்ணியம்

## வாக்கு

நமக்கு உலகப் பொருள் பற்றிய அறிவு, மொழியின் துணையினாலேயே உண்டாகிறது. சைவ சித்தாந்தத்தில் மொழியைச் சொல்லுலகம் என்பர்.

சொல்லுலகமாவது எழுத்துக்களும், எழுத்துக்களால் ஆகிய சொற்களும், சொற்றொடர்களும் ஆகும். எழுத்துக்கள் வன்னம் எனப்படும். சொற்கள் பதம் எனப்படும். சொற்றொடர் மந்திரம் எனப்படும். இவ்வாறு வன்னம், பதம், மந்திரம் எனச் சொல்லுலகம் அமையும்.

இச்சொல்லுலகமே வாக்கு எனப்படும். அது சூக்குமை, பைசந்தி, மத்திமை, வைகரி என நால் வகையாய் நிற்கும். ஒன்றைவிட ஒன்று பருமையாய் வளர்ச்சியடைந்த வடிவங்களே இவை எனலாம்.

அறிவுக்குக் காரணமாகிய வாக்கு சுத்தமாயையிலிருந்தே தோன்றும். முதலில் சுத்த மாயையின் ஒரு பகுதி, பின்னர் சொல்வடிவாய் வளர்வதற்கேற்ற தகுதியைப் பெற்று நிற்கும். இவ்வாறு

சுத்த மாயை நிற்கும் நிலையே சூக்குமை வாக்கு எனப்படும். இதனையே நாதம் என்றும் கூறுவர்.

சூக்குமை வாக்கு வளர்ச்சியடைந்து, பைசந்தி வாக்கு ஆகும். இதில் சொல் வடிவம் சிறப்பு வகையில் விளங்காது பொதுவாக விளங்கி நிற்கும். பைசந்தி என்பதற்கு விளங்குவது என்று பொருள். சொல்வடிவம் அறவே விளங்காத நிலையே சூக்குமை வாக்கு. அது போலின்றி இஃது ஒருவாறு விளங்கி நிற்கும் நிலை யாதலின் இப்பெயர் பெற்றது.

பொதுவாக விளங்கி நின்ற பைசந்தி வாக்கு மேலும் வளர்ச்சியடைந்து, சொல் வடிவம் சிறப்பாக விளங்கப்பெற்று கழுத்தினிடத்தில் மெல்ல ஒலித்து நிற்பது மத்திமை வாக்கு ஆகும்.

வைகரி வாக்கு என்பது, கழுத்து அளவில் மெல்ல ஒலித்த சொற்கள் பல், நா, உதடு முதலிய உறுப்புகளின் தொழிற்பாட்டால் நன்கு வெளிப்பட்டு, சொல்வோன் செவிக்கும் கேட்போர் செவிக்கும் புலனாகி நிற்பது. வைகரி என்பதற்கு விகாரம் உடையது, வேறுபட்டு நிற்பது என்பது பொருள். வெவ்வேறு சொற்களாய் வேறுபட்டு வெளிப்படுதலின் வைகரி வாக்கு எனப்பட்டது.

எல்லா வகை உயிர்களுக்கும் பொருளைப் பற்றிய சிறப்புணர்வு உண்டாவதற்கு இவ்வாக்குகள் இன்றியமையாதது வேண்டப்படுவன வாகும்.

## விஞ்ஞானகலர்

பார்க்க: உயிர்

## வினை

வினை எனினும், கன்மம் எனினும் ஒன்றே. இந்திய சமயங்கள் பலவும் வினை உண்மையை ஒப்புக் கொள்கின்றன. கடவுளை ஏற்றுக்கொள்ளாத சமயங்கள் கூட வினையை உடன்படுகின்றன என்பது நோக்குதற்குரியது.

சைவ சிந்தாந்தம் வினை பற்றிய அடிப்படையாக நான்கு உண்மைகளை அமைத்துக் கொள்கிறது.

அவை செய்வான், செய்வினை, வினைப் பயன், சேர்ப்பான் என்பவை.

செய்வான்=உயிர்.

செய்வினை=மனம், மொழி, மெய் என்னும் மூன்றினாலும் செய்யும் நல்வினை, தீவினைகள்.

வினைப்பயன்=செய்த வினையினால் விளையும் பயன்கள்.

சேர்ப்பான்=வினை சடம் ஆதலால் அது தானே தன்னைச் செய்தவனைச் சென்று அடையாது. எல்லாம் வல்ல இறைவனே அவரவர் செய்த வினைப் பயனைக் காலம் அறிந்து, இடம் அறிந்து ஊட்டுவான்.

இப்பொழுது செய்கின்ற வினைகள் ஆகாமியம் எனப்படும். செய்த வினைகள் அழியாமல் நுட்பமாய் நிலைபெற்று நிற்கும் பொழுது சஞ்சிதம் எனப்படும். அவற்றுள் பக்குவப்பட்ட வினைகள் இன்ப துன்பங்களாய் வந்து பயன்தருங்காலத்தில் அவை பிராரத்தம் என்னும் பெயரைப் பெறும். பிராரத்த வினையையே ஊழ் என்று சொல்கிறோம்.

எனவே, ஆகாமியமாகச் செய்யப்பட்ட வினைகள் சஞ்சிதமாகக் கிடக்கும். அவற்றுள் பயன்தரத் தக்கவை பிராரத்தமாய் வர, அவற்றை நுகர்தற்கேற்ற பிறவியை உயிர்கள் அடைந்து அனுபவிக்கும். அவ்வாறு பிராரத்த வினையை அனுபவித்து முடித்தவுடன் அப்பிறவி நீங்கி மற்றொரு பிறவியிற் செல்லும்.

உயிர் செய்கின்ற முயற்சியின் வழியாகவே பிராரத்த வினை புகுந்து இன்ப துன்பமாகிய பயனைத் தரும். அம்முயற்சியால் புதிய வினைகளாகிய ஆகாமியம் ஏறும். அதனால் சஞ்சிதம் அளவின்றிப் பெருகும். இவ்வாறு வினையால் பிறப்பும், பிறப்பால் வினையும் இடையீடின்றித் தொடரும்.

சமணம், பௌத்தம் போன்ற சமயங்கள் வினைக்கு முதன்மை கொடுக்கின்றன; வினை முழுவதையும் அனுபவித்தே கழிக்க வேண்டும் என்கின்றன. சைவ சமயம் திருவருளுக்கு முதன்மை கொடுக்கிறது. திருவருளின் துணையால் வினை வலியை நீக்கிக் கொள்ளலாம் என்பதை வற்புறுத்துகிறது.

## வீடுபேறு

முத்திநிலை தமிழில் வீடு பேறு என வழங்கப்படும். இதில் வீடு, பேறு என்ற இரு சொற்கள் உள்ளன. விடுதல் வீடு; பெறுதல் பேறு. விடுதலாலது பாசத்தை நீக்குதல், பெறுதலாவது சிவத்தைச் சார்தல். பாசநீக்கமும் சிவப் பேறுமாகிய இவையே உயிர் அடைதற்குரிய முடிநிலைப் பயன்களாகும்.

## இன்புறுதல்

பார்க்க: சித்தாந்த முத்தி

# ஜப்பானின் பண்பு

**ஜ**ப்பானின் வளர்ச்சிக்கு அந்த நாட்டு மக்கள் தான் முக்கியக் காரணம். நாடு பரந்து கிடக்கிறது. மக்கள் தொகையும் அதிகம். ஆயினும் தேச விசுவாசத்தில், நாட்டுப் பற்றில் அவர்கள் ஓர் ஒருங்கிணைக்கப்பட்ட சமுதாயம். அவர்களுடைய கல்வியில் தொழிலுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது. எந்தத் தொழிலையும் அவர்கள் சின்னத்தனமாக எண்ணவில்லை. மற்ற நாட்டவர்களின் கண்டுபிடிப்பை நல்ல விலைகொடுத்து வாங்குகிறார்கள். சீக்கிரத்திலேயே அதில் அபிவிருத்தி செய்து கண்டு பிடித்த நாட்டைக் காட்டிலும் உயர்ந்துவிடுகிறார்கள்.

கம்ப்யூட்டரைக் கண்டு பிடித்தவை மேலை நாடுகள். இன்று அதிகமான நவீன கம்ப்யூட்டர்களைத் தயாரித்து உலச் சந்தையைப் பிடித்துவிட்டது ஜப்பான்.

ரோபட் என்று சொல்லப்படும் இயந்திர மனிதனைக் கண்டு பிடித்தது அமெரிக்கா. இன்று ரோபட்டுகளை அதிகமாகத் தயாரித்து நடைமுறையில் உபயோகிப்பது ஜப்பான்.

ரேடியோ, வீடியோ, டெலிவிஷன் போன்றவற்றை எல்லாம் யார்யாரோ கண்டு பிடிக்க, அவைகளைப் புதுமைப்படுத்தி, அபிவிருத்தி செய்து பல இலட்சக்கணக்கில் உலகம் முழுவதும் பரவவிட்டிருப்பது ஜப்பான்.

இப்படி இன்னும் எத்தனையோ உதாரணங்கள் சொல்லிக் ொகண்டு போகலாம்.

அவர்கள் கடுமையாக உழைக்கிறார்கள்; ஒற்றுமையாகச் செயல்படுகிறார்கள்.

கட்டுப்பாட்டுடன் முழுமனப்பான்மையோடு எடுத்த காரியத்தில் காண்ணும் கருத்துமாக ஈடுபடுகிறார்கள்.

கற்றது கைம்மண் அளவு; கற்கவேண்டியது உலகளவு. இது நம்முடைய பழமொழி. இதை நாம் மறந்து விட்டோம். ஜப்பானியர்கள் மறக்கவில்லை. தெரியாதவற்றைத் தெரிந்து கொள்ள ஆசைப்படு கிறார்கள். தெரிந்தது போல் நடிக்கவில்லை. தெரியாது என்று சொல்ல வெட்கப்படவில்லை. வல்லுநர்கள் கூடத் தங்களுக்குக் கீழே பணிபுரிவர்களை ஆலோசித்து முடிவு எடுக்கிறார்கள். இது நல்ல பண்பல்லவா?

தான் வேலை செய்யும் நிறுவனத்தின் இலாபத்திலும் நஷ்டத்திலும் தொழிலாளர்கள் பங்கு கொள்ளுகிறார்கள் எப்படி? இலாபம் வந்தால் போனஸ் பெறுகிறார்கள். நஷ்டம் வந்தால் அந்த நிறுவனத்தை விட்டு விட்டு ஓடிவிடுவதில்லை. சம்பளத்தைக்கூட குறைத்து வாங்கிக் கொண்டு, கடுமையாக உழைத்து, நிறுவனத்தின் வருமானத்தைப் பெருக்கி இலாபத்துக்குக் கொண்டுவருகிறார்கள். இந்த நல்ல பண்பை நாம் ஏன் பின்பற்றக்கூடாது?

எப்படி நம் குழந்தைகள் இது என்னுடைய பள்ளிக்கூடம் என்று சொல்லிப் பெருமைப் பட்டுக் கொள்கிறார்களோ அதே போல் ஒவ்வொரு ஜப்பானியத் தொழிலாளியும் இது என்னுடைய நிறுவனம் என்று சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்கிறான். நம் தொழிலாளியும் ஏன் இப்படிப் பெருமைப்பட்டுக்கொள்ளக் கூடாது? நம்முடைய முதலாளிகள் ஏன் அந்த நிலையை உருவாக்கக் கூடாது?

அங்கு அரசாங்கம் மக்களும் ஒரு நிறுவனத்தின் பங்குதாரர்கள் போல் நாட்டை நிர்வகிக்கிறார்கள். ஒருவரைக் கண்டு மற்றவர் அஞ்சவில்லை பொறாமைப்படவில்லை. உதாரணமாக, ஒரே தொழிலில் ஈடுபட்டிருக்கும் சிறிய நிறுவனங்களை ஒருங்கிணைத்துப் பெரிய நிறுவனங்களாக்க அரசு ஆலோசனை கூறுகிறது. ஒத்துழைக்கிறது, உதவுகிறது, ஆதரவும் தருகிறது.

சிறு துளிகள் ஒன்று சேருகிறபோது பெரும் வெள்ளமாகிறது. ஒருங்கிணையாவிட்டால் சிறு துளிகள், சிறு துளிகள் தாம். அவை பலமற்றவையாகத் தான் இருக்கும்.

இதை உணர்ந்துதான் நம் தலைவர்கள், இந்திய வம்சாவழியி னரிடம் பரவலாகச் சிதறிக்கிடக்கின்ற சிறுசிறு மூலதனங்களைத் திரட்டிப் பெரிய நிறுவனங்களை உருவாக்கினார்கள். தொடர்ந்து உருவாக்கி வருகிறார்கள். உதாரணம் துன் சம்பந்தனால் உருவாக்கப்பட்டதேசிய நில நிதிக் கூட்டுறவுச் சங்கம், டான்ஸ்ரீ மாணிக்கவாசகத்தால் ஆரம்பிக் கப்பட்ட நேசா கூட்டுறவுச் சங்கம், ம.இ.கா. யூனிட்டிரஸ், ட்டாத்தோ சாமி வேலுவால் தொடங்கப்பட்ட தொழிலாளர் மேம்பாட்டுக் கூட்டுறவுக் கழகம், மைக்கா ஹோல்டிங் கம்பெனி போன்றவையாகும்.

ஒரே நிறுவனத்தில் வேலைசெய்யும் இருவர், அவர்களுக்கிடையே உள்ள சொந்தத் தகராறு காரணமாக, நிறுவனம் நஷ்டமடையவோ, சிரமத்துக்குள்ளாக்கவோ ஒரு போதும் முயலுவதில்லை. நான் பெரியவன், நீ சிறியவன் என்ற பேச்சுக்கே இடம் கிடையாது. அனைவரும் நிறுவனத்திற்கு முன் சிறியவர்கள் தாம். நிறுவனம்தாம் பெரியது. இந்த நல்ல சிந்தாந்தத்தை நாம் ஏன் பின்பற்றக் கூடாது?

தாங்கள் செய்யும் தொழிலைப்பற்றி அவர்கள் பெருமைப்படு கிறார்கள். ஏதோ கடனுக்காக, இது என் தலைவிதி என்று வெறுப்போடு வேலை செய்வதில்லை; ஆர்வத்தோடு உழைக்கிறார்கள். சாதாரண உடல் உழைப்புத் தொழிலாளி அவன் செய்யும் வேலையைப் பற்றி பெருமையாகப் பேசுகிறான். அதே ஆர்வத்துடன் தான் கம்பெனியின் உயர் அதிகாரியும் பேசுகிறார்.

ஒரு கம்பெனியின் உயர் அதிகாரியும், அதன் சாதாரண குமாஸ்தாக்களும் கூட வேலை முடிந்ததும் ஒன்றாக மதுபானம் அருந்துகிறார்கள். வேலை முடித்தவுடன் அவர்களிடையே ஏற்றத்தாழ்வு கள் கிடையாது. ஒருவேளை அவர்களிடையே ஏற்றத்தாழ்வுகளைக் காணவேண்டுமென்றால் அதிகம் குனிந்து வணக்கம் செலுத்துபவர் பதவியில் குறைந்தவர்; சிறிது குனிந்து வணக்கம் செலுத்துபவர் பதவியில் உயர்ந்தவர்! இவ்வளவுதான் ஏற்றத்தாழ்வு! எவ்வளவு நல்ல பண்பு இது! ஏன் நமது அதிகாரிகளும் அவர்களுக்குக் கீழே உள்ளவர்களும் வேலை முடிந்தவுடன் சமமாகப் பழகக் கூடாது?

*நன்றி : பினாங்கில் வாழும் கல்லல்*
*டத்தோ சுப்பையா செட்டியார் மணிவிழா மலர்*



# விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழகு எறிப்பப்

பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சில் குடிகொண்ட நீல மேனியும்

நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்

சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே
முப்பழம் நுகரும் மூஷிக வாகன
இப்பொழு தென்னை ஆட்கொள வேண்டித்

தாயாய் எனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதலைந் தெழுத்தும் தெளிவாய்ப்
பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து

குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே

உவட்டா உபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணை இனிதெனக் கருளி

கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து
இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து
தலமொரு நான்கும் தந்தெனக்கு அருளி
மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே

ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி
ஆறா தாரத்து அங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை அறுத்தே

இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையில் சுழிமுனைக் கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்

குண்டலி அதனில் கூடிய அசைவை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே

அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச் சக்கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற் சக்கரத்தின் உறுப்பையுங் காட்டி

சண்முக தூலமும் சதுர்முக சூட்சமும்
எண்முக மாகஇனி தெனக்கு அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரியெட்டு நிலையும் தெரிசனப் படுத்திக்

கருத்தினில் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக் கருளி
என்னை அறிவித்து எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து

வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே எந்தன் சிந்தை தெளிவித்து
இருள்வெளி இரண்டுக்கும் ஒன்றிடம் என்ன
அருள்தரும் ஆனந்தத்து அழுத்தியென் செவியில்

எல்லை யில்லா ஆனந்தம் அளித்து
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கங் காட்டி

அணுவிற் கணுவா யப்பாலுக் கப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய் தொண்டர் குழாத்துடன் கூட்டி

அஞ்சக் கரத்தி னரும்பொருள் தன்னை
நெஞ்சக் கருத்தின் நிலைய றிவித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.

**ஔவையார்**

○



